KALKI
18.10.87
ரூ. 2.

# கல்கி



## தீபாவளி ரிலீஸ் திரைப்படங்கள்

# தீபாவளி ரிலீஸ் திரைப் படங்கள்!

அலசல்:



### இளையராஜா மூட் அவுட்!

**மனிதன்**

ஏ வி எம்., ரஜினிகாந்த், எஸ். பி. முத்துராமன் காம்பினேஷனில் வரும் படம் என்பதால், இது இன்னொரு வழக்கமான மசாலாவாகத்தான் இருக்கும் என்பது ரசிகர்களின் எதிர்பார்ப்பு—ஹீரோயின் ரூபிணி. திருடன் ஒருவன் மனம் திருந்துவதுதான் கதை. இளையராஜா, இசையமைக்க மாட்டேன் என்று ஏதோ மூட் அவுட் ஆகி மறுக்க, இசையமைக்கும் வாய்ப்பு சந்திரபோஸுக்குப் போனது.

### இறக்குமதி ஹீரோயின்

**நாயகன்**

மௌன ராகத்துக்கு விருது வாங்கிய மணிரத்தினம் உருவாக்கும் இந்தப் படம், ஏக எதிர்பார்ப்புகளைத் தூண்டி விட்டுள்ளது. பம்பாயிலிருந்து இறக்குமதியான சரண்யா தான் ஹீரோயின். சென்னையிலிருந்து வேலை தேடி பம்பாய் போகிற இளைஞனின் கதை. மூன்று வெவ்வேறு விதமான பாத்திரங்களில் ,தோன்றுகிறார் கமல். 62 ஆம் வருஷத்திலிருந்து 86 வரை கதை நடப்பதால், 62 ஆம் வருடம், பதிவு செய்தால் எப்படி இருக்குமோ அதே பாணியில் ஒரு பாடல் வருகிறது! இந்தப் பட த்தில் வசனகர்த்தாவாக அறிமுகமாகிறார் பாலகுமாரன்.

### தமிழ் நக்ஷதங்கள்.

**பூக்கள் விடும் தூது**

ஜீஜியின் கணவர் ஸ்ரீதர் ராஜனின்

• உழவன் மகன்



• நாயகன்



• வேதம் புதிது

இயக்கத்தில் தயாராகியுள்ள படம். மோனிஷாவுக்குச் சிறந்த நடிகை விருது வாங்கித் தந்த 'நக்ஷத்ரங்கள்' மலையாளப் படத்தின் தமிழ் வார்ப்பு. மலையாளத்தில் நடித்த பாத்திரத்தை மோனிஷா தமிழிலும் ஏற்று நடித்துள்ளார். இரண்டு பெண்கள் ஒரே ஆளைக் காதலிக்க, முடிவில் காதல் நிறைவேறுது போவதுதான் கதை.

## மனம் மாறிய நதியா

## இனிய உறவு பூத்தது

ஸ்ரீதர் — இளையராஜா காம்பினேஷனில் நதியா, சுரேஷ் நடித்துள்ள படம். பாலு மகேந்திரா படத்தில் முன்னர் கர்ப்பிணி வேடத்தில் நடிக்க மறுத்த நதியா, இதிலே கர்ப்பிணியாய் நடிக்கிறார். தம்பதிகளுக்குள் மனஸ்தாபம் ஏற்படுவதைப் பற்றிய கதை. 'ஹெவன்லி பாடீஸ்' என்ற ஆங்கிலப் படத்தின் டைட்டில் பாடல் பாணியில் இளையராஜாவின் இசையமைப்புப் பாடல் தான் என்கிறார்கள். 'காதலிக்க நேரமில்லை' பாணியில் தற்காலச் சூழ்நிலையில் ஒரு படம்' என்கிறார் டைரக்டர் ஸ்ரீதர்.



• பூக்கள் விடும் தூது

## ரேகா ரேஸுக்காகவே...

## உழவன் மகன்



• புயல் பாடும் பாட்டு

இரட்டை வேடத்தில் விஜயகாந்த் நடித்துள்ள ஒரு பிரம்மாண்டமான தயாரிப்பு. ராதிகா, ராதா இருவரும் ஹீரோயின்கள். (ராதா கவர்ச்சியாய் நடித்துள்ளதாய் சினிமாத் துறையில் கிசுகிசுப்பு) மாட்டுக்கார வேலன் பாணிக் கதை. கிராமத்தில் தம்பியைக் கொன்றவர்களை, அண்ணன் பட்டணத்தில் பழிவாங்குகிறான். ஊமை விழிகள் யூனிட், சிரத்தையுடன் பணியாற்றியுள்ள இந்தப் படத்தில் இரட்டை விஜய்காந்த் வரும் 'மாஸ்க்' ஷாட்களும், ரேகா

ரேஸ் காட்சியும் நிச்சயம் பாராட்டும்படி இருக்கும் என்கிறார் 'ரஷ்'களைப் பார்த்த ஒருவர்.

## தலை காட்டும் புள்ளிகள்

### மனதில் உறுதி வேண்டும்

கே. பி. யின் டைரக்ஷனில் கதாநாயிகிக்கு முக்கியத்துவம் தந்து எடுக்கப்பட்டுள்ள படம். வாழ்க்கையில் விரக்தியடைந்த பெண், எப்படி வாழ்க்கையைத் துணிச்சலுடன் சந்திக்கிறாள் என்பதுதான் கதை. ஸ்ரீபிரியாவின் தம்பி, டிஸ்கோ சாந்தியின் தங்கை என்று இரண்டு புதுமுகங்களை அறிமுகப்படுத்தியுள்ளார் டைரக்டர் பாலசந்தர். கமல், ரஜினி, விஜய்காந்த், சத்யராஜ் என்று பிரபல புள்ளிகள் பலர் தலையைக் காட்டுகிறார்கள்.



ராஜ் சவுண்டருக்கு ஜோடி சரிதா. மகாகவி பாரதியாரின் ஸ்டைலில் வேற்று ஜாதிச் சிறுவனைப் பூணூல் போட்டுப் பிராமணனாக்கும் புரட்சிக் கதை. ஒரு நாடகப் போட்டியில் பரிசு வாங்கின கதையாம் இது. காதலும் உண்டு. வைரமுத்து பாட்டெழுதினால் நான் இசையமைக்க மாட்டேன் என்று இளையராஜா முரண்டுபிடிக்க, எனக்கு வைரமுத்துதான் முக்கியம் என்று சொல்லி, தேவேந்திரனை இசையமைக்கச் சொன்னார் பாரதிராஜா. கதை டிஸ்கஷனின் போது தம் ஸ்டார்களான பாக்யராஜ், ரங்கராஜ், மனோபாலா, மணிவண்ணன் ஆகியோரையும் அழைத்து வைத்துக் கொண்டு சீரியஸாய் அலசியிருக்கிறார் பாரதிராஜா.

## அரை சதம் காணும் பிரபு

### இவர்கள் வருங்காலத் தூண்கள்

மேடையிலிருந்து திரைக்கு வந்த இன்னொரு டைரக்டரான வெங்கட்டின் படம்.



* இவர்கள் வருங்காலத் தூண்கள்



## மீண்டும் பரபரப்பு...

### சட்டம் ஒரு விளையாட்டு

நீதிக்குத் தண்டனையை அடுத்து கலைஞர், எஸ். ஏ. சந்திரசேகர் இணைந்து உருவாக்கியுள்ளது. விஜய்காந்த்தான் ஹீரோ. ஹீரோயின் ராதா. இப்படம் அரசியலிலும் சட்டத் துறையிலும் மறுபடி ஒரு பரபரப்பை ஏற்படுத்தும் என்று எதிர்பார்க்கப்படுகிறது.

## வைரமுத்துவே வேண்டும்!

### வேதம் புதிது

சாருஹாச ஐயரின் மகள் அமலா. சத்ய



† சட்டம் ஒரு விளையாட்டு



* மனதில் உறுதி வேண்டும்

இவர்கள் வருங்காலத் தூண்கள். படத்துக்கு இசை டி. ராஜேந்தர். கல்லூரி மாணவர்கள் எப்படி அருவெசிய கலாட்டாக்களால் வாழ்க்கையைப் பாழடித்துக் கொள்கிறார்கள் என்று சொல்லும் வழக்கமான கதை. ஜெய்சங்கர், பிரபு, அம்பிகா இதில் நடித்துள்ளனர். பிரபுவுக்கு இது ஐம்பதாவது படமாம்.

## பாலைவனத்துக்குப் பிறகு…

### புயல் பாடும் பாட்டு

பிராணயாமம் என்ற மலையாளப் படம் தமிழில் கலைஞரின் பொறி பறக்கும் வசனத்தில் உருப்பெற்றுள்ளது. டைரக்‌ஷன் மணிவண்ணன். இது பாலைவன ரோஜாக்களின் இரண்டாம் பாகம். பாலைவன ரோஜாக்களில் கடைசியில் பத்திரிகை ஆசிரியர் இறக்க, அவர் தங்கை, பத்திரிகையின் ஆசிரியர் பொறுப்பேற்பது நினைவிருக்கும். பா. ரோஜாக்களில் தங்கை பாத்திரத்தில் நடித்த நளினி இதில் நடிக்காததால், ராதிகா அந்த வேடத்தை ஏற்றுள்ளார். போதைப் பொருள்களுக்கு அடிமையாகும் மாணவர்களைப் பற்றி ராதிகா பத்திரிகையில் ஒரு புலனாய்வுக் கட்டுரை எழுத, மாணவர்கள் சஸ்பெண்டு செய்யப்படுகிறார்கள். அதற்குப் பழிவாங்கும் எண்ணத்துடன், ராதிகாவை மாணவர்கள் கடத்திக் கொண்டு போக, அவர்களை ராதிகா திருத்தும் திருப்பங்கள் நிறைந்த கதை.

## அப்பா, அம்மா பிரச்னை

### கல்யாணக் கச்சேரி

மணிவண்ணனின் டைரக்‌ஷனில் உருவாகியுள்ள ஒரு காமெடிப் படம். அர்ஜுன்



* இனிய உறவு பூத்தது

— இளவரசி ஜோடி. இந்த இளம் ஜோடியின் அப்பா, அம்மாக்களால் எத்தனை பிரச்னைகள் முளைக்கின்றன என்று நகைச்சுவையாய் வளர்கிற கதை.

## குணசித்திர 'சில்க்'

### பூவுக்குள் பூகம்பம்

தீபாவளிக்கு வரும் என்று எதிர்பார்க்கப்படும் இந்தப் படத்துக்குக் கதை, திரைக்கதை, டைரக்‌ஷன் எல்லாம் — தியாகராஜனே. தயாரிப்பாளரும் அவரே. ஒரு ராணுவ அதிகாரியின் வாழ்க்கை பற்றிய கதை. குடும்ப சென்ட்டிமென்டுகளும் உண்டு. சென்னை தவிர ஆக்ரா, தில்லி, ஸ்ரீநகர் போன்ற பல இடங்களிலும் உள்ள இந்திய ராணுவ முகாம்களில் படப்பிடிப்பு நடத்தப்பட்டது. கதாநாயகி: பார்வதி என்கிற பம்பாய்ப் புதுமுகம். பல வருடங்களுக்குப் பின் சரோஜாதேவி நடிக்கும் தமிழ்ப் படம்! சில்க்குக்கு இதிலே குணச்சித்திர வேடமாம்!

## பா. ராஜன் பாணி நகைச்சுவை

### ஆயுசு நூறு

இதிலே பாண்டியராஜனுக்குக் கிராமத்து

டாக்டர் ரோல். ஜவுளிக் கடைக்கார பாண்டி யன், பண்ணை வீட்டு வேலைக்காரி ரஞ்சனி ஆகியோருக்காகப் பா. ரா. தியாகம் செய் கிறார் தம் காதலை. மிஷேலிக் டி. ஆர். ஏட்டிக்கி போட்டியில் மொபெட்டை வைத்துக் கொண்டு நடித்தது போல இதிலே சைக் கிளை வைத்துக் கொண்டு கூத்தடிக்கிறார் பாண்டியராஜன்.

* ஆயுசு நூறு





* கல்யாணக் கச்சேரி



* பூவுக்குள் பூகம்பம்



* நேரம் நல்லா இருக்கு

## வி. வி. ஐ. பி. கதாநாயகன்

### நேரம் நல்லா இருக்கு

இன்றைய அரசியலின் வி. வி. ஐ. பி. யான ஒருத்தர் பற்றின படம். ஆமாம், கள்ளச் சாராயம்தான் ஹீரோ. இது எப்படி சமுதா யத்தைப் பாதிக்கிறது என்று காட்ட, டாகு மெண்டரி வாடை இல்லாமல், ஜனரஞ்சக மசாலாவோடு எடுக்கப்பட்ட படம். ராம ராஜன், நிஷாந்தி ஜோடி. செந்தில், ஜனக ராஜ் நகைச்சுவை. இந்தக் குறைந்த பட்ஜெட் படத்தில் தேவர் ஸ்டைலில் ஒரு மாடும் உண்டு!

— மௌஷ்மி

மேலட்டையில்: 'நாயகன்' திரைப்படக் காட்சிகள்.

வண்ணப்படங்கள்:

முரளி சுரேஷ்

# வேடிக்கைகளுக்கு வறட்சி இல்லை!

பிரதமராகும் ஆசை எனக்குத் துளியும் இல்லை. ஆனால் அதுவே மக்களின் விருப்பமாக இருந்தால், அதை நிறைவேற்றுவதற்காகப் பிரதமர் பொறுப்பேற்கத் தயங்க மாட்டேன்!

(ஆந்திர முதல்வர் என். டி. ஆர். — 18.9.87 தினமலர்)

— ஒட்டன்சத்திரம். எ. அன்புக்குமரன்.

கடந்த செப்டம்பர் 15 ஆம் தேதி, திண்டுக்கல்லில் நடந்த குழந்தைகள் நல வார விழாவில் அமைச்சர் கே. கே. எஸ். எஸ். ஆர். ராமச்சந்திரன் கலந்து கொண்டார். விழா காலை ஒன்பது மணிக்குத் துவங்குவதாக இருந்ததால், அமைச்சரை மலர் தூவி வரவேற்பதற்காகச் சிறுமிகள் எட்டு மணியிலிருந்தே நின்று கொண்டு காத்திருந்தனர். ஆனால் அமைச்சர் வந்ததோ மதியம் 1.40க்கு. சுட்டெரிக்கும் வெயிலில் வாடிப் போய்விட்டார்கள் அந்தச் சிறுமிகள்.

விழாவில் பேசிய அமைச்சரோ, "கடும் வெயிலில் சிறுமிகளும் தாய்மார்களும் வெறுங் காலுடன் நடக்கக் கூடாது என எண்ணியதால்தான் எம். ஜி. ஆர். இலவசக் காலணித் திட்டத்தைக் கொண்டு வந்தார்" என்று குறிப்பிட்டார். கேட்ட நமக்கு வேதனை கலந்த சிரிப்புத்தான் வந்தது.

(ஜூனியர் விகடன் 30.9.87)

— ஸ்ரீவைகுண்டம். எஸ். ஜெயலட்சுமி.

மழை பெய்ய வேண்டும் என்பதற்காகத் திருத்துறைப் பூண்டியை அடுத்துள்ள மகாராஜபுரம் முத்துமாரியம்மன் கோவிலில், இரண்டு கழுதைகளுக்குத் திருமணம் செய்து வைக்கப்பட்டது. திருமணத்திற்குப் பஞ்சாயத்துத் தலைவரும் கோவிலின் பரம்பரை டிரஸ்டியுமான ஆர். எம். முருகையன் தலைமை வகித்தார்.

(தினத்தந்தி 6.9.87)

—புதுக்கோட்டை, எஸ். உஷாராணி.

உப்பிலியாபுரம் தொகுதி எம். எல். ஏ. (அ. தி. மு. க.) திருமதி சரோஜா, ஊரின் பிரதானக் குடிநீர்க் குழாயிலிருந்து அனுமதி ஏதும் வாங்காமல் தமது வீட்டுக்குக் குடிநீர் இணைப்புச் செய்திருந்தார். அதைக் கண்டு வெகுண்ட ஊர் மக்கள் அனைவரும் ஒன்று திரண்டு வந்து அதைத் துண்டிப்புச் செய்தனர்!

(இந்தியன் எக்ஸ்பிரஸ் 28.9.87)

— சென்னை — 33. வி. சுபா.

திருவனந்தபுரம் அருகில், ராஜன் என்ற வாலிபர் ஒரு சலூனுக்கு முடிவெட்டிக் கொள்ளச் சென்றார். பாதி வெட்டப்பட்ட நிலையில் இரவு ஏழு மணியாகிவிட்டபடியால், கேரளாவில் அமலிலுள்ள மின்வெட்டுநேரப்படி மின்சாரம் துண்டிக்கப்பட்டது. பிறகு எட்டு மணிக்கு மின்சாரம் வந்ததும் அந்த வாலிபருக்கு மீண்டும் முடிவெட்ட ஆரம்பிக்கப்பட்டது. எனினும் இரவு எட்டு மணிக்கு மேல் கடைகளுக்கு மின்சாரம் வழங்கப்பட மாட்டாது என்பதால் மீண்டும் மின்சாரம் துண்டிக்கப்பட்டுவிட்டது! வேறு வழியின்றி அந்த வாலிபர் முக்காடு போட்டுக் கொண்டே வீட்டுக்குப் போய், அடுத்த நாள் காலை வந்து முடி வெட்டிக் கொள்ள வேண்டியதாயிற்று!

(மாலை முரசு 22.9.87)

— கொட்டாரம். ஏ. வி. சண்முகம்.

மும்பாயிலுள்ள ஒரு நீதிமன்றத்தில், ஒரு போலீஸ்காரர் தாம் கொண்டு வந்திருந்த தானியங்கிக் கைவிலங்கை ஒரு ஜன்னலில் வைத்து விட்டு டீ குடிக்கச் சென்றிருந்தார். அந்த விலங்கைப் பார்த்த ஒரு வக்கீல் அதை எடுத்துப் பார்க்க ஆசைப்பட்டு, எடுத்துத் தம் கையில் வைத்துக் கொண்ட போது, அந்த விலங்கு தானாகவே பூட்டிக் கொண்டு விட்டது. அதனால் மிகவும் வெட்கப்பட்டுத் தவித்துக் கொண்டிருந்தார் வக்கீல். அவர் விலங்குடன் நிற்பதைக் கண்ட புதியவர்கள், அவரை ஒரு கைதியாக நினைத்துப் பயந்து ஒதுங்கிச் செல்ல, பழக்கமானவர்களோ ஓர் அனுதாபத்துடன் அவரைப் பார்த்துவிட்டுச் சென்றார்கள். பிறகு ஒரு வழியாக அந்தப் போலீஸ்காரர் வந்தபோது, அவரிடம் நடந்ததை அசடு வழியக் கூறி விலங்கை அகற்றிக் கொண்டார் வக்கீல்.

(தினசரி 20.9.87)

— மதுரை — 18. பி. கே. மூர்த்தி.

மதுராந்தகம் கோர்ட்டில் மிகவும் சூடாகக் குறுக்கு விசாரணை நடந்து கொண்டிருந்த போது, திடீரென்று அங்கிருந்த மின்சார சுவிட்ச் போர்டில் தீப்பிடிக்க ஆரம்பித்தது. உடனே அனைவரும் கூச்சலிட்டுக் கொண்டு பயந்து ஓடிய போது, சொக்கலிங்கம் என்ற வக்கீல் தம்மிடமிருந்த ஃபைலைக் கொண்டு அதை அணைத்தார். கடைசியில் "குறுக்கு விசாரணையின் சூடு தாங்க முடியாமல்தான் தீப்பிடித்துவிட்டது போலும்!" என்று நீதிபதி கூற, கோர்ட் முழுவதும் சிரிப்பலையால் அதிர்ந்தது.

(தினமலர் 14.9.87)

திருச்சி — 20. மீனம் தனுசு.

தென்காசியிலுள்ள முத்தாரம்மன் துவக்கப் பள்ளிக்கு வடக்கே இருக்கும் நவீனக்



[redacted]

கழிப்பறைக்குச் செல்லும் பெண்கள், கையில் கல், கம்பு ஆகியவற்றுடன்தான் செல்கிறார்கள். இல்லாவிட்டால் வழியில் மேயும் பன்றிகள் அவர்களைக் கீழே தள்ளி விடும்!

(தினமலர் 25.9.87)

— தூத்துக்குடி — 4. பெ. கருமலை.

கேரளாவில், பள்ளி, கல்லூரி, கோயில் ஆகியவை இருக்கும் இடங்களிலிருந்து நானூறு மீட்டர் தள்ளித்தான் சாராயக் கடைகள் இருக்க வேண்டும் என்ற விதியைக் கேரள அரசு நீக்க உத்தரவிட்டது. இதைப் பல சமூக அமைப்புகள் எதிர்த்தும் தனது உத்தரவை வாபஸ் பெற மறுத்துவிட்டது அரசு. எனவே முள்ளை முள்ளால் தான் எடுக்க வேண்டும் என்று நினைத்த கேரள சட்டக் கல்லூரி மாணவர்கள் கல்லூரிக் கட்டடத்திற்குள்ளேயே சாராயக் கடை திறக்க அனுமதி தரவேண்டும். இல்லாவிட்டால் காலவரையற்ற உண்ணாவிரதம் மேற்கொள்ளுவோம்' என்று அரசுக்கு எழுதியுள்ளார்கள்.

(தினமலர் 18.9.87)

— கொப்பம்பட்டி. த. ஜெயக்குமார்.

**(விதிகளைத் தளர்த்திய அந்த உத்தரவு, மாணவரின் இந்த அறிவிப்பு மற்றும் பலரின் போராட்டம் காரணமாக இப்போது வாபஸ் பெறப்பட்டுவிட்டது.**

**— ஆ-ர்.)**

குஜராத்தில் வறட்சியைப் பார்வையிடச் சுற்றுப்பயணம் செய்த பிரதமர் ராஜீவ், மிதிபல்தி என்னுமிடத்தில் நடந்து கொண்டிருந்த நிவாரணப் பணிகளைப் பார்த்து, "எத்தனை நாட்களாக இந்தப் பணி நடந்து கொண்டிருக்கிறது?'' என்று குஜராத் முதல்வர் சௌத்ரியிடம் கேட்டார். அதற்கு முதல்வர், ''நான்கு மாதங்களாக!' என்றார். பிறகு அதே கேள்வியை அங்கு வேலை செய்து கொண்டிருந்த ஒரு பெண்மணியிடம் ராஜீவ் கேட்டபோது, ''நான்கு நாட்களாக...'' என்று பதில் வந்தது. பிறகு முதல்வருக்கு ஏற்பட்ட தர்மசங்கடத்தைச் சொல்லவும் வேண்டுமா?

(டைம்ஸ் ஆப் இந்தியா 23.9.87)

— அகமதாபாத் — 13. என். டி. ர்ராஜன்.

போஃபர்ஸ் நிறுவனத் தலைவர் காரல் பெர்க்கும் மற்ற அதிகாரிகளும் தில்லி வந்தபோது, பத்திரிகையாளர்களுக்குப் பேட்டியளித்தார்கள். அவர்களிடம் கேட்கப்பட்ட முதல் கேள்வி, அடுத்த கேள்வி, அதற்கடுத்த கேள்வி என்று ஒவ்வொரு கேள்விக்கும் ''ஒன்றும் கூறுவதற்கில்லை'' என்பதே தான் அவர்களுடைய பதிலாக இருந்தது.

(தினமணி 22.9.87)

— சென்னை — 81. டி. ராஜேந்திரன்.

முன்பு போலீஸ்காரராக இருந்து டிஸ்மிஸ் செய்யப்பட்டு, பிறகு அரசியல் வாதியாகவும் தற்போது சென்னைக் குடிநீர் வாரியத்தின் தலைவராகவும் உள்ள ஜேப்பியார், தமது பெயரிலுள்ள **IPR** என்ற மூன்று எழுத்துக்களும் நீதி (**Justice**) அமைதி (**Peace**), புரட்சி (**Revolution**) ஆகியவற்றைக் குறிப்பன என்று சொன்னார்.

(இந்தியன் எக்ஸ்பிரஸ் 21.9.87)

— சென்னை — 39. சி. தெ. இளமுருகன்.

அமெரிக்காவிலுள்ள இந்தியத் தூதரான பி. என். கவுல் பெயருக்கு ஒரு பெரிய பார்சல் வந்தது. அதில் வெடிகுண்டு இருக்குமோ என்று சந்தேகப்பட்டுப் போலீஸாரை அழைத்துத் திறந்து பார்த்தபோது, ஜவாஹர்லால் நேருவின் படம் இருந்தது!

(தினத்தந்தி 20.9.87)

— செங்கல்பட்டு — 1. ஆர். சாம்பசிவம்.

"மகாநதியில் இருந்து வைகை நதி வரை நதிகளை இணைக்க வேண்டும் என்று வலியுறுத்தியுள்ளோம். இதுபற்றி ஆராய ஒரு குழுவும் அமைக்கப்பட்டுள்ளது. இந்தத் திட்டத்தை அமல்படுத்தினால் 305 டி. எம். சி. வரையில் நமக்குக் கூடுதலாகத் தண்ணீர் கிடைக்கும். இதோடு, மேற்கு நோக்கிப் பாயும் ஆறுகளைத் தமிழகத்திற்குத் திருப்பி விடுவது பற்றி ஆராயவும் ஒரு குழு அமைக்கப்பட்டிருக்கிறது!''

(அமைச்சர் கே. கே. எஸ். எஸ். ஆர். ராமச்சந்திரன், தினமலர் 20.9.87)

— விசலூர். ஜி. பாலகிருஷ்ணன்.

போலீசார் அனைவரும் மீசை வைத்துக்

**(ரூ. 250 பரிசை பதினெட்டு வாசகர்களும் சமமாகப் பகிர்ந்து கொள்கின்றனர்.)**

கம்பீரமான தோற்றத்துடனும் மிடுக்குடனும் இருக்க வேண்டும் என்பதை ஊக்குவிப்பதற்காகச் செங்கல்பட்டு கிழக்குப் பகுதிப் போலீசாருக்கு மீசை வளர்ப்புப் போட்டி நடத்தப்படவுள்ளது. இந்தப் போட்டி அறிவிக்கப்பட்டதிலிருந்து போலீசார் ஆர்வத்துடன் மீசை வளர்த்து வருகின்றனர். ஏற்கெனவே பெரிய மீசை வைத்திருந்தவர்கள் அதற்கு நெய் போன்றவற்றைத் தடவி மேலும் முறுக்கேற்றி வருகின்றனர்.

(தினத்தந்தி 27.9.87)

— சென்னை — 82. எஸ். தங்கராஜ்.

**(தற்போது இந்தப் போட்டி நடந்து பரிசுகளும் வழங்கப்பட்டு விட்டன. — ஆ-ர்.)**

**த**மிழக அமைச்சர் திருநாவுக்கரசு திருப்பதி வெங்கடாஜலபதிக்குக் 'கல்யாண உற்சவம்' நடத்துவதற்காக இரண்டாயிரம் ரூபாய் கொடுத்து டிக்கெட் வாங்கினார். அப்போது தமது இரண்டு மனைவியரும் இருக்க வேண்டுமென்று விரும்பினார் அமைச்சர். அதற்குத் திருப்பதி தேவஸ்தான அதிகாரிகள் இன்னோர் ஐந்நூறு ரூபாய்க்கு டிக்கெட் வாங்கினால்தான் இரண்டாவது மனைவியையும் கூட இருக்கச் செய்ய முடியும் என்று சொல்லவே, அமைச்சரும் ஒப்புக் கொண்டு வாங்கினார்.

(இந்தியன் எக்ஸ்பிரஸ் 6.9.87)

— சென்னை — 2. கமலா.

**ரே**டியோ டீ. வி. யில் மதுவிலக்குப் பிரசாரம்! தமிழக அரசு ஏற்பாடு!

(தினத்தந்தி 16.9.87)

— சென்னை — 45. ஜெ. நரசிம்மன்.

**மா**நில போலீஸார் இடையிலான கூடைப் பந்துப் போட்டி கோவையில் நடந்தது. அதில் அதிகாரிகள் அணி ஒன்று. மற்றது ஜூனியர் அணி. அதிகாரிகள் அணியிலிருந்த விளையாட்டுத் திறமை மிக்க பல அதிகாரிகளும் பார்வையாளர்களாக உட்கார்ந்துவிட்டதால், எஞ்சியிருந்த இன்ஸ்பெக்டர் ஜெனரல் ஸ்ரீபால், கோவை சூப்பிரெண்டெண்ட் பாஸ்கர் ஆகிய இருவரைத் தவிர மற்றவர்கள் விளையாட்டில் அத்தனை திறமை இல்லாதவர்களாகவே இருந்தனர். எதிர்த்து விளையாடிய ஜூனியர் அணியோ ஏற்கெனவே திறமை மிக்க அணி. இந்நிலையில் ஜூனியர் அணிக்கே வெற்றி வாய்ப்பு அதிகம். எனினும், அது தோற்றுப் போனது. காரணம், மேலதிகாரிகளுக்குக் கீழ்ப்படிந்தே பழக்கப்பட்ட போலீஸார், விளையாட்டிலும் மேலதிகாரிகளை ஜெயிக்க மனமின்றியே விளையாடியது தான்!

(இந்தியன் எக்ஸ்பிரஸ், 19.9.87)

— சிறுமுகை. ஏ. ஜெகதாம்பாள்.



# வாழ்த்துகிறோம்

"**ப**ழகிய வயலினை வாசிப்பதிலிருக்கும் சுகம் பழகிய 'ராக்கெட்'டில் ஆடுவதால் கிட்டுகிறது" என்றார் ரமேஷ் கிருஷ்ணன் ஒரு முறை.

டேவிஸ் — கப் அரையிறுதிப் போட்டியில் ரமேஷின் ஆட்டம், இனிய சங்கீதம் போல்தான் இருந்தது. இசைக்கே உரிய நளினம், நெளிவு, சுளிவுகள், அதிர்வுகள், தாளகதி, வேகம் எல்லாம் அமையப் பெற்றிருந்தன, அவரது ஆட்டத்தில். ரமேஷ் கிருஷ்ணனை எதிர்த்து ஆடிய மசூர் மற்றும் பிட்ஸ் ஜெரால்டு ஆகியோருக்குத்தான் நன்றி சொல்ல வேண்டும். ரமேஷுக்குள் ஒளிந்து கொண்டிருந்த அபரிமிதமான திறமையை வெளிக் கொணரும் வகையில் ஆடியவர்கள் அவர்கள்தானே!

டேவிஸ் கோப்பை இறுதியாட்டத்தில் இந்தியாவை இடம் பெறச் செய்த ரமேஷ் — விஜய் ஆகிய இருவரையும் வாழ்த்துகிறோம்.

# ஸ்ரீராம் சேமிப்பில் சேருங்கள் சிறப்பும் பரிசுமாய் வாழுங்கள்!

**அக்டோபர் 31 க்குள் புதிய டெபாசிட் செய்ய வாருங்கள். சிறந்த பரிசுகளைப் பெறுங்கள்.**

கோயமுத்தூர், மதுரை, திருச்சி, எர்ணாகுளம், விசாகப்பட்டினம் ஆகிய நகரங்களில் ஏற்கனவே உள்ள எமது வாடிக்கையாளர்களுக்கு நேர்முக சேவை செய்ய, இந்த விஜயதசமியன்று எங்கள் அலுவலகங்களை விஸ்தரித்துள்ளோம்.

ஸ்ரீராம் குரூப் கம்பெனிகளில் புதிய பிக்ஸட்/ரெக்கரிங்/மினி டெபாசிட்கள் செலுத்திப் பரிசு பெற முந்துங்கள்!



- தற்போதுள்ள டெபாசிட்தாரர்கள் 26,000க்கு மேல்.
- டெபாசிட் தொகையோ ரூ. 15 கோடிக்கு மேல்.
- டெபாசிட் வளர்ச்சி ஆண்டுக்கு 70%க்கு மேல்.
- 45 ஊர்களில் கிளைகள் மற்றும் ரெசிடெண்ட் மேனேஜர்கள்.
- தவணைமுறை மற்றும் குத்தகை வியாபாரத்தில் ஈடுபடுத்தியுள்ள தொகை ரூ. 16 கோடிக்கு மேல்.

டெபாசிட்டுகள் : வகைகளும் பரிசுகளும் :

1) பிக்ஸட் மற்றும் விசேஷ டெபாசிட்டுகள் :
(ஏற்கப்படும் குறைந்தபட்ச தொகை ரூ. 5000/-)

| டெபாசிட் காலம் | மாதா மாதம் வட்டி பெற | 6 மாதங்களுக்கு ஒரு முறை வட்டி பெற | டெபாசிட் முதிர்வடையும் போது வட்டி பெற |
|---|---|---|---|
| 1 ஆண்டு | 14.0% | 14.5% | 15.0% |
| 2 ஆண்டுகள் | 14.0% | 14.5% | 16.5% |
| 3 ஆண்டுகள் | 14.0% | 15.0% | 18.5% |

இன்னும் ஒரு சிறப்புத் திட்டம்: உங்கள் டெபாசிட் 57 மாதங்களில் இரட்டிப்பாகும்!

பரிசு : வெள்ளிப்பதக்கம்/பொது அறிவு என்சைக்ளோபீடியா அல்லது 'இந்தியன் குக்கிங்' (Indian Cooking) என்னும் பலவர்ண சமையற்கலை நூல்.

**பண்டிகைக் கால பரிசுகள் அக்டோபர் 31 வரை மட்டுமே.**
**விரைந்து செயல்படுங்கள்!** ஸ்ரீராமின் எல்லா கிளைகளிலும் மற்றும் அலுவலகங்களிலும் புதிய டெபாசிட் செலுத்தி பரிசு பெறலாம்.

SHRIRAM GROUP COMPANIES
MADRAS

# ஸ்ரீராம்
# இன்வெஸ்ட்மெண்ட்ஸ்

**நிர்வாக அலுவலகம் :** 54, உஸ்மான் ரோடு, சென்னை-17, போன்: 446688/441715
**கிளைகள் : சென்னை :** ஜார்ஜ் டவுன் • அடையாறு • அண்ணா நகர் • மயிலாப்பூர் • மவுண்ட்ரோடு • 78, தெற்கு உஸ்மான் ரோடு • 165, கச்சேரி ரோடு. **மதுரை :** 270, மேல மாசி வீதி. **திருச்சி :** ஜெரோம் கமர்ஷியல் காம்ப்ளெக்ஸ், 9, கோட்டை ஸ்டேஷன் ரோடு. **கோயம்புத்தூர் :** ராஜு காம்ப்ளெக்ஸ், முதல் மாடி, 127, ராஜாஜி ரோடு, ராம்நகர். **செகந்திராபாத் :** 4, சர்தார் படேல் ரோடு (போன்: 75226). **நெல்லூர் :** 3/9, ஸ்டோன் ஹவுஸ்பேட் (போன்: 6210). **விஜயவாடா :** பெட்டி போதவாரி தெரு, விஜயவாடா-2. **பெங்களூர் :** 142, K.H. ரோடு (போன்: 223637). • 49/1, 5வது கிராஸ், 4வது மெயின், மல்லேஸ்வரம் சர்கிள் (போன் : 220813). **மைசூர் :** 645, சாமராஜா டபிள் ரோடு (போன்: 34766). **புதுடில்லி :** 401, நான்காவது மாடி, பிரதாப் சேம்பர்ஸ், 2376, குருத்வாரா ரோடு, கரோல் பாக், புதுடில்லி-110 005 (போன்: 5729913). **பம்பாய் :** 811, துல்சியானி சேம்பர்ஸ், 212, நாரிமன் பாயிண்ட், பம்பாய்-21 (போன்: 241113). **அகமதாபாத் :** B-14, முதல் மாடி, கேபிடல் கமர்ஷியல் சென்டர், ஆஷ்ரம் ரோடு, அகமதாபாத்-380 009. (போன்: 76326). **கல்கத்தா :** 601, சென்டர் பாயிண்ட், 28/2, ஷேக்ஸ்பியர் சரணி, கல்கத்தா-17 (போன்: 432725). **புனே :** 402, ஒயிட் ஹவுஸ், 4வது மாடி, 1482, திலக் ரோடு (போன்: 411030). **ஹூப்ளி :** விகாஸ் காம்ப்ளெக்ஸ் (2வது மாடி), ஸ்டேஷன் ரோடு. **எர்ணாகுளம் :** 36/847, சித்தூர் ரோடு. **விசாகப்பட்டினம் :** 30-6-41, டாபா கார்டன் (போன்: 63871).

**விண்ணப்பப் படிவங்களும் பரிசுகளும் கிடைக்கும் மற்ற இடங்கள் :**

ரெஸிடெண்ட் மேனேஜர்கள் : சேலம்: திருமதி N. K. இங்கர்சால் (போன்: 51520).
**சேலம் :** T.V. ராமச்சந்திரன், ஸ்ரீ அன்னை மெடிகல்ஸ், 1, சின்னையா காம்ப்ளெக்ஸ், ஓமலூர் ரோடு. **பாண்டிச்சேரி :** R.V. ரமேஷ், FF 34, நேரு வீதி. **விசாகப்பட்டினம் :** ஏ.எஸ். ஆச்சார்யலு (போன்: 63871). **நெய்வேலி :** R. சந்திரசேகரன், D.37.T, பிரகாசம் ரோடு, பிளாக்-3. **நாகர்கோயில் :** R.P. கணபதி.46, மேற்கு தெருமுனை, கிருஷ்ணன் கோயில். **காஞ்சிபுரம் :** V. கந்தஸ்வாமி, (போன்: 2787). **நாகப்பட்டினம் :** P.R. லக்ஷ்மணன், (போன்: 702). **புதுக்கோட்டை :** A.R. சுப்பையா, (போன்: 2971). **கடலூர் :** திருமதி கீதா பாலகிருஷ்ணன் (போன்: 46). **கல்பாக்கம் :** திருமதி சரஸ்வதி உமாபதி, 8, 51வது அவென்யு, வாட்டர்ஸ்-மேற்கு. **காட்டுமன்னார்கோயில் :** M. ஆதிமூலம் VPS நியு காலனி, செட்டியார் தெரு. **திருப்பதி :** N.C. மோஹன்ராவ், 6-8-1055 என்.ஜி.ஓ. காலனி, K.T. ரோடு. **ஹோசூர் :** திருமதி S. உஷா, H-72, ATC ஹட்கோ. **மங்களூர் :** திருமதி D.N.J. பயஸ் (போன் : 28357/22357).

ADWAVE/SU/3401 TAM

**ஸ்ரீராம் கைராசி உங்களது பணராசி.**

* எப்போ வருவாரோ?



# எம்.ஜி.ஆர் அமெரிக்காவிலிருந்து எப்போது வருவார்?

*** கிங்ஸி, சென்னை — 18.**

**? எதிர்க்கட்சித் தலைவர்களிடையே உள்ள ஒற்றுமையின்மை; ஈழப் போராளிக் குழுக்களிடையே நிலவும் ஒற்றுமையின்மை — என்ன வித்தியாசம்?**

! இங்கு ஜனநாயகம் சாகிறது; அங்கு மனிதாபிமானம் மடிகிறது.



* மெழுகுவர்த்தி...

*** ஆர். எஸ் இராஜ், சீர்காழி.**

**? ஒரு சினிமா நட்சத்திரத்துக்குத் தரப்படும் மரியாதையை ஓர் எழுத்தாளனுக்குப் பொது மக்கள் காட்டுவதில்லையே?**

! முன்னவன் நாட்டை ஆளக்கூடிய அபாயம் இருப்பதால் முன்னெச்சரிக்கையாக நடந்து கொள்கிறார்கள். அது கெட்டிக்காரத்தனம்தானே!

*** கே. ஜி. எஃப் பழனிச்சாமி, பெங்களூர்.**

**? 'வி. பி. சிங் ஒரு மெழுகுவர்த்தி போல; விரைவில் அணைந்து விடும்' என்கிறாரே, எச். கே. எல். பகத்?**

! இந்தியாவை இன்று சூழ்ந்துள்ள இருளை விரட்ட நம்மிடம் உள்ள ஒரே ஒளி அந்த மெழுகுவர்த்திதான். அதுவும் கரைந்து அணையும் முன் மக்கள் விழித்துக் கொள்வது நல்லது. கரைந்து அணைந்தாலும் சரி, ஊதி அணைக்கப்பட்டாலும் சரி (இதற்கும் வாய்ப்பு இருப்பது நிதர்சனம்) மெழுகுவர்த்தியின் பணி எப்போதும் போற்றுதற்குரியதாகவே இருக்கும்.



* கல்யாணக் கொண்டைகள்.

*** ஆர். கே. லிங்கேசன், மேலக்கிருஷ்ணன்புதூர்.**

**? பாக்யராஜ் தி. மு. க. விலும் டி. ராஜேந்தர் அ. தி. மு. க. விலும் இணைந்தால் எப்படியிருக்கும்?**

! டி. ராஜேந்தர் 'கலைஞரை விட்டகல மாட்டேன்' என்றும் பாக்யராஜ், 'எனது தொடர் கதைத் தலைப்புக்கு உள்ளர்த்தம் கற்பிக்காதீர்கள்' என்றும் அறிக்கை விடுவதற்குப் பதிலாக, 'ஏன் அ. தி. மு. க. வில் இணைந்தேன்' என்றும், 'எதற்காகத் தி. மு. க. வில் சேர்ந்தேன்' என்றும் விளக்கமளித்துக் கொண்டிருப்பார்கள்!



* அ. தி. மு. க. வில் இணைந்தால்..?



*** எம். இராசன், மோதினபள்ளி.**

**? 300 வது ஆண்டில் அடியெடுத்து வைக்கும் மாநகராட்சிக்கு உங்கள் பாராட்டுரை உண்டா?**

! வயசாவதுமட்டுமேசாதனையாகிவிடாது. இன்றைய மாநகராட்சியில் பாராட்டிப்

* யாகங்கள் காக்குமா?

பேசப்படி பிரமாதமாக ஒன்றும் நடக்கவில்லை. ஆனால் 300 வது ஆண்டு என்னும் போது கடந்த காலத்தையும் திரும்பிப் பார்க்கிறோம். பழசுக்குப் பாராட்டு நிறையவே உண்டு.

* க. தியாகராசன், நெய்வேலி.

? பிரதமரின் இன்னல்கள் நீங்க யாகம் என்ற பெயரால் லட்சக்கணக்கான ரூபாய் மதிப்புள்ள பொருள்களை நெருப்பிலே கொட்டுவது பற்றி...?

! திறமையும் நேர்மையும் உள்ள பிரதமரானால் அவருக்கு யாகமே தேவையில்லை. அவரது திறமையும் நேர்மையுமே அவருக்குக் கைகொடுத்துக் காப்பாற்றும். திறமையும் நேர்மையும் இல்லாத பிரதமரானால் அவரை எத்தனை யாகங்கள் நடத்தினாலும் காப்பாற்ற முடியாது. அது கடவுளையே ஏமாற்றப் பார்ப்பது போலாகும். எனவே, இதுபோன்ற யாகங்கள் 'வேஸ்ட்' தான்.

* எம். காமராஜ், திருச்சி — 5. *

? ரிலையன்ஸ் கிரிக்கெட் போட்டிக்கு ஆட வந்த வீரர்களை நம் நாட்டுப் பெண்கள் மாலையணிவித்து வரவேற்றது நமது பண்பாட்டுக்கு உகந்ததா?

! பண்பாடு நாட்டுக்கு நாடு வித்தியாசப்படுகிற ஒன்று. நாம் கையில் எடுத்துச் சாப்பிடுகிறோம். அயல் நாட்டு விருந்தினர் வந்தால் அவருடன் சேர்ந்து ஸ்பூனால் சாப்பிடுவோம். பண்ருட்டி ராமச்சந்திரன், ரிப்பன் பில்டிங் வடிவிலான கேக்கில் மெழுகு வர்த்தி ஜோதி அணைத்தது தவறு; விளக்கேற்றி இருக்க வேண்டும் என்று வாதாடலாம்; ஆனால் இந்நகரில் பல்லாயிரக்கணக்கான ஆங்கிலோ இந்தியர்கள் இருக்கிறார்கள். அவர்கள் இதை வரவேற்று மகிழ்வார்கள். அது போலத்தான் இதுவும். மாலை அணிவித்ததால் மணாளனுக்கிக் கொண்டு விட்டதாக அர்த்தமில்லை. ஹவாய் தீவுக்கு நீங்கள் போனால் பெண்கள் உங்களுக்குப் பூமாலை அணிவித்துத்தான் வரவேற்பார்கள். தப்பர்த்தம் பண்ணிக் கொள்ளாதீர்கள்!

* சி. மணி, புத்தனாம்பட்டி.

? எம். ஜி. ஆர். அமெரிக்காவிலிருந்து எப்போது வருவார்?

! உடம்பு குணமானதும்.

* கா. அப்துல் மஜீத், திருமயம்.

? தமிழக முதல்வர் நாட்டு மக்களுக்கு ஆற்றும் நற்பணிக்காகவும் இந்தியா — இலங்கை ஒப்பந்தம் ஏற்பட வழிவகுத்ததற்காகவும் அவருக்கு நொபெல் பரிசு தர

## நீங்கள் கேட்டவை — தராசு

வேண்டும் என்று இங்குள்ள கிறிஸ்துவ பிஷப்புக்கள் கேட்டுக் கொண்டிருப்பதாக ஓர் அமைச்சர் அறிவித்திருக்கிறாரே?

! கிறிஸ்துவப் பாதிரிமார்களுக்கு மட்டும் நகைச்சுவை உணர்வு இருக்கக் கூடாது என்று சட்டமா என்ன?

* இடலை சுதா, குளத்தூர்.

? "ஜெயலலிதாவைப் பார்த்து கருணாநிதியே பயப்படுகிறார்..." என்று அமைச்சர் வி. வி. சுவாமிநாதன் கூறியுள்ளது பற்றி?

! "...ஆக, நாங்கள் எப்படி பயப்படாமல் இருக்க முடியும்?" என்று அவர் வாக்கியத்தை முடித்திருந்தால் பாதி அளவேனும் உண்மை பேசியதாய் இருந்திருக்கும்.

* ஆர். ஜெ. பாலன், சிவகங்கை.

? எம்மதமும் சம்மதம் என்று கூறிவிட்டு இந்தியாவுக்கு 'ஹிந்துஸ்தான்' என்று பெயரிட வேண்டும் என்று 'ஜன கல்யாண்' நிறுவனர் கோருவது சரிதானா?

! ஜன கல்யாண் கொள்கைகளில் உள்ள எத்தனையோ பல சிறந்த அம்சங்களை ஏற்றுச் செயல்படுவோமானால் இந்தக் கோரிக்கையை ஏற்காமலே விட்டுவிடலாம். ஜெயேந்திரரும் வருத்தப்பட மாட்டார். ஆனால் அந்த நல்ல அம்சங்களையெல்லாம் விட்டுவிட்டு இந்த ஒரு குறையை மட்டும் பெரிதுபடுத்திக் கொண்டிருப்போமானால் நமக்கு விமோசனமே இல்லை!

* எம். ரமேஷ்குமார், போடிநாயக்கனூர்.

? ரஷ்யாவில் கம்யூனிஸக் கொள்கைகள் கொஞ்சம் கொஞ்சமாக மறைகின்றன என்பது உண்மையா?

! கொள்கைகள் மறைகின்றன என்பதைவிட, சில மாற்றங்களை ஏற்கின்றன என்பதே சரி. காலத்துக்கு ஏற்ப மாறுவது புத்திசாலித்தனம்; மாறவே மாட்டேன் என்பது மூடப் பிடிவாதம்.

* ரூ. 15 பரிசு பெறுபவர்:

எம். காமராஜ்,
கொன்னிடம் அழகிரிபுரம்,
திருவானைக்கோவில் அஞ்சல்,
திருச்சி — 620 005.



வறட்சிப் பணிகளில் அரசியலைப் புகுத்தக் கூடாது!
ரொம்ப சரி!
நீங்க வறட்சிப் பிரதேசங்களைப் பார்வையிடா விட்டால் நாங்க தர்ணா, ரகளை செய்வோம்!
இதுவும் ரொம்ப ரொம்ப சரி!
சிதம்பரம்
பயங்கர வாதம்
விடுதலைப் புலிகள்
பாவம்! உன் பல்லவனுக்கு ரொம்ப சேதம்! இந்தா 12 கோடி போனஸ்!
பொறுது, போ!
12 கோடி ரூபாய்
முத்துசாமி
பல்லவன் ஊழியர்



# கல்கி



1987 அக்டோபர் 18
மலர் 46 இதழ் 12
பிரபவ ஐப்பசி 1

## அடங்கிக் கிடக்கவா, அமைதிப் படை?

இந்தியாவிலிருந்து இலங்கைக்குப் படகில் பயணப்பட்டுக் கொண்டிருந்த பதினேழு விடுதலைப்புலிகளை ஸ்ரீலங்கா ராணுவம் நடுக்கடலில் சிறைப்பிடித்து, பின்னர் விசாரணைக்குக் கொழும்புக்கு அழைத்துச் செல்ல முற்பட்டது தவறுதான். இந்திய அமைதிப் படையினரிடம்தான் அவர்கள் ஒப்படைக்கப்பட்டிருக்க வேண்டும். ஆனால் இந்தத் தவறைக் கொழும்புவிலுள்ள இந்தியத் தூதரகம் இலங்கை அரசுக்குச் சுட்டிக் காட்டித் தேவையான நடவடிக்கைகளை எடுத்துக் கொண்டிருந்த போதே, கைதான ஈழப் புலிகள் இதனைத் தன்மானப் பிரச்னையாகக் கருதி சயனைட் மாத்திரைகளை விழுங்கியது துரதிர்ஷ்டமே. இதை விடப் பெரிய துரதிர்ஷ்டம் ஒன்று உண்டென்றால் அது, இதற்குப் பதிலடி கொடுப்பது போல ஈழப்புலிகள் கட்டுப்பாடு இழந்து நூற்று அறுபது சிங்களவரைக் கொன்று குவித்திருப்பதுதான். இந்தப் பழிவாங்கும் படலத்தால் தற்கொலை செய்து கொண்டு செத்துப் போன விடுதலைப் புலிகள் திரும்பி வந்துவிடப் போவதில்லை. ஆனால் துவேஷமும் வன்மமும் வளரவும், போராட்டம் தொடரவும், இதோ அதோ என்றிருக்கும் அமைதியும் ஜனநாயகமும் வெகுதூரம் விலகிப் போகவும் வாய்ப்புக்கள் நிறையவே உண்டு. போதாக்குறைக்குப் 'போராட்டத்தை இனி நிறுத்தி வைக்க மாட்டோம்; தொடர்வோம்' என்று பகிரங்கமாகவே விடுதலைப்புலிகள் அறிவித்து விட்டனர்.

மத்தியஸ்தம் செய்து வைக்கப் போன இந்தியா, ஈழப்போராளிகளை ஒரு பக்கமாக ஒதுக்கிவிட்டுத் தானே சிங்கள அரசுடன் நேரடியாக ஓர் ஒப்பந்தம் செய்து கொண்டது ஒரு விசித்திரமான நிலைதான் என்பதை மறுக்கவே முடியாது. 'இந்த ஒப்பந்தத்துக்கும் எங்களுக்கும் சம்பந்தமில்லை' என்று போராளிகள் கூறவும் நடந்து கொள்ளவும் அதுவே வசதி செய்து தந்தது; இன்னமும் வசதி செய்து தந்து கொண்டிருக்கிறது. ஆனால் இதற்கு மறுபக்கமாக இன்றைய யதார்த்த நிலையையும் ஆராய வேண்டும். இலங்கை முழுவதிலுமுள்ள சாமானிய மக்கள், தமிழராயினும் சரி, சிங்களவராயினும் சரி, அமைதியையும் ஜனநாயகத்தையுமே விரும்புகின்றனர்; போரையும் அராஜகத்தையும் அல்ல. இதுவே இந்தியா — இலங்கை ஒப்பந்தத்துக்கு உள்ள மிகப் பெரிய பலம். இரண்டாவதாக, சரியோ தப்போ ஒப்பந்தம் கையெழுத்தாகி விட்டது; இனி அதைக் காக்க வேண்டியது இந்திய அரசின் கடமையாகிவிட்டது. பின்வாங்க முடியாது என்பது நிதர்சன உண்மை. மூன்றாவதாக, 'ஒப்பந்தத்துக்கும் எங்களுக்கும் சம்பந்தமில்லை' என்று என்னதான் ஈழப்போராளிகள் கூறினாலும் அவர்களில் எல்லாப் பிரிவினருமே, 'இந்திய அமைதிப் படையுடன் தாங்கள் மோத விரும்பவில்லை' என்று கூறி, அதன் பொருட்டேனும் ஆயுதங்களை ஒப்படைத்தனர் என்பதும் பிரிவினையல்லாத ஒரு தனித் தமிழ் மாநிலத்தில் ஜனநாயகத்துக்கு ஒரு வாய்ப்பளிக்க முன்வந்தனர் என்பதும் மறுக்க முடியாத உண்மை. 25 சதம் ஒப்படைத்தார்களா, 65 சதமா என்பது பிரச்னையல்ல. அமைதி காக்கவும் ஜனநாயகத்தை ஏற்கவும் முன்வந்தார்கள் என்பதே முக்கியம். இப்போது இந்த நிலையிலிருந்து விடுதலைப் புலிகளோ அல்லது மற்ற ஈழப்போராளிகளோ பின்வாங்க முடியாது; அதை இந்தியா அனுமதிக்கவும் இயலாது. 25 சதம் ஆயுதங்களை ஒப்படைத்தவர்கள் அதன் இயல்பான தொடர்ச்சியாக, முடிந்த முடிவாக 100 சதம் ஆயுதங்களையும் ஒப்படைத்துத்தான் ஆக வேண்டும். இதை வன்மையான விதத்தில் இந்திய அரசு அவர்களுக்கு உணர்த்த வேண்டும். போராளிகள் ஒத்துழைக்க மறுத்தால் பின்விளைவுகள் என்னவாக இருக்கும் என்பதையும் சந்தேகத்துக்கு இடமின்றி இந்திய அரசு அறிவிக்க வேண்டும். ஒரு குறுகிய காலக்கெடுவை நிர்ணயித்து அதன்பின் நடவடிக்கை எடுப்போம் என்று எச்சரித்து விட வேண்டும்.

'தமிழர்களாயிற்றே, நமது சகோதரர்கள் ஆயிற்றே' என்ற தயக்கம் கூடாது. காரணம், இது இந்திய நாட்டின் மானப் பிரச்னையாகிவிட்டது. சகோதர பாசத்தைவிட தேசாபிமானம் முக்கியமானது. உலககம் நம்மைப் பார்த்துச் சிரிக்க நாம் இடமளித்து விடக் கூடாது.

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. — பாரதியார்.

**ராஜாஜி வாழ்க்கை வரலாறு — IV**

**ராஜ்மோகன் காந்தி**

# தாடிக்காரர் டாண்டன் பிடிவாதக்காரர்!

## 11

உத்தரப்பிரதேசத்தைச் சேர்ந்த புருஷோத்தமதாஸ் டாண்டனின் தாடி எவ்வளவு பிரசித்தமோ அவ்வளவுக்கு அவரது நேர்மையும் சுதந்திர சிந்தனையும் பிரசித்தம். ஓர் ஆண்டுக்கு முன்னதாகவே அவர் காங்கிரஸ் தலைவர் பதவிக்குப் போட்டியிட்டு ஆந்திரத்தைச் சேர்ந்த பட்டாபி சீதாராமய்யாவால் தோற்கடிக்கப்பட்டிருந்தார். இப்போது டாண்டன் மீண்டும் தலைவர் பதவி ஏற்கத் தாம் தயாராக இருப்பதை அறிவித்தார். பட்டேல் டாண்டனை ஆதரித்தார். ஆனால் நேருவோ டாண்டனைப் பழங்கால ஆசாமி என்றும் தீவிர ஹிந்து என்றும் கருதினார். தமது எதிர்ப்பை அவர் ஒளிக்கவில்லை. பட்டேல் — டாண்டன் இணைப்பு தமது அதிகாரத்தைக் கட்டுப்படுத்தும் என்று நேரு கருதியிருப்பார் என்பதிலும் சந்தேகமில்லை.

டாண்டனை வாபஸ் பெற வைக்க வேண்டும்; இதற்கு என்ன வழி என்று தேடிய போது நேருவுக்கு ஒரு யோசனை தோன்றியது. அதன்படி காங்கிரஸ் கட்சித் தலைமைப் பதவியை ஏற்றுக் கொள்ளுமாறு ஸி. ஆரை அவர் கேட்டார். ஆனால் ஸி. ஆர். இதற்கு இணங்கவில்லை. இந்திய ஜனநாயகத்தின் ஆட்சித் தலைவர் என்ற நிலையிலிருந்து கட்சித் தலைவர் என்ற நிலைக்குக் குதிப்பது அவருக்கு அவ்வளவு ஏற்புடையதாக இருக்கவில்லை. இதன் விளைவாக டாண்டனை ஜே. பி. கிருபளானி எதிர்த்தார். கிருபளானிக்கு நேருவின் ஆதரவு இருந்தது. எனவே, காங்கிரஸ் தலைமைப் பதவிக்கான இந்தத் தேர்தல் நேரு — பட்டேல் ஆகிய இருவருக்கும் இடையே நடக்கும் பலப்பரீட்சை என்றே பலர் முடிவு கட்டினர்.

டாண்டன்தான் வெற்றி பெறப் போகிறார் என்பது தெளிவானதும் நேரு மனம் நொந்து போனார். ஆகஸ்ட் 26 ஆம் தேதி காலை அவர் ஸி. ஆரிடம் தாம் கட்சி, ஆட்சி ஆகிய இரண்டிலிருந்தும் விலகிக் கொள்வதாகக் கூறினார். நேருவின் இந்த எண்ணத்தை ஸி. ஆர். பலமாக எதிர்த்தார். நீண்ட விவாதத்துக்குப் பிறகு, இல்லம் திரும்பிய நேரு, பின்வருமாறு ஸி. ஆருக்கு எழுதினார்:

''இன்று காலை நான் உங்களுடன் பேசிக் கொண்டிருந்ததைப் பற்றியே இன்று நான் முழுவதும் சிந்தித்துக் கொண்டிருந்தேன். காங்கிரஸுக்கும் சரி, அரசாங்கத்துக்கும் சரி, நான் இனி பயன்பட மாட்டேன் என்றே எனது உள்ளுணர்வுகள் எனக்கு உணர்த்துகின்றன. பெரும்பாலான காங்கிரஸ்காரர்களுக்கு இவ்விஷயத்தில் என் மன நிலை என்ன என்று தெரிந்திருக்கும் என்றே நினைக்கிறேன். ஆன போதிலும் டாண்டனுக்கு ஆதரவு தந்து, ஊக்கம் அளித்து தேர்ந்தெடுக்கப்படுகிறார் என்றால்,

ஒரு விஷயம் மிகத் தெளிவாகப் புரிகிறது. அதாவது, நான் கட்சியிலும் ஆட்சியிலும் நீடிப்பதை விடவும் டாண்டன் காங்கிரஸ் தலைவராவதுதான் முக்கியம்என்றுகருதப்படுவது தெரிகிறது... நான் மேற்கொண்டு எந்த நடவடிக்கையும் எடுப்பதற்கு முன் மீண்டும் உங்களைக் கலந்தாலோசிக்கிறேன்.''




• 24.9.50 கல்கி இதழில் டாண்டனைக் கேலி செய்து வெளியான நேரு ஆதரவு கார்ட்டூன்.

ஜவாஹர்லால் தேவைக்கதிகமாகப் பதற்றமடைகிறார் என்பது தெளிவாயிற்று. ஸி. ஆர். இதை அவருக்கு எடுத்துக் காட்டினார். 'டாண்டனா, நானா என்று முடிவு செய்யுங்கள்' என்பதாகக் காங்கிரஸை நேரு கேட்டுக் கொண்டிருந்தால் நேரு இப்போது நடந்து கொள்ளும் விதம் பொருத்தமாக இருக்கலாம். ஆனால் நேரு அப்படி ஒரு பிரச்னையைக் காங்கிரஸில் எழுப்பவேயில்லை. எனவே தலைவர் தேர்தல் முடிவானது, நேருவிடம் காங்கிரஸுக்கு நம்பிக்கை இல்லை என்று தீர்ப்பளித்ததாகிவிடாது.

'நான் ராஜினாமா பண்ணுகிறேன்' என்று நேரு பயமுறுத்துவது இது முதல் தடவையல்ல. மகாத்மாவின் மரணத்துக்குச் சில தினங்களுக்கு முன் அவர் அப்படி அச்சுறுத்தியிருந்தார். மீண்டும், அவர் விருப்பத்துக்கு விரோதமாகக் காங்கிரஸ் கட்சி, ஸி. ஆருக்குப் பதில் பிரசாத்தைக் குடியரசுத் தலைவராகத் தேர்ந்தெடுத்தபோது அவ்வாறே பயமுறுத்தினார். 'இப்போது மறுபடி சும்மா மிரட்டுகிறார்' என்று பட்டேல் நினைத்தார். நேரு பூச்சாண்டி காட்டுவதை அம்பலப்படுத்த எண்ணி, ''ராஜினாமா செய்வதானால் செய்து விட்டுப் போகட்டுமே!'' என்றார், ஸி. ஆரிடம். டாண்டனின் வெற்றி அளித்த பூரிப்பு இன்னும் அடங்காத நிலையில் பட்டேலுடைய போக்கு இவ்வாறுதான் இருந்தது.

நேரு பூச்சாண்டி காட்டினாரா? இருக்கலாம். ஆனால் அவருக்குச் சவால் விடுவது பேராபத்தானது என்று ஸி. ஆர். உறுதியாக நம்பினார். அது அரசாட்சியை அழிப்பதோடு, நாட்டையே பிளவுபடுத்தும். நேரு மானஸ்தர். அவர் உண்மையில் ராஜினாமா செய்ய விரும்பாமலிருந்தாலும்கூட, அவருடைய தன்மானமானது ராஜினாமா செய்ய வேண்டிய நிர்ப்பந்தத்தை அவருக்கு ஏற்படுத்திவிடும். பிறகு காங்கிரஸ் பிளவுபடும். அகில இந்திய காங்கிரஸ் கமிட்டியிலிருந்து அடித்தள கிராமக் காங்கிரஸ் கமிட்டி வரை இரண்டாக உடையும். மேலும் நேருதான் இந்தியாவிலேயே மிகப் பிரபலமான மனிதர். பட்டேலோ ஆட்சியை நிர்வகிக்க முடியாத அளவுக்கு நோய்வாய்ப்பட்டிருந்தார். எனவே, நேருவுக்குச் சவால் விடுவது என்பது நினைத்துக் கூடப் பார்க்க முடியாத காரியம்.

''ஆகஸ்டு 26 ஆம் தேதி இரவு ஸி. ஆர். ஒரு நிமிஷம் கூடத் தூங்கவில்லை'' என்று நாமகிரி நினைவுகூர்கிறார். ''அவர் ரொம்பக் கலக்கத்துக்கு உள்ளாகியிருந்தார். மறுநாள் அதிகாலையில் அவர் சர்தாருக்கு ஃபோன் செய்து சொன்னார்: 'நீங்கள் தனியாக எதையும் நிர்வகிக்க முடியாது; அவரைத் தொலைத்துக் கட்டிவிட முயற்சி செய்யாதீர்கள்; அவரில்லாமல் உங்களால் என்ன சாதிக்க முடியும்? நீங்கள் ரொம்பவும் உடல்நலம் குன்றியிருக்கிறீர்கள்.''

ஸி. ஆர். வெற்றி பெற்றார். நேரு, பட்டேல் இருவருமே மலை முகட்டிலிருந்து கீழே உருளாமல் பத்திரமான இடத்துக்குப் பின் வாங்கினார்கள். 27 ஆம் தேதி நேரு எழுதிய மற்றொரு கடிதம் ஸி. ஆருக்கு ஆள் மூலம் கொடுத்து அனுப்பப்பட்டது. மனம் நொந்து போன நேருதான் இதையும் எழுதியிருந்தார். ஆனால் இதில் இன்னும் கொஞ்சம் ஜாக்கிரதை உணர்வு வெளிப்பட்டது. கடிதத்தில் ஆட்சி அல்லது கட்சியை விட்டு வெளியேறுவது பற்றிப் பேச்சில்லை. நேரு எழுதியிருந்தார்:

''ஒரு பெரிய பிரச்னையில், நான் மிகவும் முக்கியத்துவம் கொடுக்கிற ஒரு விஷயத்தில் என்னுடைய சகாக்களே எனக்கு எதிராகச் செயல்படுகிறார்கள் என்றால் எங்கோ, ஏதோ தவறு இருப்பதாகத்தான் அர்த்தம். மேலும் கொடுத்த வாக்கு மீறப்பட்டிருக்கிறது; நான் ஏமாற்றப்பட்டிருக்கிறேன் என்பதை நினைத்துப் பார்ப்பது சுவைக்கவில்லை. நான் இந்த வேலைக்கு ஏற்ற அளவுக்குத் தகுதிபெற்ற பெரிய மனிதன் அல்ல போலும்! வெளியுலகுக்கும் ஓரளவு உள்நாட்டுக்கும் கூட நான் துணிக்கடை பொம்மை மாதிரி அலங்காரமாக நிற்க வேண்டும் என்று கருதுகிறார்கள் போல. நின்ற இடத்தில் அசையாதிருக்க வேண்டும்; நாட்டு நிர்வாகத்தின் மெய்யான காரியங்களில் அதிகம் தலையிடாது ஒதுங்கியிருக்க வேண்டும் என்று எதிர்பார்க்கிறார்களா?''

பட்டேலும் ஸி. ஆருக்குக் கடிதம் எழுதினார். ஜவாஹர்லாலின் மனச்சோர்வை நீக்க வேண்டும் என்றே தாம் விரும்புவதாகக் குறிப்பிட்டார். ''நீங்கள் கொடுத்த அறிவுரைப்படி நான் நடந்து கொண்டிருக்கிறேன். நேரு இந்த விஷயத்தை உணர்ச்சிவசப்படாமலும் அறிவு பூர்வமாகவும் அணுகுவார் என்றே இன்னமும் நம்புகிறேன்.'' (27.8.50)

ஆயினும் உரசல் நீடிக்கவே செய்தது. உத்தரப்பிரதேசத்தைச் சேர்ந்தவரும் தமது மந்திரிசபையில் ஓர் அங்கத்தினருமான ரஃபி அகமத் கித்வாய், டாண்டன் உருவாக்குகிற காங்கிரஸ் காரியக் கமிட்டியில் சேர்த்துக் கொள்ளப்பட வேண்டும் என்றும், அப்படிச் சேர்த்துக்கொள்ளப்படாவிட்டால் தாமும் காரியக் கமிட்டியில் இடம் பெற முடியாது என்றும் ஜவாஹர்லால் அறிவித்தார். ஆனால் உ. பி. அரசியலில் நீண்ட காலமாகவே கித்வாய், டாண்டனின் எதிரியாக இருந்து வந்தவர். காங்கிரஸ் விதிகளின்படி காரியக் கமிட்டி அங்கத்தினர்களைத் தேர்ந்தெடுக்கக் காங்கிரஸ் தலைவருக்குப் பூரண உரிமை உண்டு. என்றாலும் நேருவைக் கலந்தாலோசிக்க டாண்டன் தயாராகவே இருந்தார். ஆனால் கித்வாயை மட்டும் கிட்டத்தில் நெருங்க விட மாட்டேன் என்பதில் உறுதியாக இருந்தார். அனைவரும் எதிர்பார்த்தது போல் டாண்டனுடைய நிலையைப் பட்டேல் பலமாக ஆதரித்தார்!



(தொடரும்)



மேலே: 10ம் நூற்றுண்டு ஆரம்ப சோழர் காலத்திய சிலை
நகையலங்காரம்: லலிதாஸ், சென்னை
கலைபெட்டகம் தொகுப்பு 4
பண்டை காலத்து கற்காவியம்
இன்றைய லலிதாவின்
பொற் காவியம்
...என்றென்றும் ரம்மியமான
கலைப்படைப்புகள்
Lalitha
லலிதா ஜுவல்லரி மார்ட் பி. லிட்
பனகல் பார்க், தி. நகர், சென்னை-17
தொலைபேசி: 445939/442601
VIVIDIZE 428



மணப் பொருத்தத்தில் முக்கியமானது
மணப் பொருத்தம் அதைவிட முக்கியமானது
மணமகளின் அழகுக்கு அழகு சேர்க்கும்
சாரதா'ஸ் பட்டுப் புடவையின் பொருத்தம்.
சாரதாஸ்
(முகூர்த்தப் பட்டு புடவைகளுக்கு அதிர்ஷ்டமான இடம்)
தன் பில்டிங்
மவுண்ட் ரோடு
சென்னை-600 002
போன் : 87177
N.S.B. ரோடு
திருச்சி-620 002
போன் : 27077
SARATHA'S
MADRAS & TRICHY



# கதவுகள்

அகல்யா

அஸ்ஸாமிய மேற்கெல்லையில் அந்த மிலிடரி ஜீப் வேகமாகச் சென்று கொண்டிருந்தது. ஜீப்பின் முன்புறத்திலிருந்த வயர்லெஸ்ஸிலிருந்து காப்டனுக்குச் செய்திகள் வந்து கொண்டிருந்தன.

பின்புறத்தில் சுமார் நான்கைந்து பேர் அமர்ந்திருந்தனர். அந்த ராணுவ உடைகளில் கசகசவென்று வியர்வை வழிந்தபடி. அவரவரும் இந்தியில், பஞ்சாபியில், தெலுங்கில், இங்கிலீஷில்என்று பேசிக்கொண்டிருந்தனர். ஆனால் இடதுபுறப் பின் ஓரமாய் அமர்ந்திருந்த சீனிவாசன் மட்டும் பின்னால் வேகமாய்க் கடந்து கொண்டிருந்த தார்ச் சாலையையே வெறித்துப் பார்த்தபடி இருந்தான். ஏமாற்றத்தின் முழு அழுத்தமும் முகத்தில் தங்கியிருக்க... ஜீப்பின் ஆட்டத்திற்கேற்ப உடல் பட்டும் ஆடியபடி..

மீண்டும் அவனின் அப்பா எழுதிய லெட்டர் கண்முன் வந்தது.

'...மீண்டும்உன் பெரிய மாமாவுக்கும், எனக்கும் ஏற்பட்ட பொளி தகராறு 'அடிதடி வரை சென்று போலீஸ் கேஸாகியுள்ளது. என் மண்டை உடைந்து ஒரு வாரம் ஆஸ்பத்திரியில் இருந்தேன். எதற்கும் நீ உடனே வந்தால் நல்லது. அவனிடம் ஆள் பலம் இருக்கிறது. நான்ஒருவன் இருந்து என்ன செய்ய? அதுவுமில்லாமல் நம் நிலத்திற்குள் இருந்த பனை மரத்தை வெட்டி விற்றுவிட்டான் அம்மா ரொம்பவும் பயப்படுகிறாள். உனக்கு இவ்விஷயம் தெரிந்தால் எங்கே வெட்டுப் பழி, குத்துப் பழி ஆகிவிடுமோ என நானும் பயந்துதான் கடிதம் எழுதாமல் இருந்தேன். இப்போதோ நிலைமை கைமீறிப் போகும் போலுள்ளது.

# அடுத்த இதழ்

**வ. உ. சி. மாவட்டத்தில் கல்கி —1**



- **தாமிரபரணியைத் தடுக்கிறாரா பி. ஹெச். பாண்டியன்?**



- **சுற்றுலாவுக்கு ஏற்ற வ. உ. சி. மாவட்டம்**

- **தூத்துக்குடியில் ஒரு குட்டிக் கூவம்!**

உன் வரவை எதிர்பார்த்து... — அன்புத் தந்தை.'

கர்ரக்... கர்ரக்கென ஆங்காங்கே தனது உடலில் சப்தமெழுப்பியபடி வண்டி ப்ரேக் போட... சடசடவென உள்ளிருந்தவர்கள் தங்கள் தங்கள் தொப்பிகளை அணிந்தபடி ரைபிள் சகிதம் இறங்க ஆயத்தமாக... விலுக்கென எழுந்து... தானும் தரையில் குதித்தான்.

நகர வீதிகள் வெறிச்சோடிக் கிடந்தன. ஆங்காங்கே உதிரிகளாய் மக்கள் அஞ்சியபடி நடைபோடுவது தெரிந்தது.

'சே...' என்றிருந்தது. இந்த ஸ்பெஷல் டூட்டி மட்டும் வந்திருக்கா விட்டால், இவ்வளவு நேரம் ஊரை ஒரு கலக்குக் கலக்கியிருக்கலாம்! மாமனும் மாமன்! கம்சனைப் போல... சூட்டோடு சூடாக அவனை அடித்துத் துவைத்து ஹாஸ்பிடலுக்குத் துரத்தியிருக்கலாம். நான் தொலைவில் இருப்பதால்தானே அவர்கள் அப்பாவை அனாதை போல் அடித்திருக்கிறார்கள்.

கைகள் இறுக்கமாய் ரைபிளைப் பற்றின. முகத்தில் சுருக்கங்கள் விழ, பற்களைக் கடித்தான். உடல் லேசாய் ஆடியது.

'அவன் நிலத்திலுள்ள பதினொரு தென்னை மரங்களையும் வெட்டி வீழ்த்த வேண்டும். தடுக்க வருபவர்களையும் வெட்டிச் சாய்க்க வேண்டும். எங்கள் பனை மரத்தை வெட்டிய போது மட்டும் எந்தப் பயல் ஏனென்று கேட்க வந்தான்?

'இந்த லீவு மட்டும் கிடைத்திருந்தால்... இனி மாமன் இப்படிக் கொழுப்பெடுத்துத் துள்ளாத வகையில் காலை, கையை முறித்து வீட்டிலேயே முடக்கியிருக்கலாம்... இப்படிக் கலவரம் நடந்த பகுதியைக் காவல் செய்ய அனுப்பி விட்டார்களே!'

"ஹேய் சீனி என்ன திங்க் பண்ணிக்கிட்டிருக்கே? பாத்தியா... ரெண்டு நாளைக்கு முன்னலை இந்தியாவையே உலுக்கிய கலவரம் நிகழ்ந்த பகுதியை?" —சக சிப்பாய் பசவப்பா கேட்டான்.

ஆங்காங்கே தீக்கு இரையாக்கப்பட்ட கடைகளும், வீடுகளும், நொறுக்கப்பட்ட சாலை விளக்குகளும், பாட்டில்களும், ரோடுகளில் சிதறல்களாய்த் தெரிந்து சாட்சி கூறின.

"சே... மனுசங்களைப் பாத்தியா...? எங்க பார்த்தாலும் மதச்சண்டையும், அரசியல் கலவரமும்! விட்டுக் கொடுத்தல்ங்கற வார்த்தையே இப்ப இல்லப்பா. பெருந்தன்மைக்குப் பேர் பெற்ற நம்ம நாடு இப்ப இந்த மாதிரி மனுஷத் தன்மையில்லாத செயல்களுக்கு இடையில மாட்டிக்கிட்டு மரண அவதிப்படுது... ம்... எல்லாம் சுயநலம்..." — பசவப்பா.

மிலிட்டரி ஜீப்பில் நான் முழுக்க ரோந்து சுற்ற வேண்டியிருந்தது. கலவரத்துக்கு முக்கிய காரணமானவர்களைக் கைது செய்தாயிற்று. இருந்தும் எந்த நிமிடம் என்ன நேருமோ என்ற அமில பலூன் அங்கே

அசைந்து கொண்டே இருந்தது.

மருத்துவமனைக்குச் சென்று பார்த்த போது, ஹோ... என்ன கொடுமை! மனித நேயத்திற்கு மரண சாசனம் விடுக்கும் இத்தகைய இன வெறிக்கு இத்தனை வேட்கையா? கோரம்... குழந்தைகளும், பெண்களும் தீயில் சிக்குண்டு, பாதி வெந்து... கால்களை இழந்து... உடல் குலைந்து... அந்த மரணாவஸ்தையின் கூச்சல் காதுகளின் செவிப்பறையைக் கிழிப்பதாய்...

**நா**ட்கள் கழியக் கழிய மக்களின் தினசரி வாழ்க்கையின் சகஜம் உயர ஆரம்பித்தது. ஒரு வாரம் முன்பு உயிர் போக அடித்துக் கொண்டவர்கள் இவர்கள் தானா என ஆச்சரியப்பட வைத்தது அவர்களின் நடைமுறை வாழ்க்கை!

எங்கிருந்தாலும் மனிதர்கள், மனிதர்கள் தான். அவர்களுக்கிருக்கும் சில விசேஷ குணங்கள் மாறுவதே இல்லை. நேற்று வரை விரோத மனப் பான்மையுடன் மனத்தில் நஞ்சைப் புதைத்திருந்தவர்கள் இன்று அமைதியை விரும்பிக் கைகோத்துக் கொண்டது ஆச்சரியமளித்தது; நிம்மதியாயிருந்தது.

''நாம் நாளைக்குக் காலை நம் கேம்புக்குத் திரும்பறோம்'', — பசவப்பா.

''அப்படியா?'', என்றபடி சீனிவாசன் தன் கிராமத்தை நினைத்துக் கொண்டான்.

'பெரிய மாமன் அடியாட்களை வைத்து நம் நிலத்தில் விளைந்திருக்கும் சோளப் பயிர்களை நாசம் செய்வாரோ, வைக்கோல் போருக்குத் தீ வைப்பாரோ...? ஏதாவது எசகு பிசகாக ஆகி, வெட்டு, குத்தில் இறங்கியிருந்தால்...' கிட்டத் தட்ட இரண்டு வாரமாகியும் ஊரிலிருந்து கடிதம் ஏதும் வராதது பயத்தை அளித்தது.

சுய நலம், சுய நலம்... சுய நலம் தானே எல்லாத் துன்பத்திற்கும் காரணம்! கடிதத்தைக் கண்டபோது இருந்த வேகம் இப்போது முற்றிலும் அகன்றிருப்பது ஆச்சரியத்தை அளித்தது.

மருத்துவமனையில் அடிபட்டுக் கிடந்தவர்களின் நினைவு மனத்தில் எழுந்தது. சே... தங்கள் தங்கள் சுய வலிமையைப் பரிசோதித்துக் கொள்ள இப்படி அடித்துக் கொள்ளத்தான் வேண்டுமா...?

பின் விளைவுகள் என்ற முதுகுகளை நாம் ஏன் திரும்பிப் பார்ப்பதே இல்லை?

**எ**ப்போதும் போல் விடியற்காலை எழுந்து உடற் பயிற்சி செய்து விட்டுக் குளித்து, ரெடியாகி, மிலிட்டரி ஜீப்பின் மீதேறி... எப்போதும் போல் இடது புற பின் ஓரத்தில் உட்கார்ந்தான்.

''சீனிவாஸ், சீனிவாஸ்...'' என முன்புறமிருந்து காப்டன் அழைக்கக் குனிந்தபடி இவன் கேட்க...

''நாம் திரும்ப நம் காம்ப்புக்குப் போனதும் உன் லீவை சாங்ஷன் பண்ணிடறேன். டோன்ட் ஒர்ரி.'' — என காப்டன் சொல்ல,

''வேண்டாம் சார். நீங்க லீவு தராம இருந்ததுனாலதான் என்னை நானே உணர முடிந்தது. காம்ப்புக்குப் போனதும் அந்த லீவு லெட்டரை ரிடர்ன் பண்ணிடுங்க... நான் கிராமத்துக்குப் போகலை'' என்றான்.

மனம் காலையில் போஸ்ட் செய்த இரு கடிதங்களின் முக்கிய வரிகளை நினைத்துக் கொண்டது.

'அப்பா, மாமா பொளியைத் தள்ளிச் சொன்னாலும் சரின்னு ஏத்துக்கோ! இந்த விட்டுக் கொடுத்தல் பயத்தால் அல்ல; மனித நேயத்தால்... நாமே மனமுவந்து அவனிடம் விட்டு விடுவதால், — மனித நேயத்தைப் பெறுகிறோம்; பாசத்தை வளர்க்கிறோம்... பின்னொரு நாள் விளக்குகின்றேன். இதையே தான் மாமாவுக்கும் எழுதியுள்ளேன். உடன் பதில்...'', — அன்பு மகன்.

கண்கள் வேகமாய்க் கடக்கும் சாலையை பார்த்துக் கொண்டிருந்தன. ஜீப் இலக்கை நோக்கிப் போய்க் கொண்டிருந்தது.



## முன்கதைச் சுருக்கம்:

பிரபு புதுதில்லி பத்திரிகையாளன். இலங்கையில் விமானத் தாக்குதலும் கலவரங்களும் உச்சக் கட்டத்தில் இருக்கும்போது செய்திசேகரிக்க அங்குபோய்ச் சேர்கிறான். வாழ்ப்பாணத்தில் ஜயசீலன் என்ற தமிழ் இளைஞனின் உதவியும் நட்பும் அவனுக்குக் கிடைக்கின்றன.

ஜயசீலன் போராளிக் கும்பல்களால் ஈர்க்கப் பட்டாலும் வன்முறையால் இலங்கைப் பிரச்சினைக்குத் தீர்வு கிடைக்காது என்று அனுபவ பூர்வமாக உணர்ந்து, அறிவு பூர்வமாக முடிவு செய்தவன். அவன் அப்பாவும், போராளிகள் பாஷையில் சொன்னால் — பிற்போக்குவாதி; அண்ணனோ முழுக்க முழுக்கத் தீவிரவாதி. குழப்பமும் வேதனையும் நிறைந்த ஜயசீலனின் வாழ்க்கையில் வீசும் தென்றலாக இருப்பவள் பக்கத்து வீட்டு யுவதி சீலியா.

சீலியாவையும் ராணுவம் கடத்திச் சென்றதும் ஜயசீலனின் வாழ்க்கை அனர்த்தமாகிறது. அவள் ஒருவேளை தப்பி இந்தியாவில் ஏதேனும் அகதி முகாமுக்குப் போயிருக்கலாம் என்ற ஒரே நம்பிக்கையில் அவன் பிரபுவுடன் கள்ளத்தோணி ஏறி ராமேஸ்வரத்தில் இறங்கி, மண்டபம் அகதி முகாமுக்குப் போய்ச் சேர்கிறான். அங்கே சீலியாவின் தம்பி ஜோஸப்பைப் பார்க்கிறான்.

# நிற்க நிழல் வேண்டும்



# 12

ஜயசீலன் ஒரு விநாடி திக்குமுக்காடிப் போனான். வார்த்தைகளைக் கோத்து வெளிப் படுத்த முடியாமல் குரல் தொண்டைக்குள் சிக்கித் தவித்தது. கண்களில் நீர் நிறைந்து ஒரு கேவலுடன் மார்பு விம்மிற்று. ஜுரம் வந்திருந்த பலவீனத்தில் விலா எலும்புகள் சுரீரென்று வலித்தன.

''தம்பி ஜோஸப்!''

சரேலென்று ஜோஸப் திரும்பினான். வியப்பும் சந்தோஷமுமாய், முகம் மலர, கண்கள் விரிய அருகில் வந்தான்.

''சீலன் அண்ணா! எப்ப வந்தீர்?''

சீலன் உடனடியாகப் பதில் சொல்ல முடியாமல் உணர்ச்சி மேலிட்டு அவனைத் தழுவிக் கொண்டு 'இனிமேல் என்னால் தாங்க முடியாது' என்பது போலக் கண்ணீர் பெருக்கினான். அந்தக் கண்ணீரே ஒரு புனித ஸ்நானம் போல் தோன்றிற்று. இத்தனை நாட்கள் காத்த விரதத்திற்குக் கிடைத்த பலனுக்கான நன்றிப் பெருக்காக, நல்லூரடி கந்தசாமி ஆண்டவருக்கான அஞ்சலி யாக...

''சீலியாவைப் பார்த்தீங்களா அண்ணா?''

கைகளை விடுவித்துச் சுயப்பிரக்ஞை அடைந்து முகம் பளபளக்க ஜயசீலன் கேட்டான்.

''இல்லையே! அவளைத் தேடிக் கொண்டு தானே இங்கே வந்திருக்கேன்! வீட்டிலே இருக்காளா?''

ஜோஸப்பின் முகம் கன்டிப் போயிற்று.

ஜயசீலன் கலவரத்துடன் அவனுடைய தோளைப் பற்றினான்.

''சீலியா இங்கே இல்லே?''

தன் கண்ணில் நிறைந்த நீரை மறைக்க ஜோஸப் தரையைப் பார்த்தான்.

''இல்லே!''

சற்று முன் மந்திரக்கோலால் தட்டப் பட்டது போல் எழும்பிய மாளிகைகள் எல்லாம் சரசரவென்று கீழே விழுந்தன.

''இங்கே அவ வரவே இல்லையா? ஆபீஸிலே விசாரிச்சியா?''

''ஓம். அவர்கள் என்னென்னவோ கேள்வி கேட்கிறார்கள். எனக்கு ஒண்ணும் விளங்க இல்லே.''

ஜயசீலன் சற்று நேரம் மௌனமாக நின்றான். பிறகு, ஜோஸப்பின் தோளைப் பற்றி மெல்லிய குரலில் தன்னுடைய ஏமாற்றத்தை வெளியில் காண்பிக்காமல் சொன்னான்.

''சீலியா இந்தியாவுக்கு வந்திருக்கலாம் என்ற ஆசையிலேதான் நான் இங்கே வந்தேன். அந்த ஆசையைக் கிளப்பி விட்டது உன் அப்பா. தோணிக்கும் அவர்தான் பணம் கொடுத்தார்.''

''அம்மாவும் அப்பாவும் சுகமா?'' கேட்கும் போதே ஜோஸப்பின் குரல் கம்மிற்று.

''ஓம்'' என்றபடி ஜயசீலன் அவனை ஆறுதலாக அணைத்தான்.

ஜோஸப் ஓசைப்படுத்தாமல் அழுதான்.

''எனக்கு மீளப் போகணும்!''

''அது இப்ப இயலவே இயலாது தம்பி!'' என்று ஜயசீலன் லேசான பெருமூச்சுடன் தலையசைத்தான். ''ஆகாசத்திலே பாம்பர் பறக்காத நாளே இல்லே. வீட்டுக்குள்ளே இருக்கக் கூட இயலாம, பதுங்கு குழியிலே நாளெல்லாம் இருக்கணும். நீ இங்க வந்தது நல்லது. மறுபடியும் படிக்க முடிகிறதுதானே?''

ஜோஸப் தலையைக் குனிந்திருந்தான். சிறகாய் வளைந்த கரிய இரப்பைகளின் விளிம்பில் நீர் முத்துத் தெரிந்தது.

''வீட்டை விட்டு வந்து, எனக்கு ஒண்ணும் பிடிக்க இல்லே. உயிருக்கு ஆபத்து இல்லே எண்டு எத்தனை காலம் இங்கிருக்கிறது?''

''இங்கே யார் கூட இருக்கே?''

''புனிதா அத்தைக் குடும்பம் இங்கேதான் இருக்கு. அவங்க கூட இருக்கேன்.''

''உங்கப்பாவுடைய ஒன்றுவிட்ட தங்கை தானே? பின்னே உனக்கென்ன கஷ்டம்?''

''கஷ்டம் எண்டா, சொந்த நாட்டை விட்டுப் பரதேசி போலப் பதுங்கி வந்து



வாஸந்தி

இங்கே எட்டடிக்கு எட்டடி வீட்டிலே அஞ்சாறு பேர் இருக்கிறது கஷ்டம்தானே?"

"கொஞ்ச நாள் பொறுத்துக்கோ. இங்கே நேரத்தை வீணாக்காமல் படிக்கலாம். தொழில் கத்துக்கலாம். தொழில் பார்க்கலாம். இலங்கையிலே சமாதானம் வந்த பிறகு மீளப் போகலாம்."

"வருமா?"

தன் மனசே கேட்கும் கேள்வியோ என்று ஒரு நிமிஷம் ஜயசீலன் அதிர்ந்தான்.

"வரும் எண்டு தோண இல்லே!" என்றான் ஜோஸப். மறுபடியும் அப்பாவையும் அம்மாவையும் அக்காவையும் பார்ப்பேன் எண்டு தோண இல்லே."

"இப்படிக் கதைக்காதே ஜோஸப்! நானும் கன பயத்தோடுதான் வந்திருக்கேன்."

"சீலியா அக்கா உயிரோடு இருப்பா எண்டு நீர் நினைக்கிறீரா?"

அவன் திடுக்கிட்டு ஜோஸப்பைப் பார்த்தான். முகம் இன்னும் இளசு. மீசையின் நிழல் கூட சாயவில்லை. ஆனால் பழம் தின்று கொட்டை உமிழ்ந்த பேச்சாக இருந்தது.

"இருப்பா எண்ட நம்பிக்கையிலே தான் இருக்கேன்!"

ஜோஸப் பதில் ஏதும் சொல்லாமல் அவனைக் கூர்ந்து பார்த்தபடி நடையைத் தொடர்ந்தான்.

"உம்முடைய சகவாசத்தினால்தான் என் அக்கா காணாமல் போனாள்" என்று இவன் நினைக்கலாம். அதனால் என்மேல் வெறுப்பு கூடக் கொள்ளலாம்...

அவன் சுற்றுப்புறத்தை ஏதும் பிரத்தியேக ஆர்வமில்லாமல் பார்த்தான்.

வரிசை வரிசையாகக் கட்டப்பட்ட காரை வீடுகள் தெரிந்தன. ஓர் அறையும் அதை ஒட்டிய வெளித் திண்ணையும் தெரிந்தன. அறைக்குள்ளேயே சமையல் செய்யத் தனி இடம். அநேகம் பேர் மதிய உணவை முடித்து வெளித் திண்ணையில் அமர்ந்திருந்தார்கள். இலங்கை நிலவரத்தைக் கிட்டத்தட்ட மறந்துவிட்ட சரளத்துடன் ஏதோ அக்கப்போரில் லயித்திருந்தார்கள்.

சற்று தூரம் நடந்ததும் ஒரு பெரிய கூடம் தெரிந்தது. தொழிற் பயிற்சிக்கூடம் என்று பெரிய பலகையில் எழுதப்பட்டிருந்தது.

"என்ன தம்பி இது?"

"இங்கே தொழில் செய்யப் பயிற்சி கொடுக்கிறாங்க. தச்சு வேலே, தையல், தட்டெழுத்து, சுருக்கெழுத்து, ரேடியோ, டி. வி. ரிப்பேர் செய்யறது எல்லாம்..."

"கட்டணம் உண்டா?"

"இல்லே."

"ஆ. இது ரொம்ப நல்ல காரியம்."

"ஆனா நிறையப் பொடியன்கள் இங்கே போகக் காணும். பெண்கள்தான் அதிகமாப் போறது."

"ஏன்?"

"என்னவோ, நீரே பார்ப்பீர். பாதி நேரம் பொடியன்கள் திண்ணையிலே இருந்து சும்மா கதைச்சிட்டிருப்பான்கள். இங்கேயும் வம்புக்கு அலேகிறான்கள்."

ஜயசீலன் வியப்புடன் ஜோஸப்பைப் பார்த்தான். இத்தனை கூர்மையான பார்வை இந்த வயதில் இருப்பதே சரித்திர காரணத்தால் என்று நினைத்துக் கொண்டான். அந்தப் பொடியன்கள் வம்புக்கு அலேவதும் சரித்திரக் காரணத்தால் என்பதும் இவனுக்குத் தெரியும். இந்த ஊமைக் கோபத்துக்கு அதுதான் விளக்கம்.

"இன்னும் எவ்வளவு தூரம்?"

"இந்தத் தெருதான். மூன்றாவது வீடு."

ஜோஸப்பை விடச் சிறியவர்களான புனிதாவின் குழந்தைகள் திண்ணை வெயிலில் விளையாடிக் கொண்டிருந்தார்கள்.

ஜயசீலன் வெளியிலேயே தயங்கி நிற்க, ஜோஸப் உள்ளே சென்றான்.

"என்ன இத்தனை நேரமாச்சு உனக்கு இண்டைக்கு?" என்றாள் புனிதா.

"சீலன் அண்ணேத் தெரியுமா? எங்க பக்கத்து வீட்டிலே இருந்தாங்களே. அந்த அண்ணன் இங்கே வந்திருக்கார்."

புனிதா சரேலென்று வெளியே வந்தாள்.

ஜயசீலனுக்குப் பக்கென்றிருந்தது. தளதளவென்றிருப்பாள். எப்படி வாடி விட்டாள்?

அவனைக் கண்டதும் முகம் மலர்ந்து, "ஜயசீலனு, வாருங்கோ!" என்றாள். "நீரும் வந்து சேர்ந்தீரா?" என்னும் போது கண்கள் கலங்கின. "அங்கே நிலைமை இன்னும் மோசம்தானே?"

"ஓம்!"

"இப்படி இருங்கோ!" என்று அவள் ஒரு கிழிந்த பாயை விரித்தாள். "ஜோஸப் நீ சாப்பிட வா. சீலனுக்கும் தட்டு வை."

"இல்லே. நான் சாப்பிட்டாச்சு" என்றான் ஜயசீலன்.

"ஓ. ஆமாம். வந்து சேர்ந்ததும் போடு வாங்க. இங்கே எல்லாம் நன்றாய்க் கவனிக்கிறார்கள்தான். நமக்குத்தான் வீட்டையும் வாசலேயும் விட்டுப்புட்டு உசிருக்குப் பயந்து இங்கே ஒண்ட வந்ததாலே, ஒட்ட மாட்டேங்குது. திரும்பிப் போயிட மாட்டோமான்னு இருக்கு. ஆனா இங்கே பசங்களுக்குப் பள்ளிக்காவது போக முடியுது. பயமில்லாம இருக்கு. அதுதானே பெரிய விஷயம் இப்ப?"

ஜோஸப்புக்குப் பரபரப்பாகச் சாப்பாடு போட்டுக் கொண்டே அவள் சொன்னாள்.

"இங்கே வீடு கிடைக்கிறது ரொம்பக் கஷ்டம். இடம் இல்லே எண்டு வேற முகாமுக்கு அனுப்பி விடுவார்கள். தம்பி கூச்சப்பட வேண்டாம். இங்கேயே இருந்துக்கலாம்."

அவன் தயக்கத்துடன் அந்த ஒரே அறையையும் வெளியில் இருந்த குழந்தைகளையும் பார்த்தபடி அமர்ந்தான். அவனுக்குத் தெரிந்த ஆட்கள் யாரும் இங்கு இல்லேயென்றால் வேறு முகாமுக்கு அனுப்புவதாக அதிகாரிகள் சொல்லியிருந்தார்கள். இங்கு இருக்கும் ரெஜிஸ்தரையெல்லாம் பார்க்காமல் போக அவனுக்கு இஷ்டமிருக்கவில்லை.



''வீட்ல அம்மாவுக்கும் மனைவிக்கும் சண்டை வந்தால் நீங்க யார் பக்கம் பேசு வீங்க?''

''அது சண்டை போடுகிற நேரத்தைப் பொறுத்தது!''

— பொடுசி

''குழந்தைகளுடைய அப்பா மகேசுவரன் எங்கே?''

''அவரா? போன வருஷம் ஜேர்மனிக்குப் போனார். பிறகு தகவலே இல்லே. இப்ப எங்கே இருக்கார் என்டு தெரியல்லே. ஜோஸப்புடைய அப்பாதான் 'இங்கே செல்லடியிலே நீயும் குழந்தைகளும் ஏன் சாகணும்'னு சொல்லி, கட்டாயப்படுத்தித் தோணி பிடிச்சு ஏத்தி விட்டாங்க.''

அவள் தலையைக் குனிந்தபடியே பேசினாள். கணவன் மீண்டு வருவான் என்கிற நம்பிக்கை இவளுக்கும் இல்லை என்று அவன் நினைத்துக் கொண்டான்.

ஜோஸப்பையும் மற்ற குழந்தைகளையும் மீண்டும் பள்ளிக்கு அனுப்பிவிட்டு அவள் சாப்பிட உட்கார்ந்தாள்.

மின் விசிறி இல்லாததால் ரொம்பவும் புழுக்கமாக இருந்தது. பட்டாளம் போல் ஈக்கள் தரையில் அமர்ந்திருந்தன.

அவள் ஒரு கையால் ஈக்களை விரட்டியபடியே சாப்பிட்டாள். திடீரென்று நினைவு வந்தவள் போல்,

''சீலியாவைப் பத்தி ஏதாலும் தகவல் தெரிஞ்சுதா சீலன்?'' என்றாள்.

''இல்லே. அவ இங்கே இருப்பா என்ற நம்பிக்கையிலே நான் இங்கே வந்தேன்.''

''இல்லையே! இருந்திருந்தா என் கூடவே இருந்திருப்பாளே! எனக்கும் சௌகர்யமா இருந்திருக்கும்! ஆமி கொண்டுட்டுப் போன பொண்ணு இங்க எப்படி வந்திருப்பா ஜயசீலன்!''

தன்னுள் எழுந்த உணர்ச்சிகளைக் கட்டுப்படுத்திக் கொண்டு ஜயசீலன் தலையைக் குனிந்தபடி சொன்னான்.

''சில ஆட்களை ஆமி அனுப்பிவிட்டது. அந்த மாதிரி வழுக்கிட்டு வந்திருந்தா மறுபடி வீட்டுக்கு வரப் பிடிக்காம இங்கே எங்கேயாவது வந்திருப்பாளோண்டு சந்தேகம்!''

புனிதா தீவிரமாகத் தலையசைத்தாள்.

''சீலியா தைரியசாலி. அப்படியெல்லாம் செய்யக் கூடிய ஆளில்லே.''

தைரியத்துக்கும் மான ரோஷ உணர்வுக்கும் நிறைய வித்தியாசமுண்டு என்று நினைத்து அவன் பேசாமலிருந்தான்..

''நான் மட்டும் இப்படிக் குத்துக் கல்லா உட்கார்ந்திருக்கிறது எனக்கே பாரமாயிருக்கு. குத்தம் செஞ்ச மாதிரி இருக்கு!''

புனிதா அருகில் வந்து உட்கார்ந்து கொண்டாள். அவன் தோளை லேசாகத் தொட்டு, ''நீர் அப்படியெல்லாம் நினைக்கக் கூடாது'' என்றாள் அனுதாபத்துடன்.

அவன் கூச்சத்துடன் சற்று விலகி உட்கார்ந்தான்.

புனிதா பேசிக் கொண்டு போனாள். ''உங்க வீட்டிலே நடந்ததையெல்லாம் கேள்விப்பட்டேன். அதுக்கப்புறம்தான் நானும் பயந்து பிள்ளைகளைக் கூட்டிக்கிட்டு இங்கு வந்து சேர்ந்தேன். தேவநேசன் போராளிக் கும்பல்லே சேர்ந்திருக்கான் என்கிற விஷயத்துக்காக உங்கம்மா பயந்து நடுங்குவாங்க. ஆயுதம் ஏத்திப் போராடறதே தப்பு என்பார் குகதாஸன் மாமா. அவருடைய மகன்தான் கடைசியிலே தீவிரவாதி ஆனான். அதுக்குத்தான் குடும்பம் மொத்தத்துக்கும் தண்டனை. நீ இதிலே சேரவே கூடாதுன்னு மாமா நினைச்சார். கடைசியிலே உன்னையும் அந்தத் தொத்து நோய் பிடிச்சுக்கிட்டது.''

''ஆனா இன்னும் நான்தான் உசிரோட இருக்கேன்.''

''அது அதிசயம்தான். ஆயுசு கெட்டின்னுதான் சொல்லணும்.''

''எனக்குப் பதிலாத்தான் சீலியாவைக் கொண்டுட்டுப் போனது.''

புனிதா அவனை மெல்லிய வியப்புடன் பார்த்தாள்.

''அதுமட்டும் காரணமில்லேண்டு நினைக்கிறேன். ஒரு பெண் இயக்கத்திலேயும் சீலியா இருந்தா. சில போராளிக் கும்பல்களிடம் இருக்கிற பிற்போக்கான எண்ணங்களைக் காரசாரமாத் தாக்குவா. இந்தப் பொண்ணு வம்பிலே மாட்டிக்கப் போகுதேன்னு எனக்கே கன பயமாயிருக்கும்.''

தூக்கி வாரிப் போட்டது ஜயசீலனுக்கு.

அவன் நம்ப முடியாத திகைப்புடன் அவளைப் பார்த்தான். சீலியா எந்த இயக்கத்திலேயும் இருந்ததாக அவனுக்குத் தெரியாது. மாதத்துக்கு ஒரு முறை அவளைப் பார்க்கச் செல்லும் போதெல்லாம் அழுவாள். அவளைப் பார்க்கும் ஒவ்வொரு முறையும் ஒரே புலம்பல்தான்.

''வேண்டாம் ஜயசீலன். இந்தக் கும்பல்லே சேராதே. இந்த வன்முறையிலே தர்மமோ நியாயமோ இல்லே.''

முன் வைத்த காலைப் பின் வைக்க முடியாத நிலை அவனுக்கு.

''நா வழுக்கிட்டு வந்தேன்னு என்னைக் கும்பல் உயிரோடு வைக்காது சீலியா!''

அவள் மேலும் அழுவாள். ''நமக்கு விடிவு காலம் எப்போ சீலன்? வன்முறையோட தன்மையே இதுதான்னு மாணிக்கம் மாமா சொல்வார். தன்னைச் சார்ந்தவங்களையே அழிக்கும்! நாம எங்கேயாவது ஓடிப் போகலாம் சீலன்!''

எண்ணம் செயலாவதற்குள் அவள்தான் போய் விட்டாள்.

''ஆமிக்காரன் அவளைக் கொண்டுட்டுப் போயிட்டதா நாம நினைக்கிறோம். கொண்டுட்டுப் போறதை யார் பார்த்தார்கள்? வேற யாராவது கொண்டு போயிருக்கக் கூடாதா?'' — புனிதா கேட்டபோது அவன் மீண்டும் அதிர்ந்தான்.

(தொடரும்)



* அரிவாளில் உள்ள இரத்தக்கறையைச் சோதனை செய்தல்.

* FORENSIC SCIENCE என்பது இலத்தீன் சொல்லான FORENSIS என்பதிலிருந்து வந்தது. இதற்குப் பொது இடம்/அல்லது சந்தை என்று பொருள். ஒவ்வோர் ஊரிலும், சந்தை கூடும் இடத்திலோ, அல்லது வேறு ஏதாவது ஒரு பொது இடத்திலோதான் முன்பு குற்றங்கள் விசாரிக்கப்பட்டுத் தண்டனை வழங்கப்பட்டு வந்தது. அதனால் குற்றங்களைக் கண்டுபிடிக்க உதவும் தடய இயல் விஞ்ஞானத்துக்கும் இப் பெயர் வந்தது.

# மௌனச் சாட்சி

## 1

## "என் விஜயாவை யாரோ கொன்னுட்டாங்க!"

வையம்பட்டி கிராமத்தின் தெரு நாய்கள் அந்த நள்ளிரவு நிசப்தத்தைக் கிழித்துக் கொண்டு திடீரென்று கத்த ஆரம்பித்தன. தொடர்ந்து, ஊர் நடுவிலிருந்த வேலப்பன் வீட்டிலிருந்து "ஐயோ! ஐயோ!" என்று அலறல் சப்தம்... "என் விஜயாவை யாரோ கொன்னுட்டாங்க! ஐயோ கொலே! விஜயா! விஜயா! என்ன அக்கிரமம் இது!" என்று வேலப்பனின் குரல் ஓங்கி ஒலித்தது.

அக்கம்பக்கத்து வீடுகள் விழித்துக் கொண்டன. விடிவுகளில் கூடிய ஜனக் கூட்டத்தைப் பார்த்துக் கதறினான் வேலப்பன். "என் விஜயாவை யாரோ சுட்டுக் கொன்னுட்டான்! பாவி! திடீர்னு வெடிச் சத்தம் கேட்டு எழுந்தேன். பக்கத்துல படுத்திருந்த விஜயா ரத்த வெள்ளத்தில் கிடக்கா! அவசரமா எழுந்து, வெளி விளக்கைப் போட்டுட்டு, ஜன்னல் வழியாப் பார்த்தப்ப ஓர் ஆள் கையில் துப்பாக்கியோட ஓடிக்கிட்டிருந்தான்... ஐயோ! என் விஜி போயிட்டாளே...!"

— அதிர்ச்சியும் கோபமும் வேலப்பனை மாற்றி மாற்றித் தாக்கத் துவண்டு போய் விஜயாவின் சடலத்திற்கு அருகே சுருண்டு விழுந்தான்.

போலீஸ் வந்தது. விஜயாவின் சடலம் பிரேதப் பரிசோதனைக்குச் சென்றது. எல்லோருக்கும் மருதமுத்துவின் பேரில் தான் சந்தேகம். சில தினங்களுக்கு முன்னால் வேலப்பனுக்கும் அவனுக்கும் இடையே மூண்ட மனஸ்தாபம் பெரிய சண்டையாகி, மானப் பிரச்னையாக விசுவரூபமெடுத்து விட்டது. அடி தடியில் இறங்கியவர்களை ஊரார் சமாதானப்படுத்த, மருதமுத்து, "உன்னைத் தீர்த்துக் கட்டிடறேண்டா!" என்று கறுவியபடி சென்றிருந்தான்.

"மருதமுத்து எனக்கு வைச்ச குறிதான் என் விஜயாவைப் பலியாக்கிடுச்சு" என்று தழுதழுத்துச் சத்தியம் செய்தான் வேலப்பன். ஊர் மக்களும் ஒத்து ஊதினார்கள். போலீஸ் மருதமுத்து வீட்டைச் சோதனை போட்ட போது ஒரு கைத்துப்பாக்கியும் அகப்பட்டது! வையம்பட்டி மக்களின் வழக்காடு மன்றத்தில் மருதமுத்து குற்றவாளி என்று தீர்ப்பே ஆகிவிட்டது.



இன்ஸ்பெக்டர் ராமரத்னம் தீவிர யோசனையில் ஆழ்ந்திருந்தார். எதிரே வையம்பட்டி விஜயாவின் பிரேதப் பரிசோதனை ரிப்போர்ட், பிரேதத்தின் புகைப் படங்கள், மற்றும் அந்த வழக்குத் தொடர்பான எல்லாக் குறிப்புக்களும் இருந்தன. குறிப்புக்களை மீண்டும் ஒரு முறை அவர் படிக்க ஆரம்பித்தபோது, "என்ன இன்ஸ்பெக்டர், குற்றவாளி யாருன்னு சொன்னா எனக்கு என்ன தர்றீங்க?" என்றபடி உள்ளே நுழைந்தார் தடய இயல் நிபுணர் ராஜு.

"வாங்க ராஜு! உங்க ரிப்போர்ட்டுக்காகத் தான் காத்திருக்கேன். நீங்க தர்ற தகவலும்

# யங்கள்

என் மனசுல போட்டிருக்கிற கணக்கும் பொருந்தினால், 'நான் குற்றவாளி இல்லே'ன்னு சத்தியம் பண்ற மருதமுத்துவுக்குத் தான் முதல்ல நிம்மதியாயிருக்கும்." என்றார் ராமரத்னம்.

"இன்ஸ்பெக்டர், விஜயாவைச் சுட்டவர் பன்னிரண்டு அடி தூரத்துக்குள்ளிருந்து தான் அவளைச் சுட்டிருக்க வேண்டும். இந்த குளோஸ் அப் போட்டோவில் பாருங்க, சுடப்பட்ட இடத்தைச் சுத்திக் கறுப்புப் புள்ளிகள்! பன்னிரண்டு அடிக்கு அப்பாலிருந்து சுட்டால் இது மாதிரி புள்ளிகள் ஏற்படாது."

"அ ப் ப டி ன் னா ராஜு, விஜயாவைச் சுட்டவன் அவ படுத்திருந்த அறைக்குள்ளிருந்தபடிதான் சுட்டிருக்கான். மார்கழி மாசக் குளிருக்குப் பயந்து வேலப்பனும், விஜயாவும் ஜன்னலிலிருந்து எவ்வளவு தூரம் விலகிப் படுக்க முடியுமோ அவ்வளவு தூரம் விலகிப் படுத்திருந்தாங்க."

"இன்னொரு விஷயமும் இருக்கு இன்ஸ்பெக்டர்! மருதமுத்துவுடைய துப்பாக்கியை ஆராய்ந்து பார்த்ததுல அதைச் சமீபத்தில் உபயோகப்படுத்தினதுக்கான அடையாளமே இல்லே. நீங்க எதுக்கும் இன்னொரு முறை வேலப்பன் வீட்டைப் பரிசோதனை செய்ய ஏற்பாடு பண்றது நல்லதுன்னு நினைக்கிறேன்."

வேலப்பன் வீட்டைத் தலைகீழாக் கியதில், உபயோகித்த துப்பாக்கி தோட்டா உறைகள் ஏழெட்டு அகப்பட்டன. தானும் ஒரு பறவை சுடும் துப்பாக்கி வைத்திருந்த தாகவும் அது இரண்டு ஆண்டுகளுக்கு முன்பு காணாமல் போய்விட்டதாகவும் கூறினான் வேலப்பன்.

தோட்டா உறைகளைத் தடய இயல் நிபுணர்கள் ஆராய்ந்த போது, அவற்றைச் சுட உபயோகிக்கப்பட்ட துப்பாக்கியில் சிறிய ஸ்க்ரூ ஆணி ஒன்று துருத்திக் கொண்டிருக்க வேண்டும் என்று ஒரு சிறு அடையாளத்தைக் கொண்டு கூறினார்கள். மருதமுத்துவின் துப்பாக்கியில் அப்படி ஒரு ஸ்க்ரூ நீட்டிக் கொண்டிருக்கவில்லை!

இன்ஸ்பெக்டர் ராமரத்னம் இம்முறை தாமே வேலப்பன் வீட்டை அங்கம் அங்கமாகச் சோதனை செய்தார். கொல்லைப்புறத்துப் புதர்களை எல்லாம் வெட்டித் தள்ளச் சொன்னார்; சாக்கடையைக் கிளறிப் பார்த்தார்; சமையலறை புகை போக்கியில் ஏறித் துழாவினார். ஒட்டடையும் கரித்தூளும் கண்ணில் விழுந்தது தான் மிச்சம்.

"முகம் கழுவக் கொஞ்சம் தண்ணி குடுப்பா சீக்கிரம்!" என்று கான்ஸ்டபிள் ஒருவனை ஏவ, அவன் கிணற்றிலிருந்து தண்ணீர் சேந்திவரப் பின்பக்கம் போனான்.

"ஏட்டு ஐயா! இதோ நான் தர்றேன் தண்ணி. அங்கே போகாதீங்க!" என்று வேலப்பன் அவசரமாகச் சமையலறைத் தவலையிலிருந்து ஒரு சொம்புத் தண்ணீர் மொண்டுக் கொடுத்த போது... அவன் குரலில் ஏன் இவ்வளவு படபடப்பு?

இன்ஸ்பெக்டர் ராமரத்னம் கான்ஸ்டபிளை அழைத்தார்.

"டூ நாட் ஃபோர்! டிரெஸ்ஸைக் கழட்டிட்டுக் கிணத்துல இறங்கித் தேடு!"

"சார்...! என்ன...?"

"சொல்றபடி செய்யப்பா!"

அடுத்த ஐந்தாவது நிமிடம் டூ நாட் ஃபோர் ஒரு கைத்துப்பாக்கியுடன் கிணற்றிலிருந்து வெளிப்பட்டார். அந்தத் துப்பாக்கியில் ஒரு ஸ்க்ரூ ஆணி அழகாகத் துருத்திக் கொண்டிருந்தது! இன்ஸ்பெக்டர் ராமரத்னத்தின் இரும்புக் கரங்கள் வேலப்பனைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டிருந்தன.

ஒரு வாரம் கழித்து வையம்பட்டி பொதுக் கிணற்றில் தண்ணீர் சேந்திப் போக வந்தாள் கோமதி.

"இந்தச் சிறுக்கிக்காகத்தான் கட்டின பொண்டாட்டியையே கொலை பண்ணிட்டு ஜெயிலுக்குப் போயிருக்கான்டி வேலப்பன்" என்று பலம் கொண்ட மட்டும் குரலை உயர்த்திச் சொல்லிவிட்டுக் காறித் துப்பினார்கள் கிணற்றடிக்கு வந்திருந்த பெண்கள்.

**குற்றங்களைக் கண்டுபிடிக்க தடய அறிவியல் எப்படி உதவுகிறது என்பதை உணர்த்தும் உண்மைக் கதைகள். பெயர்கள் மட்டும் கற்பனை.**

**தொகுப்பு: ஜூலி.**

* விடியோ காமெரா உதவியுடன் மண்டை ஓடு ஆராய்ச்சி.



* இந்தியாவின் மற்ற மாநிலங்களில், தடய அறிவியல் துறை, போலீஸ் துறையின் ஓர் அங்கமாக மட்டுமே இயங்கி வரும்போது, தமிழ் நாட்டில் மட்டும்தான் இதற்கு ஒரு தனித்துறை அந்தஸ்து அளிக்கப்பட்டுள்ளது.

## 2 நைலக்ஸ் புடைவையால் வந்த வினை!

"ஐயோ!' நைலக்ஸ் புடைவையைக் கட்டிக்கிட்டுச் சமைக்காதேன்னு படிச்சுப் படிச்சுச் சொல்லுவேனே! இந்தப் பொண்ணு அதைக் கேக்காம இப்படி அநியாயமா போயிட்டாளே.... செல்வம்! அடேய் மகனே! இப்படியா ஒரு வருஷத்துக்குள்ளே உன் கல்யாண வாழ்க்கையில ஒரு பயங்கரம் வரணும்?'' அரற்றி அங்கலாய்த்துக் கொண்டிருந்தாள் ராஜம்.

ஸ்டவ் பற்ற வைக்கும்போது தீ விபத்து ஏற்பட்டு, கோர மரணம் அடைந்திருந்தாள் சாந்தி. அவள் கணவன் செல்வம் இடிந்து போய் உட்கார்ந்திருந்தான். அதிர்ச்சியில் அவனுக்கு அழுகைகூட வரவில்லை. அதிர்ச்சிக்குக் காரணம் மனைவியின் இழப்பு மட்டுமல்ல — மாமியாரின் அபாண்டச் சொல்லும்தான் — இழவு வீடு என்றும் பாராமல் கத்திக் கொண்டிருந்தாள் கனகம்:

''ஸ்கூட்டர் வாங்கிக் கொடுக்கலேன்னு என் பொண்ணை அநியாயமாக் கொன்னுட்டாங்களே. ஐயோ இதைக் கேட்பாரில்லையா?''



கனகத்தின் கணவர் ராமச்சந்திரன் அவள் வாயை அடைக்க முயன்று தோற்றுக் கொண்டிருந்தார்.

''கனகம்! சும்மாயிரு. குகநாதனும் ராஜமும் மாணும் முதல்ல நம்ப குடும்ப சினேகிதங்க. அப்புறம்தான் சம்பந்தி. விஷயம் தெரியாம அவங்க பேர்ல அநியாயமாப் பழியைச் சுமத்தாதே.''

ராமச்சந்திரனின் வாய் பேசினாலும், தினம் தினம் வரதட்சணைக் கொடுமை பற்றிய செய்திகளைப் படித்து ஊறிப் போயிருந்த அவர் மனத்திலும் ஓர் ஓரத்தில் சந்தேகம் முளைவிட்டுத்தானிருந்தது.

சாந்தியும் கடந்த இரண்டு மாதங்களாகக் கேட்டுக்கொண்டுதான் இருந்தாள். '' அப்பா அவருக்கு ஒரு ஸ்கூட்டர் வாங்கிக் கொடுங்கப்பா! ப்ளீஸ். கொஞ்சம் நாளாவே அத்தையும் மாமாவும் ஜாடை மாடையா ஸ்கூட்டர் வேணும்னு தினமும் சொல்லிக்கிட்டிருக்காங்க.''

''சாந்திம்மா! உன் கல்யாணத்துக்கு வாங்கின ஐம்பதாயிரம் கடனே இன்னும் கழுத்து மேல உட்கார்ந்திருக்கு. இப்ப நான் ஸ்கூட்டர் வாங்க முடியுமாடிக் கண்ணு? கொஞ்ச காலம் பொறுத்துக்கோ; நிச்சயம் வாங்கித் தர்றேன். நான் வேணா குகநாதன் கிட்டேயும் மாப்பிள்ளைகிட்டேயும் வந்து பேசட்டுமா?''

''ஐயோ! வேணாம்பா. நான் சமாளிச்சுக்கறேன்.''

— சாந்தியோடு நடந்த உரையாடல் ராமச்சந்திரனின் காதுகளில் உயிரோட்டத்துடன் ஒலித்துக் கொண்டிருந்தது.

திருமணமாகிப் பத்து வருடங்களுக்குள் ஒரு பெண் இறந்தால் போலீஸ் விசாரணை நடத்த வேண்டும் என்ற சட்டத்தின்படி சாந்தியின் மரணத்தையும் போலீஸ் விசாரித்தது.

''சார்! என் பொண்ணு, மாப்பிள்ளை ஸ்கூட்டர் கேட்கிறார், மாமியார் மாமனார் நச்சரிக்கறாங்கன்னு சொன்னது என்னவோ உண்மைதான். ஆனால் குகநாதன் என் நண்பர். அவரோ, அவர் மனைவியோ, என் மாப்பிள்ளையோ பாதகமான செயலுக்குத் துணிய மாட்டாங்கன்னு எனக்குத் தோணுது. ஆனால் என் மனைவி இது கொலை



தான்னு நம்பரு. அவளோட தீவிரம் என் மனசுலயும் சந்தேகத்தை ஏற்படுத்துது'' — இன்ஸ்பெக்டர் வேலுசாமியிடம் கூறினார் ராமச்சந்திரன்.

''கொஞ்சம் பொறுமையா இருங்க ராமச்சந்திரன். பிரேதப் பரிசோதனை ரிபோர்ட்டும் தடய இயல் நிபுணர்களோட ரிபோர்ட்டும் வந்துட்டா எல்லாம் தெளிவா ஆயிடும்'' — இன்ஸ்பெக்டர் ஆசுவாசப்படுத்தினார்.

''எப்படியோ சார்! என் மகளை இழந்த துக்கத்தையே என்னால தாங்க முடியல... அவளோட மரணம் விபத்து இல்லேன்னு தெரிஞ்சா எனக்கு வாழ்க்கையிலேயே நம்பிக்கை போயிடும்!''

ராமச்சந்திரனுக்கு வாழ்க்கை அர்த்த மற்றதாகிப் போகவில்லை. சாந்தி விபத்தில் தான் இறந்தாள் என்பது விஞ்ஞான பூர்வமாக ஆராய்ந்து தெளிவுபடுத்தப்பட்டது.

பிரேதப் பரிசோதனையின் போது சாந்தியின் உடலில் தீக்காயங்கள் பெரும்பாலும் முன்புறத்திலேயே இருப்பது கண்டறியப் பட்டது. அதோடு தலையின் பின்புறத்தில் பலமாக அடிபட்டு ரத்தம் நிறையவே வெளியேறியிருந்ததும் கண்டுபிடிக்கப்பட்டது. தீப்பற்றிய சாந்தியின் நைலான் புடைவையை ஆராய்ந்தபோது, உட்கார்ந்தபடி வேலை செய்கையில்தான் அதில் தீப்பிடித்திருக்க வேண்டும் என்று, தீப் பரவியிருந்த விதத்தைக் கொண்டு சொல்ல முடிந்தது.

விபத்து நடந்த சமையலறையில் ஸ்டவ், தரையில் வைக்கப்பட்டிருந்தது. அதற்கு நேர் எதிரே 'சிமெண்ட் ஸ்லாப்' அலமாரி இருந்தது. ஸ்டவ் அருகே உட்கார்ந்து சமைப்பவர் அவசரமாக எழுந்தால், சரியாக அவர் மண்டையில் ஓங்கி இடிக்கும் உயரத்தில் இருந்தது அலமாரியின் ஒரு தட்டு. அந்த அலமாரியில் படிந்திருந்த ரத்தக் கறையும் ஒட்டியிருந்த தலைமுடிக் கற்றையும் சாந்தி அதில் அதிவேகமாக மோதிக் கொண்டதை உணர்த்தின.

உட்கார்ந்தபடி ஸ்டவ் பற்ற வைக்கையில் நைலான் சேலை தீப்பிடித்ததால், அவசரமாக எழுந்திருந்த சாந்தி, கால் இடறி அலமாரியில் தலையை இடித்துக் கொண்டிருக்கிறாள். மண்டையில் ஏற்பட்ட காயத்தால் ரத்தப் பெருக்கு ஏற்பட்டுத்தான் மரணம் சம்பவித்திருக்கிறது — தீக்காயங்களால் அல்ல, என்று தடய அறிவியல் வல்லுனர்கள் ரிபோர்ட் வழங்கினர்.

மனத்திலிருந்த சந்தேகப் பேயை விரட்டியடித்த திருப்தியுடன் மாப்பிள்ளையைப் பார்க்கப் போனார் ராமச்சந்திரன்.

''வாங்க மாமா'' என்று வாய் நிறைய அழைத்தான் செல்வம்.

''மாப்பிள்ளை...'' என்பதற்கு மேலாக ராமச்சந்திரனால் எதுவும் சொல்ல முடியவில்லை.

''சாந்தி கடைசியா எழுதி போஸ்ட் பண்ணாமல் வைத்துப் போன லெட்டர் மாமா இது'' என்று ஒரு கடிதத்தை நீட்டினான் செல்வம்.

'அருமை கௌரி,

என் மனசில் உள்ள சந்தோஷத்தை யார் கிட்டேயாவது சொல்லிப் பகிர்ந்துக்கணும் போல இருக்கு. அதனால்தான் இந்தக் கடிதம்.

அடுத்த மாசம் பத்தாம் தேதி எனக்கு முதல் கல்யாண நாள். என் கணவரும் என் மாமனார், மாமியாரும் என்னை எவ்வளவு அன்பா, ஆதரவா இந்த ஒரு வருஷமும் நடத்திக்கிட்டிருக்காங்க தெரியுமா?

என் கல்யாணத்தின் போது நான் உன் கிட்டே பயத்தோடயும் சந்தேகத்தோடயும் பேசினதையெல்லாம் மறந்துடு. என்னைவிட, ஒரு பெண் சந்தோஷமா இருக்க முடியாது.

இவருக்கு ஒரு ஸ்கூட்டர் வேணும்னு எங்கப்பாகிட்டே சிபாரிசு செஞ்சிகிட்டே இருக்கேன். அவரும் சீக்கிரமே வாங்கித் தருவார்னு நினைக்கிறேன்...'

மேற்கொண்டு சாந்தியின் கடிதத்தை ராமச்சந்திரனால் படிக்க முடியவில்லை. கைகளில் முகம் புதைத்துக் கொண்டார். கண்ணீரில் கரைந்தார். இலேசாகக் குலுங்கிய அவர் தோள்களைச் சுற்றித் தன் கரத்தைப் படரவிட்டு ஆதரவாக அணைத்தான் செல்வம்.

---

''என்ன மாமா, இன்டலர் ஜப்பன் நீங்க? ஏற்கெனவே உங்க மகளைக் கட்டிக் கிட்டு அவஸ்தைப்பட்டுக்கிட்டிருக்கேன்... போதாக்குறைக்குத் தலைதீபாவளிக்கு டி.வி. வேற வாங்கித் தாறதாச் சொல்றீங்களே...''





* காசோலையிலுள்ள கையெழுத்து மற்றும் திருத்தங்களைச் சரி பார்க்கும் கருவி.

* இன்று இத்துறையில், சென்னை தவிர, மதுரை, கோவை, தஞ்சை, திருநெல்வேலி, வேலூர், சேலம், திருச்சி, கடலூர் ஆகிய இடங்களில் ஆய்வுக்கூடங்கள் இயங்குகின்றன. தவிர மாநிலம் முழுவதும் இருபத்திநாலு நடமாடும் ஆராய்ச்சிக் கூடங்களும் இயங்கி வருகின்றன.

# 3 துளசியின் உயில்

'நடிகை துளசி தற்கொலை!' என்ற தலைப்புச் செய்தியைத் தாங்கிய மாலை நாளிதழ்கள் சுறுசுறுப்பாக விற்பனையாகிக் கொண்டிருந்தன.

'நடிகை துளசி' இன்று காலை பத்து மணிக்குத் தமது விஜேத் நகர் இல்லத்தில் மூட்டைப் பூச்சி மருந்தைச் சாப்பிட்டுத் தற்கொலை செய்து கொண்டார்.

## மோகன் ராவ் கதறினார்

துளசி தமது வாழ்க்கைத் துணைவராக ஏற்றுக் கொண்ட பிரபல டைரக்டர் மோகன் ராவ் துக்கம் தாளாமல் கதறி அழுதார். ஏராளமான சினிமா உலகப் பிரமுகர்களும் ரசிகர்களும் துளசிக்கு இறுதி மரியாதை செலுத்த வந்தனர்.



## ஏற்கெனவே திருமணம்!

பல கவர்ச்சி வேடங்களில் துணிச்சலாக நடித்தவர் துளசி. இவருக்குச் சொந்த ஊர் காட்டுப்பட்டி. அங்கு அவருக்கு ஏற்கெனவே முறைப்படி திருமணம் ஆகி ஒரு குழந்தையும் பிறந்தது. சினிமாவில் நடிக்க ஆசைப்பட்டுத் துளசி கணவனையும் குழந்தையையும் விட்டு விட்டுப் பத்து வருடங்களுக்கு முன் சென்னை வந்தார்.

## கணவன் மனமுடைந்து தற்கொலை!

துளசியின் போக்கால் மனமுடைந்து போய் அவர் முதல் கணவன் மாரிமுத்து அரளிக் கொட்டையை அரைத்து விழுங்கித் தற்கொலை செய்து கொண்டதாகச் சொல்லப்படுகிறது.

## மோகன் ராவுடன் தொடர்பு

சென்னையில் சினிமா சான்ஸ் தேடி அலைந்த போது டைரக்டர் மோகன் ராவைச் சந்தித்தார் துளசி. மோகன் ராவ் துளசிக்குப் பல படங்களில் நடிக்க வாய்ப்புக் கொடுத்தார். இருவருக்கும் நெருக்கமான உறவு ஏற்பட்டது. துளசி மோகன் ராவின் ஆசைநாயகி ஆனார். மோகன் ராவுக்கு ஏற்கெனவே திருமணமாகி மூன்று குழந்தைகள் உள்ளனர்.

## இறுதிச் சடங்குகள்

துளசியின் உறவினர்கள் யாரும் காட்டுப்பட்டியிலிருந்து வராததால் அவருடைய இறுதிச் சடங்குகளை மோகன் ராவ்தான் செய்ய இருக்கிறார். ரசிகர்களின் அஞ்சலிக்காக நாளை பகல் பதினொரு மணி வரை துளசியின் உடல் அவரது இல்லத்தில் வைத்திருக்கப்படும்.



இந்தச் செய்தி வெளியாகி ஒரு வாரம் கழித்து. கந்தசாமி விநோத் நகர் போலீஸ் ஸ்டேஷன் இன்ஸ்பெக்டரைச் சந்தித்தார்.

''ஐயா, துளசிபாய் என் அண்ணிதான். அவங்க புருஷன் மனசொடஞ்சு தற்கொலை பண்ணிக்கிட்டப்ப அவங்க குழந்தையை என் பொறுப்புல வளர்க்கச் சொல்லிக் கடிதாக எழுதி வெச்சிட்டுப் போனாரு. குழந்தையை அண்ணிகிட்ட அனுப்பவே கூடாதுன்னு கண்டிஷனா எழுதியிருந்தாரு. அதனாலதான் அண்ணி கேட்டப்பக்கூட நான் சேகர் பயலை அவங்களோட அனுப்பி வைக்கல. அவங்க சாகறதுக்கு ஒரு மாசம் முன்னாடி சொத்தையெல்லாம் சேகர் பேருக்கு உயில் எழுதிக் கடிதாசோட எனக்கு அனுப்பினாங்க. அவங்க செத்ததாகப் பேப்பர்ல பார்த்துத் தெரிஞ்சுக்கிட்டு வந்து அந்த டைரக்டர் மோகன் ராவ்கிட்ட உயிலைக் காண்பிச்சுப் பணத்தையெல்லாம் குடுன்னு கேட்டேன். அவரு பதிலுக்கு இன்னொரு உயிலை எடுத்துக் காட்டறாரு! அதுல சொத்தெல்லாம் மோகன் ராவுக்குப் போகணும்னு எழுதி அண்ணி கையெழுத்துப் போட்டிருக்காங்க. எனக்கு ஒரே குழப்பமா இருக்கு...''

இன்ஸ்பெக்டர் வழக்குப் பதிவு செய்து கொண்டார். ஏற்கெனவே துளசியின் மரணத்தை ஆராய்ந்ததில் அது தற்கொலைதான் என்று சந்தேகத்துக்கிடமின்றித் தெரிந்திருந்தது. இப்போது புதிய பிரச்னை. மோகன் ராவ் வீட்டுக்குப் போனார் இன்ஸ்பெக்டர் ரத்னம்.

''இதோ துளசி எழுதின உயில்'' என்று உடனே எடுத்துக் காண்பித்தார் மோகன் ராவ். துளசி தற்கொலை செய்து கொள்வதற்கு முதல் நாள் தேதியிட்டு டைப் செய்யப் பட்டிருந்தது. கீழே 'துளசி பாய்' என்று கையொப்பம்.

கந்தசாமி காண்பித்த உயிலும் கடிதமும் கூட டைப் செய்யப்பட்டிருப்பவைதாம். ஆனால் அதில் 'துளசி' என்றுதான் கையெழுத்து இருந்தது.

துளசிபாய் என்ற தமது பூர்வீகப் பெயரை நடிகை துளசி துறந்து எத்தனை வருஷங்கள் ஆகிவிட்டன! சாவதற்கு முதல்நாள் மட்டும் ஏன் அந்தப் பெயரில் அவள் கையெழுத்துப் போட வேண்டும்? இன்ஸ்பெக்டருக்கு மோகன்ராவ் பேரில் சந்தேகம்.

மோகன் ராவோ ஆரம்பக் காலத்து கான்டிராக்ட் ஒன்றில் 'துளசி பாய்' என்று துளசி கையெழுத்துப் போட்டிருப்பதைக் காட்டினார். உயிலில் இருந்த கையெழுத்தோடு அது ஒத்துப் போவதை நிரூபித்தார்.

இரண்டு உயில்களையும் கைப்பற்றித் தடய அறிவியல் வல்லுனர்களுக்கு அனுப்பி வைத்தார் இன்ஸ்பெக்டர். அவற்றுடன் மோகன்ராவ் காண்பித்த பழைய ஒப்பந்தத்தையும் அனுப்பினார்.

மோகன்ரர்வ் வீட்டில் இருந்த பழைய டைப் ரைட்டர் ஒன்றில் ஒப்பந்தம் டைப் செய்யப்பட்டிருந்தது. அவர் காண்பித்த உயிலும் அதே டைப் ரைட்டரில் டைப் செய்யப்பட்டிருக்க வேண்டும் என்பதைக் கூர்ந்து கவனித்ததில் சொல்ல முடிந்தது. இறுதிக் காலத்தில் தனிமையை விரும்பி வாழ்ந்த துளசி, மோகன் ராவுடன் தொடர்பைத் துண்டித்துக் கொண்டிருந்தாள். அதனால் அவர் வீட்டு டைப் ரைட்டரில் உயில் டைப் செய்யப்படுவதற்கான வாய்ப்பு இல்லை. இன்னும் சில ஆராய்ச்சிகள் மூலம் ஒப்பந்தத்தில் இருந்த கையெழுத்தை 'டிரேஸ்' செய்து மோகன் ராவ் ஒரு போலி உயிலைத் தயாரித்தது தெரிந்து போயிற்று.

மறுநாள் மீண்டும் செய்தித்தாள்களில் தலைப்புச் செய்தியானாள் துளசி.

'துளசி உயில் விவகாரம் — பரபரப்பான செய்தி. ஏமாற்ற முயன்ற மோகன்ராவ் கைது!'

# 4 'அசட்டு' கோவாலு

"உங்களுக்கு யார் பேரில் சந்தேகம் பாட்டி?'' இன்ஸ்பெக்டர் இடி போல் முழங்கினார்.

இரண்டு காதுகளும் சரியாகக் கேளாத லட்சுமிப் பாட்டியோ தன் பாட்டுக்குப் புலம்பிக் கொண்டிருந்தாள்.

''கட்டையிலே போக! எந்தப் பாவி எடுத்தானோ? அவன் கை அவிய. அவன் குழந்தை குட்டி நன்னாயிருக்குமா? தள்ளாத கிழவி நான். என்கிட்டே திருடறானே. இந்த அநியாயத்தைக் கேட்பாரில்லையே! தை பொறந்ததுலேர்ந்தே ரெண்டு பசு மாடும் கறக்கல்லேன்னு நேத்திக்குச் சந்தைக்கு ஓட்டிண்டு போய் வித்தேன். மாடு வித்த பணம் ஐந்நூறு ரூபாயும் தலைப்புல முடிஞ்சு கொண்டு வந்து என் கையால, எங்காத்து அடுப்பங்கரையில, வடாத்துப் பானையில போட்டு வெச்சேன்.



* கால் அடித் தடங்களைப் பதிவு செய்ய மாணவர்களுக்குப் பயிற்சி.

* இந்தத் துறை, சென்னைப் பல்கலைக் கழகத்துடன் இணைந்து தடய அறிவியலில் இரண்டாண்டு எம். எஸ்ஸி. பட்டப்படிப்பையும் நடத்துகிறது. ஆறு வருட முயற்சிக்குப் பிறகு ஆரம்பிக்கப்பட்ட இந்தப் படிப்புக்கு, ஆண்டுக்குப் பதினைந்து மாணவர்கள் சேர்த்துக் கொள்ளப்படுகிறார்கள். பயாலஜி, பிஸிக்ஸ், கெமிஸ்ட்ரி, பட்டதாரிகள், மற்றும் எம். பி. பி. எஸ்., பி. டி. எஸ்., பி. ஃபார்ம் படித்தவர்கள் இப்படிப்பில் சேரத் தகுதியுள்ளவர்கள்.

இன்னைக்குக் கார்த்தால, 'வெயில் காயறது. இரண்டு கிலோ உளுந்து வாங்கி அப்பளத்துக்கு ஊறப் போடலாம்'னு நினைச்சுண்டு பணமெடுக்கப் பானைல கைவிட்டா, பணத்தைக் காணோமே. பணத்தை எடுத்தது போறுதுன்னு வடாத்தையும்னா எடுத்துண்டிருக்கான் பாவி! அதை எடுத்தவன் கட்டைல போக'' என்று பல்லவியோடு தன் புலம்பலை மூச்சு விடுவதற்காக நிறுத்தினாள்.

மூன்றாவது முறையாக அதே கதையைக் கேட்டுக் கொண்டிருந்த இன்ஸ்பெக்டர் பொறுமையை வரவழைத்துக் கொண்டு திரும்பவும் கேட்டார். ''யார் பேரிலாவது உங்களுக்குச் சந்தேகம் இருக்கா?''

இந்த முறை பாட்டியின் காதுக்குக் கேள்வி எட்டிவிட்டது.

''அந்தப் பாழாப் போன கோவாலு இருக்கானே — கோடி வீட்டு கோவாலு! அவன்தான் என் பின்னாடியே சந்தைக்கு வந்தான். 'மாடு வித்த பணம் எவ்வளவு பாட்டி'ன்னான். 'ஐந்நூறு ரூபாய்டா'ன்னேன். 'ஐந்நூறு ரூபாயை வெச்சுண்டு நீ என்ன பண்ணுவே பாட்டி'ன்னானே; அந்தக் கொள்ளிக் கண்ணன்...''

கோடி வீட்டுக் கோவாலுவின் வீடு சோதனையிடப்பட்டது. அங்கு நிறைய வடாம் கிடைத்தது. ஆனால் சல்லிக் காசு கூடப் பணமில்லை.

விசாரித்த போது கோவாலு திருதிருவென்று விழித்தான்.

''இதெல்லாம் எங்காத்து வடாம்'' என்றான் அவசர அவசரமாக.

அவனுடைய அசட்டுக்களை சொட்டும் மூஞ்சியைப் பார்த்தால் அவனுக்கு வடாம் திருடக் கூடச் சாமர்த்தியம் இருக்காது போல் தோன்றியது இன்ஸ்பெக்டருக்கு.

எதற்கும் இருக்கட்டும் என்று கோவாலு வீட்டு வடாத்துப் பானையில் மேலாக இருந்த பத்துப் பதினைந்து வடகங்களையும் அடிப் பகுதியிலிருந்து சில வடகங்களையும் எடுத்துக் கொண்டார் இன்ஸ்பெக்டர். லட்சுமி பாட்டியின் வீட்டுக்குப் போனார்.

''பாட்டி உங்கள் வீட்டு வடகம் கொஞ்சம் வேணும்'' என்றார் தம்பிடித்துக் குரலை உயர்த்தி.

''ஓ தரேனப்பா. கிலோ எட்டு ரூபாய். நன்னா வீசிப் பொறியும். உப்புறைப்பா வாய்க்கு நன்னா இருக்கும். தனிவடாம் எழுதி





யிருக்கேன்... ஆத்துல ஆம்படையா புள்ள பெத்தா, அம்மாவைச் சுட்டுத் தரச் சொல்லலாம். வாங்கிக்கோ. நல்ல பத்தியமா எழுதியிருக்கேன்.''

பாட்டிக்கு ஒருவாறு விஷயத்தைப் புரிய வைத்து, அவர் பணம் வைத்திருந்த வடகத்துப் பானையிலிருந்து பத்துப் பதினைந்து வடகங்களை எடுத்துக் கொண்டார் இன்ஸ்பெக்டர்.

கோவாலு வீட்டு வடகங்களும் பாட்டி வீட்டு வடகமும் பட்டணத்திலிருந்த தடய விஞ்ஞானப் பரிசோதனைக் கூடத்துக்கு அனுப்பப்பட்டன. கோவாலு வீட்டுப் பானையில் மேலாக இருந்த வடகங்களும் பாட்டி வீட்டு வடகங்களும் ஒரே வீட்டில் ஒருவரே செய்தவை என்பது ரசாயனப் பரிசோதனைகள் மூலம் கண்டறியப்பட்டது. கோவாலு வீட்டுப் பானையில் அடியில் இருந்த வடகங்கள் வேறு விதமாக இருந்தன.

பரிசோதனை முடிவுகளைக் கண்ட இன்ஸ்பெக்டர் அசந்து போனார். நாலு வார்த்தை நேராகப் பேசத் தெரியாதவன் போல் தோன்றிய கோவாலுக்குத் திருடுகிற தைரியமும் சாமர்த்தியமும் இருக்கிறதே!

கொஞ்சம் மிரட்டியவுடனேயே தான் தான் திருடியதாக ஒப்புக் கொண்டு விட்டான் கோவாலு. மாமரத்துப் பொந்திலிருந்து பணத்தை எடுத்துத் திருப்பிக் கொடுத்தான். அதை வாங்கிக் கொண்ட லட்சுமிப் பாட்டி, ''நான்தான் அப்பவே சொன்னேனே!'' என்றாள் அழுத்தந்திருத்தமாக.

---

# 5 புஷ்பவனம் ஜானகி

ஜானகி வருகிறாள் என்றால் காலேஜில் பையன்கள் எல்லாம் கறுப்புக் கண்ணாடியைத் துடைத்து மாட்டிக் கொள்வார்கள். அவசர அவசரமாகப் பாக்கெட் சீப்பை எடுத்து ஸ்டெப் கட்டையும் தொங்கு மீசையையும் சீராக்குவார்கள்; சட்டையின் மேல் பட்டனை அவிழ்த்து விட்டுக் கொண்டு சினிமாப் பாட்டைச் சீட்டியடிப்பார்கள்.

எதற்கும் அசைகிறவள் இல்லை ஜானகி. உடம்பு நிறைய அழகு; தவிர நிறைய கனம்! பையன்களில் யாரும் தன் அழகுக்குக் கிட்டே நெருங்க முடியாது என்று அவள் உறுதியாக நம்பினாள்.

'ஜானகி என்ன நினைத்தால் என்ன? நான் நெருங்கியே தீருவேன்' என்று கங்கணம் கட்டிக் கொண்டு நெருங்கினான் ராம்ஜி. ஒவ்வொரு முறை நெருங்கிய போதும் மூக்குடைபட்டான். நண்பர் குழாம் அவனைச் 'சப்பை மூக்கா' என்று செல்லப் பெயரிட்டுக் கூப்பிட ஆரம்பித்திருந்தது!

ஜானகி அண்ட் கோ படித்த கல்லூரி, காட்டுப்பாக்கத்துக்கு அருகே புஷ்பவனம் டவுனில் இருந்தது. ஜானகிக்குக் காட்டுப்பாக்கம்தான் சொந்த ஊர். ஒரு நாள், பையன்களையும், பெண்களையும் தன் ஊர் பார்க்க அழைத்தாள் ஜானகி — அந்தச் சாக்கில், தான் அழகி மட்டுமல்ல பணக்காரி என்பதையும் காட்டிக் கொள்ளும் நோக்குடன்.

''அதோ தெரியுதே தென்னந்தோப்பு, அது வரைக்கும் எங்க வயல்தான். இந்தப் பக்கத்துல வாய்க்காலை ஒட்டியிருக்கறது முழுதும் எங்க பாட்டன், முப்பாட்டன் காலத்துலேருந்தே எங்களிடம் இருக்கு. வாங்க, தோப்புல போய் இளநீர் சாப்பிடுவோம்.''

அந்தத் தோப்பிலிருந்த அணில், காக்கை, மைனா மற்றும் இதர பறவை இனங்கள் அன்று அதிசயத்தில் நிசப்தமாகிவிட்டன. இவ்வளவு இளமையை, வண்ணங்களை, குதூகலத்தை அந்தப் பிராணிகள் அதுவரை பார்த்ததே இல்லை.

இளநீர் விருந்தின் நடுவிலேயே கம்பி நீட்டிவிட்டான் ராம்ஜி. ''முக்கியமான வேலையிருக்கு ஜானகி. சீக்கிரமாப் போகணும்.''

''சரி, பார்க்கலாம்'' — கொஞ்சம் கூட வருத்தப்படாமல் விடை கொடுத்து அனுப்பினாள் ஜானகி.

'ஒரு மரியாதைக்குக் கூடக் கேட்கல்லியே, ஏன் ராம்ஜி அதுக்குள்ள கிளம்பிட்டேன்னு! கர்வக்காரி! கர்வக்காரி — உன்னை என்ன பண்றதுன்னு எனக்குத் தெரியும்' ராம்ஜிக்குள் சைத்தான் விசுவரூபம் எடுத்துக் கொண்டிருந்தது.

ஜானகி எல்லோரையும் பஸ் ஏற்றி விட்டுத் தனியே திரும்பிக் கொண்டிருந்த போது விளக்கு வைக்கும் நேரம் கடந்து விட்டிருந்தது. ஊருக்கு ஒதுக்குப்புறமாய் இருந்த பஸ் ஸ்டாண்டிலிருந்து குறுக்குப் பாதையில் நடந்த அவளை வழி மறித்தான்



* பேராசிரியர் சந்திரசேகர்

* தமிழக தடய அறிவியல் துறையின் இயக்குன ரான பேராசிரியர் சந்திரசேகரன், அகில உலக அளவில் இத்துறை பற்றிய பல கருத்தரங்கு களிலும், மாநாடுகளிலும் பங்கேற்று, பல ஆராய்ச்சிக் கட்டுரைகள் சமர்ப்பித்தவர். மண்டை ஓடுகள் பற்றின இவரது ஆராய்ச்சிக் காகச் சென்னைப் பல்கலைக் கழகம் இவருக்கு டாக்டர் பட்டம் அளித்துள்ளது.

ராம்ஜி. சைத்தான் கட்டவிழ்ந்தது. ஜானகி அலங்கோலமாகச் சிறிது நேரம் இருட்டில் அழுதாள். பிறகு ஒரு தீர்மானத்துக்கு வந்த வளாய் நேரே போலீஸ் ஸ்டேஷனுக்குப் போய் வழக்குப் பதிவு செய்தாள்.

"நீதான் ஜானகியைக் கற்பழிச்சே! மரியாதையா அதை ஒத்துக்கிடு!'' இன்ஸ் பெக்டர் மிரட்டினார் ராம்ஜியை.

''சும்மா மிரட்டாதீங்க இன்ஸ்பெக்டர். இந்த ஜானகி எப்படிப்பட்டவங்கறதை நான் சொல்றேன். அவளுக்கும், ஃபைனல் இயர் ஜுவாலஜி படிக்கற ரகுவுக்கும் என்ன உற வுன்னு கேளுங்க. அந்த உறவை நான் கண்டு பிடிச்சுட்டேன்னு அவளுக்கு வயித்தெரிச் சல். அதனால என் பேர்ல இப்படி அபாண் டமாப் பழிசுமத்தறா.''

''ராம்ஜி! நீதான் ஜானகியைக் கெடுத் தேங்கறதுக்குத் தீர்மானமான சாட்சி இருக்கு — நீ அவளைப் பலாத்காரம் பண்ணி னப்ப அவ தன்னைக் காப்பாத்திக்கற முயற்சி யில் உன் வலது தோள்ல கடிச்சிருக்கா. உன் சட்டையைக் கழட்டினா அந்த வடு இருக்கும்.''

''தாராளமா கழட்டறேன். என் தோள்ல பல் பதிஞ்ச வடு இருக்கு. ஆனால் அது ஜானகியோட கள்ளக்காதலன் ரகு ஆத்திர மடைந்து என்னைக் கடித்ததால் ஏற்பட்ட வடு.''

''யார் குற்றவாளிங்கறதை என்னால் சுலபமா நிரூபிக்க முடியும், ராம்ஜி!''

இன்ஸ்பெக்டர் தடய இயல் நிபுணரை அழைத்தார். ராம்ஜியின் தோளில் ஆழப் பதிந்திருந்த வடுவில் பிளாஸ்டர் ஆஃப் பாரிஸ் ஊற்றி ஒரு வார்ப்பு எடுத்தார்கள். அதே போல் ஜானகியின் பற்களின் வார்ப்பும் தயாரிக்கப்பட்டது. இரண்டை யும் ஒப்பு நோக்கியபோது ஜானகி தற்காப்புக்காக ராம்ஜியின் தோளில் கடித்தது ஊர்ஜிதமாயிற்று.

ராம்ஜி ஜெயிலுக்குப் போனான். ஜானகி அந்தச் சம்பவத்துக்குப் பிறகு அடக்கமான பெண்ணானாள்.

புகைப்படங்கள்: **யோகா**





இந்தியாவில் அதிகமாக விற்பனையாகும் மெத்தை. Kurl-on
கண்டெடுத்தது தன் துணைக்காக Kurlopillo
Kurl-on
இப்பொழுது நீங்கள் வெற்றிக் குழுவில் போட்டியிடலாம். இரவின் நிகரற்ற வசதிக்காக.
KURLOPILLO தரமான சுகம் தரும் தலையணை. தூங்கும் பொழுது தலைக்கும், கழுத்திற்கும் சிறந்த சுகத்தை தருகிறது.
இரண்டு துணைபடைப்புகளுடன் தயாரிக்கப்பட்ட KURLOPILLO நிம்மதியான நித்திரை செய்பவர்களுக்கு தேவை. கல்பறு தலையணை சிறந்த சுகத்தை நாடுபவர்களுக்காக தயாரிக்கப்பட்டது. டிரீம்லைனர் தலையணை உயர்தர காதலர்களுக்காக தயாரிக்கப்பட்டது
KURLOPILLO மக்களின் வசதிக்காக KURL-ON தொழில் நுட்ப வல்லுனர்களால் . தயாரிக்கப்பட்டது.
Kurlopillo & Kurl-on®
மொத்தத்தில், இரவில் சிறந்த முறையில் ஓய்வு எடுப்பதிற்காகவே தயாரானவை.
கர்னாடகா கன்சூமர் ப்ராடக்ட்ஸ் லிமிடெட்
மார்க்கெட்டிங் பிரிவு.
முதல் மாடி, 83, கெங்கல் ஹனுமந்தையா ரோடு, பெங்களூர்-560 027 போன்:-224676
எல்லா கர்லான் விற்பனையாளர்களிடம் கிடைக்கும்.
ஏரியா அலுவலகம்:- சென்னை போன்:-810710; சிப்காட் (P.O) குருவாம, ஒசூர்-26

# தேவேந்திரா சாரீஸ்

**மிகமிக உயர்ந்த பட்டும் நூலும் கலந்து தயாரிக்கப்பட்டது.**

**H.O:27, ஏலா கந்தப்பன் தெரு, சென்னை-3, போன்: 33113**

***கிளை ஷோ-ரூம்: கடை எண்: 7, ராம்ஸ் பஜார், (பனகல் பார்க் எதிரில்)***

***தியாகராயநகர், சென்னை-17. போன்: 443367***

**தேவேந்திரா புடவைகள் கிடைக்கும் இடங்கள்:**

''கிருஹலக்ஷ்மி'' மாதர்கள் கூட்டுறவு அமைப்பு, C-79, விகாஸ்புரி (போடெல்லா), புது டெல்லி - 110018. ★ காமாட்சி சில்க் ஹவுஸ், 5/38, W.E.A. அஜ்மல்கான் ரோடு, கரோல் பாக், புது டெல்லி - 5, போன்: 581050, 561786. ★ திருமதி உமா சுப்ரமணியம், II-A-97-B, லஜ்பத் நகர் II, புது டெல்லி - 110024, போன்: 616552. ★ திருமதி விமலா ராகவன் 6/66, W.E.A., கரோல்பாக், புது டெல்லி - 110005. ★ பங்கஜம் சுந்தரராஜன், C6/A, D.D.A. Flats, முனிர்கா, புது டெல்லி - 67. ★ Mrs. சாரதா, 16/449, விரம் பில்டிங், மாதுங்கா, பம்பாய் - 19. ★ சுசீலாமணி, 22, காந்தி மஹால், தேஜோ கோயா பார்க், வின்சென்ட் ரோடு, மாதுங்கா, பம்பாய் - 19. ★ லக்ஷ்மி நாராயணன், 5, வாணி கோ-ஆப்ரேடிவ் ஹவுசிங் சொஸைட்டி, வல்லபாக் ரோடு, காட்கோபர், (கிழக்கு) பம்பாய்-77. ★ நல்லீஸ் சில்க் சாரீஸ் ★ சென்டர், 401, டெலாங் ரோடு, மதுங்கா, பம்பாய்-19. ★ சோலங்கி கிளாத் ஸ்டோர்ஸ், 7, திலந்தி வாலா பில்டிங், எல்.என். ரோடு, மாதுங்கா, பம்பாய்-19. ★ லதா கிருஷ்ணன், பிளாட் நெ.20, காம தேனு கோ.ஆப். பெஸ்டம் சாகர், செம்பூர், பம்பாய்-89, (கிளால் பாக்டரி அருகில்). ★ ஆர். ராஜாமணி அம்மாள், 46, முத்து மாரியம்மன் கோவில் தெரு, பாண்டிச்சேரி - 605 001. ஜெயபூரி, 2-A, தேசப்பிரியா பார்க் ரோடு, கல்கத்தா - 26. ★ திருமதி T.S. சகுந்தலா சீனி வாசன், 18/1-A, லால்பாக் போர்ட் ரோடு, (மினர்வா & பலப்பா சர்க்கிள் மத்தியில்) பெங்களூர், போன்: 224357, 96/1 கிழக்கு பார்க் ரோடு (மல்லேஸ்வரம் போஸ்ட் ஆபீஸ் அடுத்து), பெங்களூர் - 560003. ★ திருமதி துர்காம்பாள், 22, சேஷபுரம், தென்னூர், திருச்சி - 620017. ★ திரு. S.சேதுராமன், 9, பாணாதுறை சன்னதி தெரு, கும்ப கோணம் - 612001, போன்: 972. ★ ராணி சில்க், 13, மஹால் 4-வது தெரு, மதுரை - 1, போன்: 26295. ★ திருமதி S.லட்சுமி, 24, சீனிவாசா தெரு, சேலம் - 1., (ரயில்வே ஸ்டேஷன் அருகில்) ★ லக்ஷ்மி சத்தியமூர்த்தி, 1044, திருச்சி ரோடு, ராமநாதபுரம், கோயம் புத்தூர் - 641045. ★ ஸ்ரீ முருகன் கிளாத் ஸ்டோர், 3, ஆரோக்கியசாமி ரோடு கிழக்கு, R.S.புரம், கோவை - 2. மஹாராஜா சில்க்ஸ் 76, உடுமலே ரோடு, பொள்ளாச்சி-1, போன்: 4191 ★ மகாலட்சுமி சில்க் சென்டர், தீன் பில்டிங், (உள்புறம்) 175/11, மேல வீதி, சிதம்பரம். ★ ஹேமாவதி ஏஜென்சிஸ், 2711, நாணயக்கார செட்டி தெரு, தஞ்சாவூர். ★ பாகீரதிமூர்த்தி, 100, ஸ்ரீ வராஹபுரம் தெரு, கல்லிடைக்குறிச்சி, திருநெல்வேலி. ★ S.சுந்தரம், 9, சாஸ்தான் கோவில் தெரு, வடிவீச்வரம், நாகர்கோவில் - *2. ★ திருமதி K.சீதாலட்சுமி, 41, 4-வது டிரஸ்ட் கிராஸ் தெரு, மந்தவெளிப்பாக்கம், சென்னை - 28, போன்: 73244. ★ திருமதி சாவித்திரி பாலசுப்பிரமணியம், 2, 7-வது தெரு, நங்கநல்லூர், சென்னை - 61, (பிள்ளையார் கோவில் அருகில்) போன்: 433737. ★ திருமதி சரோஜா கிருஷ்ணமூர்த்தி, A9/386, புதிய குடி யிருப்பு (முதல் மாடி) குடிசை மாற்று வாரியம், திருமங்கலம், அண்ணா நகர் மேற்கு, சென்னை - 600 107. (ஸ்ரீ சத்திய சாயிபாபா கோவில் அருகில்) ★ M/s. பாலாஜி கிளாத் சென்டர், 22-A, கக்கன் தெரு, (வித்யா தியேட்டர் எதிரில்) மேற்கு தாம்பரம், சென்னை - 45. ★ திருமதி கலோசனு கோவிந்த், 2, M.I.T. லெவல் கிராஸிங், குரோம்பேட்டை, சென்னை - 44. ★ S.பொன்னப்பன், 8-3-282 IInd பஜார், செகந்திராபாத் A.P., போன்: 59562.

குறிப்பு: மற்ற இடங்களில் வாங்குவது எங்களுடைய தயாரிப்பு அல்ல.

---

Advt.

# பொன்னியின் செல்வன்

## பூர்வ கதை

சோழர் பழங்குடியில் பிறந்த நாரீமணிகளில் மிகவும் புகழ் பெற்ற இளவரசி குந்தவை பெரிதும் மனக் கலக்கம் அடைந்திருந்தாள். அவளுடைய இளைய சகோதரன் அருள்மொழிவர்மன் இலங்கையிலும் மூத்த சகோதரன் ஆதித்த கரிகாலன் காஞ்சியிலும் இருந்தார்கள். அவளுடைய தந்தை சுந்தர சோழ சக்கரவர்த்தி தஞ்சையில் நோய்ப்பட்டிருந்தார். இந்நிலைமையில் இந்த இராஜ குடும்பத்துக்கு விரோதமாக நடந்த ஒரு பெரிய சதியைப் பற்றிக் குந்தவை தெரிந்து கொண்டாள். சுந்தர சோழர் காலமானால் உடனே அவருடைய சிறிய தகப்பனாரின் மகன் மதுராந்தகனுக்குப் பட்டம் கட்ட வேண்டும் என்று பழுவேட்டரையர்கள் முதலான சிற்றரசர்களும் பெருந்தர அதிகாரிகளும் இரகசியமாக முடிவு கட்டியிருந்தார்கள். இதை அறிந்து வந்து சொன்ன வந்தியத்தேவனை இலங்கை சென்று அருள்மொழிவர்மனைக் கூட்டி வருவதற்காகக் குந்தவை அனுப்பினாள்.

பின்னர் அவள் தஞ்சை சென்றாள். அங்கே தன் தந்தை உடல் நோய்ப்பட்டிருந்ததல்லாமல் பெரியதொரு மனநோயினாலும் பீடிக்கப்பட்டிருப்பதை அறிந்தாள். தந்தையின் இளம் பிராயத்தில் ஒரு வலைஞர் குல ஊமைப் பெண்ணை அவர் காதலித்ததாகவும், அப்பெண் கோடிக்கரைக் கலங்கரை விளக்கின் உச்சியிலிருந்து கடலில் விழுந்து இறந்ததாகவும், அவளுடைய ஆவி வடிவம் இப்போது நள்ளிரவில் வந்து அவரைத் துன்புறுத்தி வந்ததாகவும் தெரிந்து கொண்டாள். இதன் காரணமாக மனம் நலிந்திருந்த சுந்தர சோழர் தமக்குப் பிறகு இராஜ்யத்தை மதுராந்தகனுக்கே கொடுத்து விட விரும்பினார். மதுராந்தகன் ஒரு பெரிய சாம்ராஜ்யத்தை ஆளத் தகுதியற்றவன் என்று குந்தவை கருதினாள். சோழ சாம்ராஜ்யத்தை அந்தக் கதிக்கு உள்ளாகாமல் காப்பாற்றும் பொறுப்பு இப்போது தன் தலையில் சார்ந்திருப்பதாகவும் எண்ணினாள்.

சோழ சாம்ராஜ்யத்தின் தனாதிகாரியான பெரிய பழுவேட்டரையர் தம் முதிய பிராயத்தில் நந்தினி என்னும் பெண்ணை மணந்திருந்தார். நந்தினியின் வாழ்க்கையில் மர்மங்கள் நிறைந்திருந்தன. இப்போதும் அவள் மந்திரவாதிகளுடன் தொடர்பு கொண்டிருந்தாள். சுந்தரசோழரின் மனநோய்க்கு நந்தினி ஏதோ ஒரு வகையில் காரணமாயிருக்கலாம் என்று குந்தவை சந்தேகித்தாள். அதைப் பற்றித் தெரிந்து கொள்ளும் நோக்கத்துடன் நந்தினியின் அரண்மனைக்குச் சென்றாள். அங்கே சம்புவரையரின் மகன் கந்தமாறன் என்பவன் இருந்தான். முதுகில் குத்தப்பட்டுக் குற்றுயிராய்க் கிடந்தவன், பழுவூர் அரண்மனையில் நந்தினியின் மேற்பார்வையில் நடந்த சிகிச்சையினால் குணமடைந்து வந்தான். கந்தமாறன் தன்னுடைய நண்பனாகிய வந்தியத்தேவன்தான் தன்னை முதுகில் குத்தியிருக்க வேண்டுமென்று ஊகித்தான். அந்த ஊகத்தையே ஊர்ஜிதமாக்கிக் கொண்டு, நடந்ததுடன் நடவாததையும் சேர்த்து ஒரு கற்பனைக் கதையைக் குந்தவையிடம் அவன் சொன்னான். அச்சமயம் ஒரு தாதி ஓடிவந்து, "ஒற்றன் பிடிபட்டான்! வீதியில் கொண்டு வருகிறார்கள்!" என்று கூறினாள்.

பழுவேட்டரையரின் ஆட்கள் பிடித்து வந்த ஆள், தான் சக்கரவர்த்திக்கு மூலிகை கொண்டு வர அனுப்பிய வைத்தியர் மகன் என்பதைப் பார்த்த குந்தவை, சின்னப் பழு

அமரர் கல்கி

வேட்டரையரைக் கடிந்து கொண்டான்.

அந்த இளைஞனும் அவனுடன் புறப்பட்டு, இப்போது இலங்கை சென்றுவிட்ட வந்தியத் தேவனும் ஒற்றர்கள் என்று தமக்குத் தீர் மானமாகத் தெரியும் என்றார் சின்னப் பழுவேட்டரையர். குந்தவை விரும்பினால் வைத்தியர் மகனைச் சிறையிலிருந்து தனது பொறுப்பில் விடுவிக்கலாம் என்று கூறிப் பாதாளச் சிறையின் சாவியைக் கொடுத்து விட்டார்.

## அத்தியாயம் 22
## சிறையில் சேந்தன் அமுதன்

தஞ்சைக் கோட்டைக்குள் பொற்காசுகள் வார்ப்படம் செய்யும் தங்கச்சாலை மற்றொரு சிறிய கோட்டை போல அமைந்திருந்தது. தங்கச்சாலைக்கு வெளிப்புறத்தில் கட்டுக்காவல் தஞ்சைக் கோட்டை வாசலில் உள்ளது போலவே வெகு பலமாயிருந்தது. அன்று மாலை குந்தவை தேவியும் வானதியும் தங்கச் சாலையைப் பார்வையிடச் சென்ற போது வேலை முடிந்து பொற்கொல்லர்கள் வெளியில் புறப்படும் சமயம். வாசற்காவலர்கள் பொற்கொல்லர்களைப் பரிசோதி[illegible] வெளியில் அனுப்ப ஆயத்தம[illegible]கள். பொற்கொல்லர்கள் வாசலண்டை வந்து குவிந்திருந்தார்கள். அந்த நேரத்தில் அரண்மனை ரதம் வந்து தங்கச் சாலையின் வாசலில் நின்றது. குந்தவையும் வானதியும் இறங்கினார்கள். அவர்களைப் பார்த்ததும் காவலர்களும் பொற் கொல்லர்களும் மெய் மறந்து நின்று ''வாழ்க இளையபிராட்டி!'' என்று கோஷித்தார்கள். தங்கச் சாலையின் தலைவர் ஓடி வந்து அரசகுமாரிகளை ஆர்வத்துடன் வரவேற்றார். உள்ளே அழைத்துச் சென்று பொன்னைக் காய்ச்சும் அக்கினி குண்டம், நாணய வார்ப்படம் செய்யும் அச்சுக்கள், அச்சிட்ட நாணயங்கள் முதலியவற்றைக் காட்டினார். அன்றைய தினம் வார்ப்படமான தங்க நாணயங்கள் ஒரு பக்கத்தில் குப்பலாகக் கிடந்தன. அந்தப் பசும்பொன் நாணயங்களின் ஒளி கண்களைப் பறித்தது. ஒவ்வொரு நாணயத்திலும் ஒரு பக்கத்தில் புலியின் முத்திரையும் மற்றொரு பக்கம் கப்பல் முத்திரையும் பதிக்கப்பட்டிருந்தன.

''பார்த்தாயா, வானதி! எத்தனையோ காலமாக இந்தச் சோழ நாட்டுக்கு உலகெங்குமிருந்து தங்கம் வந்து கொண்டிருந்தது. தரை வழியாகவும் வந்தது; கப்பல் வழியாகவும் வந்தது. இதுவரை அவ்வளவு தங்கத்தையும் சுமக்கும் பொறுப்பு சோழநாட்டுப் பெண் குலத்துக்கே இருந்து வந்தது. ஆபரணங்களாகச் செய்து போட்டுக் கொண்டு, தூக்க முடியாமல் தூக்கி வந்தார்கள். கொஞ்ச காலமாகச் சோழ நாட்டுப் பெண்களுக்கு அந்தப் பாரம் குறைந்து வருகிறது. நம் தனாதிகாரி பழுவேட்டரையர் இம்மாதிரி கண்களைப் பறிக்கும் தங்க நாணயங்களை வார்ப்படம் செய்ய ஏற்பாடு பண்ணி விட்டார்!'' என்று குந்தவை சொன்னாள்.

''அக்கா! இதனால் என்ன சௌகரியம்?'' என்று வானதி கேட்டாள்.

''என்ன சௌகரியமா? நீ ஒன்றுமே தெரியாத பெண்ணடி! இம்மாதிரி பொன்னை நாணயங்களாகச் செய்துவிட்டால், 'இவ்வளவு பொன்' என்று நிறுத்துப் பாராமலே மதிப்பிடச் சௌகரியம். குடிகள் அரசாங்கத்துக்கு வரி கொடுக்கச் சௌகரியம். வர்த்தகர்கள் வெளி நாட்டாரோடு வியாபாரம் செய்வதில் பண்டத்துக்குப் பண்டம் மாற்றிக் கொண்டு கஷ்டப்பட வேண்டியதில்லை. பொன் நாணயங்களைக் கொடுத்துப் பொருள்களை வாங்கலாம்; பொன் நாணயங்களைப் பெற்றுக் கொண்டு பண்டங்களை விற்கலாம். ஆகையினாலேதான் சோழ நாட்டு வர்த்தகர்கள் நம் தனாதிகாரி பழுவேட்டரையரை வாழ்த்துகிறார்

கள்... இன்னும் ஒன்று சொல்கிறேன், கேள்!'' என்று கூறிக் குந்தவை தேவி குரலைத் தாழ்த்திக் கொண்டு சொன்னாள்: ''சக்கரவர்த்திக்கும் சக்கரவர்த்தியின் குடும்பத்துக்கும் எதிராகச் சதி செய்பவர்களுக்கு இந்த நாணயங்களினால் அதிக சௌகரியம். எப்படிப்பட்ட உத்தமர்களையும் இந்தப் பொற்காசுகளின் மூலம் துரோகிகள் ஆக்கி விடலாம் அல்லவா?'' என்றாள்.

அருகில்நின்றதங்கசாலைத்தலைமை அதிகாரியின் காதில் குந்தவை கடைசியில் கூறிய வார்த்தைகள் இலேசாக விழுந்தன. அந்த அதிகாரி, ''ஆம், தாயே! அம்மாதிரி பயங்கரமான வதந்திகள் எல்லாம் இக்காலத்தில் கேள்விப்படுகிறோம். ஆகையினாலே தான் இப்போது கொஞ்ச நாட்களாக இந்தத்தங்கச்சாலைக்குக்கட்டுக்காவல் அதிகமாயிருக்கிறது. இதன் அடியில் உள்ள பாதாளச் சிறைக்கு வருவோர் போவோரும் அதிகமாகி விட்டார்கள்!'' என்று சொன்னான்.

''வருகிறவர்கள் உண்டு; போகிறவர்கள் கூட உண்டா?'' என்று குந்தவை கேட்டாள்.

''ஏன்? அதுவும் உண்டு. இன்று காலையில் ஒருவனைக் கொண்டு வந்தார்கள். ஒரு நாழிகைக்கு முன்னால் அவனைத் திருப்பிக் கொண்டு போய் விட்டார்கள்!'' என்று அந்த அதிகாரி கூறினான்.

அது யாராயிருக்கும் என்று குந்தவைக்குச் சிறிது வியப்பாயிருந்தது.

தங்கசாலைக்குள் பற்பல வேலைகள் நடக்கும் இடங்களைப் பார்த்து விட்டுப் பின்புறமாகச் சென்றார்கள். பின் சுவரில் ஒரு சிறிய வாசல் இருந்தது. அதைத் திறந்து கொண்டு சென்றார்கள். சென்ற இடத்தில் வெளிச்சம் குறைவாக இருந்தது. கூரை தாழ்வாக இருந்தது. நாலு புறமிருந்தும் கேட்டவர்கள் ரோமம் சிலிர்க்கும்படியான உறுமல் சத்தம் கேட்டது. ஒரு சேவகன் தீவர்த்தி பிடித்துக்கொண்டு நின்றான். அதன் வெளிச்சத்தில் நாலு புறமும் உற்றுப் பார்த்த போது பல கூண்டுகளும் அவற்றுக்குள்ளே அடைபட்ட புலிகளும் இருப்பது தெரிந்தது. அவற்றில் சில வேங்கைப் புலிகள்; சில சிறுத்தைப் புலிகள். சில படுத்திருந்தன; சில கூண்டுக்குள் முன்னும் பின்னும் உலாவிக் கொண்டிருந்தன. அவற்றின் கண்கள் அந்த இடத்தின் மங்கலான வெளிச்சத்தில் நெருப்புத் தணல்களைப் போல் ஒளிர்ந்தன.

குந்தவை வானதியின் கரத்தைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டு, ''அடியே! பயமாயிருக்கிறதா? இங்கே மூர்ச்சை போட்டு விழுந்து வைக்காதே!'' என்றாள்.

வானதி இலேசாகச் சிரித்துவிட்டு, ''புலியைக் கண்டு என்ன பயம்; அக்கா! புலி நம்முடைய குலத்தின் காவலன் அல்லவா?'' என்றாள்.

''சில சமயம் காவலர்களே எதிரிகளுடன் சேர்ந்து விடுவார்கள் அல்லவா? அப்போது அபாயம் அதிகம் ஆயிற்றே?''

''இல்லை அக்கா! மனிதக் காவலர்கள் அப்படி ஒருவேளை துரோகம் செய்யலாம். இந்தப் புலிகள் அப்படிச் செய்யமாட்டா!''

''சொல்வதற்கில்லை. இந்தப் புலிகள் எத்தனையோ இராஜாங்கத்துரோகிகளைச் சாப்பிட்டிருக்கின்றன. அவர்களுடைய இரத்தம் இந்தப் புலிகளின் உடம்பில் கலந்திருக்கும் அல்லவா?''

பயமேயில்லை என்று சற்று முன் கூறிய வானதியின் உடம்பு இப்போது சிறிது நடுங்கத்தான் செய்தது.

''அக்கா! என்ன சொல்கிறீர்கள்? உயிருள்ள மனிதர்களை இந்தப் புலிகளுக்கு இரையாகக் கொடுப்பார்களா, என்ன?'' என்று கேட்டாள்.

''அப்படிச் செய்ய மாட்டார்கள். இந்தத் தங்கசாலைக்கு அடியில் பாதாளச் சிறை இருக்கிறது என்று சொன்னேன் அல்லவா? அதற்குள் போவதற்கும் வருவதற்கும் ஒரே வழிதான். அந்த வழி இந்தப் புலி மண்டபத்தில் இருக்கிறது. சிறைக்குள்ளிருந்து யாராவது தப்பித்து வர முயன்றால் இந்த மண்டபத்துக்குள்ளேதான் வர வேண்டும். அப்போது புலிகளுக்கு

அருள்வாக்கு



'ஒருவரிடம் எத்தனை தோஷம் இருந்தாலும் அதைப் பெரிதுபடுத்தாதே; சிறிது குண விசேஷம் இருந்தாலும் அதையே கொண்டாட வேண்டும்' என்பது பெரியோர் உபதேசம். 'பிறரது குறைகளை வெளிப்படுத்தக் கூடாது. அவர்களிடம் உள்ள நல்ல அம்சங்களையே வெளிப்படுத்த வேண்டும். தேய்ந்து போன சந்திர கலைக்குக் கூடக் குளுமையும் பிரகாசமும் இருப்பதால் அதைப் பரமசிவன் தம் தலையில் தரித்து உலகமெல்லாம் பார்த்துப் புகழும்படி செய்கிறார். அதே ஈசுவரன் மகா கொடிய ஆலகால விஷத்தை யார் கண்ணிலும் தெரியாமல் தம் கண்டத்தில் ஒளித்து வைத்திருக்கிறார்.' இவ்வாறு தண்டி என்ற கவி கூறுகிறார்.

ஆனால் தோஷம் பார்க்கிறதும் அதைப் பெரிது செய்து பேசுவதும் எழுதுவதுமே பொதுவில் இந்த உலகத்தில் தற்காலத்தில் மிக அதிகமாயிருக்கிறது. அதிலும் நிறையப் படித்தவர்கள் நிறையக் குற்றம் காண்பார்கள். ''குற்றம் கண்டுபிடிப்பது தான் அறிவாளியின் காரியம். 'வித்வான்' என்றாலே 'தோஷக்ஞன்' என்று லட்சணம் சொல்லியிருக்கிறது'' என்று இவர்கள் வாதம் செய்யலாம். 'தோஷக்ஞன்' என்றால், குற்றம் அறிந்தவன் என்றே அர்த்தம். குற்றத்தைப் பெரிது படுத்திப் பிரசாரம் செய்பவன் என்றல்ல. குற்றம் குறைகளை உணர வேண்டும். உணர்ந்து அவற்றை நாம் தவிர்க்க வேண்டும். குற்றம் உள்ளவர்களுக்கும் இதை இதமாக எடுத்துச் சொல்லலாம். ஆனால் ஓயாமல் தோஷம் பாராட்டிக் கொண்டும் அதைப் பிரசாரம் பண்ணிக் கொண்டும் இருக்கக் கூடாது.

தோஷமுள்ளவரிடம் அதை எடுத்துக் காட்ட வேண்டுமானால் நமக்குப் பூர்ண யோக்யதை இருக்க வேண்டும். நம்மிடமே ஏராளமான தோஷங்களை வைத்துக் கொண்டு இன்னொருத்தருக்கு உபதேசம் செய்தால் அது பிரயோஜனப்படாது. சில சமயங்களில் நாம் சொல்வதாலேயே அவர்கள் முன்னைவிட வீம்பாகத் தங்கள் தவற்றை வெளிப்படச் செய்யவும் தொடங்கலாம். 'நமக்கு யோக்யதை இருக்கிறது. ஸ்தானம் இருக்கிறது. நம் வார்த்தை 'எடுபடும்' என்று நிச்சயமானாலே பிறருக்கு உபதேசிக்கலாம்.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.

இரையாவார்கள்!''

''சிவசிவா! என்ன கொடூரம்?''

''இராஜாங்கம் என்றால் அப்படித்தான்! கருணையும் உண்டு; கொடூரமும் உண்டு. வானதி! ஒரு சமயத்தில் என்னையே இந்தப் பாதாளச் சிறையில் அடைத்தாலும் அடைத்து விடுவார்கள். சின்னப் பழுவேட்டரையர் இன்றைக்கு என்னுடன் பேசியதை நீ கேட்டிருந்தால்......''

''நன்றாயிருக்கிறது, அக்கா! தங்களைப் பிடித்துச் சிறையிலடைக்கும் வல்லமையுள்ளவர்கள் ஈரேழு பதினாலு உலகத்திலும் இல்லை. அப்படி யாராவது செய்ய முயன்றால் பூமி பிளந்து இந்தத் தஞ்சை நகரத்தையே விழுங்கி விடாதா? அதைப் பற்றி எனக்குக் கவலையில்லை. நம்முடைய பழையாறை வைத்தியர் மகனைப் பற்றித்தான் கவலைப்படுகிறேன். அந்த சாதுப் பிள்ளை தப்ப முயன்றிருக்க மாட்டான் அல்லவா?''

''சாதுப் பிள்ளைதான்! ஆனால் யார் எப்போது எப்படி மாறுவார்கள் என்று சொல்ல முடிவதில்லையே?''

புலிகளின் உறுமல் கோஷம் இன்னும் அதிகமாயிற்று.

காவலனைப் பார்த்து, ''புலிகளுக்கு ரொம்பக் கோபம் போலிருக்கிறதே!'' என்றாள் குந்தவை.

''இல்லை, தாயே! சக்கரவர்த்தியின் திருக்குமாரியை இவை வாழ்த்தி வரவேற்கின்றன!'' என்று காவலன் சமத்காரமாய் மறுமொழி கூறினான்.

''நல்ல வரவேற்பு!'' என்றாள் குந்தவை.

''அதோடு புலிகளுக்கு இரை போடும் சமயம் நெருங்கிவிட்டது. இரையை நினைத்தும் உறுமுகின்றன!''

''அப்படியானால் நாம் சீக்கிரம் போய் விடலாம். சிறையின் வாசல் எங்கே இருக்கிறது?''

மண்டபத்தின் ஒரு மூலைக்கு இதற்குள் அவர்கள் வந்திருந்தார்கள். அங்கிருந்த புலிக் கூண்டு ஒன்றைக் காவலர்கள் அப்பால் நகர்த்தினார்கள். அங்கே தரை

யில் பதித்திருந்த கதவு ஒன்று காணப்பட்டது. இரண்டு ஆட்கள் குனிந்து கதவை வெளிப்புறமாகத் திறந்தார்கள். உள்ளே சில படிக்கட்டுக்கள் காணப்பட்டன. அவற்றின் வழியாக ஒவ்வொருவராக இறங்கிச் சென்றார்கள். இருள் அதிகமாயிற்று. இரு சேவகர்கள் பிடித்திருந்த இரண்டு தீவர்த்திகளிலிருந்து புகையினால் மங்கிய வெளிச்சம் வந்து கொண்டிருந்தது. குறுக்கும் நெடுக்குமாகச் சென்ற குறுகிய பாதைகளின் வழியாக அவர்கள் ஒற்றை வரிசையில் போக வேண்டியிருந்தது.

அங்கே புலிகளின் பயங்கர உறுமல் ரோமம் சிலிர்க்கச் செய்தது என்றால், இங்கே நாலு புறத்திலும் எழுந்த தீனமான சோக மயமான மனிதக் குரல்கள் உள்ளம் பதறி உடல் நடுங்கச் செய்தன.

ஆனால் அந்த தீனக் குரல்களுக்கு மத்தியில், — விந்தை! விந்தை! — ஓர் இனிய குரல் கீதம் இசைத்ததும் கேட்டது.

**"பொன்னார் மேனியனே!**
**புலித்தோலை அரைக்கசைத்து**
**மின்னார் செஞ்சடைமேல்**
**மிளிர்கொன்றை அணிந்தவனே!"**

அந்தப் பாதாளச் சிறையில் இருந்த அறைகள் ஒரு வரிசையாக இல்லை. முன்னும் பின்னும் கோணலும் மாணலுமாக இருந்தன. ஒவ்வோர் அறை வாசலிலும் சென்று காவலன் தீவர்த்தியை உயர்த்திப் பிடித்தான். சில அறைகளில் உள்ளே ஒருவனே இருந்தான், சிலவற்றில் இருவர் இருந்தார்கள். சில அறைகளில் இருந்தவர்களைச் சுவரில் அடித்திருந்த ஆணி வளையத்தில் சேர்த்துச் சங்கிலியில் கட்டியிருந்தது. சில அறைகளில் அவ்விதம் கட்டாமல் சுயேச்சையாக விடப்பட்டிருந்தார்கள். ஒவ்வோர் அறையிலும் இருந்தவர்களின் முகம் தெரிந்ததும் குந்தவை தேவி தலையை அசைக்க எல்லாரும் மேலே சென்றார்கள்.

நடுவில் ஒரு சமயம் வானதி, "இது என்ன கொடுமை? இவர்களை எதற்காக இப்படி அடைத்திருக்கிறது? நீதி விசாரணை ஒன்றும் கிடையாதா?" என்று கேட்டாள்.

அதற்குக் குந்தவை, "சாதாரண குற்றங்களுக்கு நீதி விசாரணை எல்லாம் உண்டு. ஆனால் இராஜாங்கத்துக்கு எதிராகச் சதி செய்தவர்கள், வெளிநாட்டு ஒற்றர்கள், ஒற்றர்களுக்கு உதவியவர்கள், — இவர்களைத்தான் இங்கே போடுவார்கள். அவர்களிடமிருந்து தெரிய வேண்டிய உண்மை தெரிந்து விட்டால் வெளியே விட்டு விடுவார்கள்! ஆனால் சிலரிடமிருந்து உண்மை ஒன்றும் தெரிவதில்லை. ஏதாவது இருந்தால்தானே சொல்லுவார்கள்? அவர்கள் பாடு கஷ்டந்தான்!" என்றாள்.

இதற்குள்ளாக, "பொன்னார் மேனியனே!" பாட்டு மிகச் சமீபத்தில் கேட்கத் தொடங்கியிருந்தது. அந்த அறையில் சென்று தீவர்த்தியைத் தூக்கிப் பிடித்தபோது அங்கே ஒரு சிறு பிள்ளை இருப்பது தெரிந்தது. ஏற்கெனவே நமக்குத் தெரிந்த பிள்ளைதான் அவன்; சேந்தன் அமுதன்.

அவனுடைய குற்றமற்ற பால் வடியும் பச்சைப் பிள்ளை முகம் இளவரசிகளுடைய கவனத்தைக் கவர்ந்தது.

அவனைக் குந்தவை பார்த்து, "பாடிக் கொண்டிருந்தது நீதானா?" என்று கேட்டாள்.

"ஆம், தாயே!" என்றான்.

"உற்சாகமாயிருக்கிறாய் போலிருக்கிறது!"

"உற்சாகத்துக்கு என்ன குறைவு, அம்மா! எங்கும் நிறைந்த இறைவன் இங்கேயும் என்னுடன் இருக்கிறார்!"

"பெரிய ஞானி போலப் பேசுகிறாயே? நீ யார் அப்பா? வெளியில் என்ன செய்து கொண்டிருந்தாய்?"

"நான் பெரிய ஞானியுமில்லை, சின்ன ஞானியுமில்லை, அம்மா! வெளியில் இருக்கும்போது பூமாலை புனைந்து இறைவனுக்குச் சமர்ப்பித்துக் கொண்டிருந்தேன். இங்கே பாமாலை புனைந்து மனத்திருப்தியடைகிறேன்!"

"நீ ஞானி மட்டுமல்ல; புலவன் என்றும் தெரிகிறது. இந்த ஒரு பாடல்தான் உனக்குத் தெரியுமா? இன்னும் பலவும் தெரியுமா?"



"இன்னும் சில பாடல்களும் வரும். ஆனால் இங்கு வந்தது முதல் இதையே பாடிக் கொண்டிருக்கிறேன்."

"ஏன்?"

"இங்கு வரும் போது தங்கச் சாலையின் வழியாக வந்தேன். இதுவரை நான் பார்த்திராத பத்தரை மாற்றுப் பசும்பொன் திரளைப் பார்த்தேன். அது 'பொன்னார் மேனியன்' திருஉருவத்தை எனக்கு நினைவூட்டியது......"

"அதிர்ஷ்டசாலி நீ! பொன்னைப் பார்த்தால் பலருக்குப் பலவித ஆசைகள் உண்டாகின்றன. உனக்கு இறைவனின் திருமேனியின் பேரில் நினைவு சென்றது. உனக்கு உற்றார் உறவினர் யாரும் இல்லையா, அப்பா?"

"தாயார் மட்டும் இருக்கிறாள். தஞ்சைக் கோட்டைக்கு வெளியில் தாமரைக் குளத்தருகில் இருக்கிறாள்."

"அந்த அம்மாள் பெயர்?"

"வாணி அம்மை."

"நான் அந்த அம்மாளைப் பார்த்து நீ இங்கே உற்சாகமாயிருக்கிறாய் என்று சொல்கிறேன்."

"பயனில்லை, அம்மா! என் தாய்க்குக் காதும் கேளாது; பேசவும் முடியாது......"

"ஓகோ! உன் பெயர் சேந்தன் அமுதனா?" என்று இளையபிராட்டி வியப்புடன் கேட்டாள்.

"ஆம், அம்மா! இந்த ஏழையின் பெயர் தங்களுக்குத் தெரிந்திருக்கிறதே?"

"என்ன குற்றத்துக்காக உன்னை இங்கே கொண்டு வந்து சிறைப்படுத்தியிருக்கிறார்கள்?"

"நேற்று வரை நான் செய்த குற்றம் இன்னதென்று எனக்கும் தெரியாமலிருந்தது. இன்றைக்குத்தான் தெரிந்தது!"

"என்னவென்று தெரிந்தது?"

"ஒற்றன் ஒருவனுக்கு உதவி செய்த குற்றத்துக்காக என்னைப் பிடித்து வந்து சிறைப்படுத்தியிருக்கிறார்கள் என்று தெரிந்தது."

"அது என்ன? எந்த ஒற்றனுக்கு நீ உதவி செய்தாய்?"

"தஞ்சைக் கோட்டை வாசலில் ஒரு நாள் வெளியூரிலிருந்து வந்த பிரயாணி ஒருவனைச் சந்தித்தேன். அவன் இரவில் தங்க இடம் வேண்டும் என்று சொன்னான். என் வீட்டுக்கு அழைத்துப் போனேன். ஆனால் அவன் ஒற்றன் என்று நான் கனவிலும் நினைக்கவில்லை..."

''அவன் பெயர் என்னவென்று தெரியுமா?''

''தன் பெயர் வல்லவரையன் வந்தியத்தேவன் என்று அவன் சொன்னான். பழைய வாணர் குலத்தைச் சேர்ந்தவன் என்றும் கூறினான்...''

குந்தவையும் வானதியும் ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டார்கள். இருவருடைய உள்ளங்களும் ஒத்துப் பேசிக் கொண்டன.

வானதி சேந்தன் அமுதனைப் பார்த்து, ''எல்லாம் விவரமாகச் சொல் அப்பா!'' என்றாள்.

சேந்தன் அமுதன் அவ்விதமே கூறினான். வந்தியத்தேவனைக் கோட்டை வாசலில் தான் சந்தித்ததிலிருந்து, பழுவூர் ஆட்கள் தன்னை ஆற்றங்கரையில் பார்த்துப் பிடித்துக் கொண்டது வரையில் சொன்னான்.

''யாரோ முன்பின் தெரியாத வழிப்போக்கனை நம்பி நீ எதற்காக அவ்வளவு தூரம் உதவி செய்தாய்?'' என்று வானதி கேட்டாள்.

''தாயே! சிலரைப் பார்த்தால் உடனே நமக்குப் பிடித்துப் போகிறது. அவர்களுக்காக உயிரையும் கொடுக்கலாம் என்று தோன்றுகிறது. காரணம் என்னவென்று சொல்வது? இன்னும் சிலரைப் பார்த்தால் அவர்களைக் கொன்று விடலாம் என்று தோன்றுகிறது. இன்றைக்கு ஒரு மனிதனை என்னோடு கொஞ்ச நேரம் அடைத்து வைத்திருந்தார்கள். அவன் பேரில் எனக்கு வந்த கோபத்துக்கு அளவில்லை. நல்லவேளையாக, சற்று நேரத்துக்கு முன்பு பழுவூர் இளையராணியின் ஆட்கள் வந்து அவனை விடுதலை செய்து கொண்டு போனார்கள்!......''

''அதுவும் அப்படியா?'' என்று குந்தவை பற்களினால் தன் செவ்விதழ்களைக் கடித்துக் கொண்டாள். அவளுடைய புருவங்கள் நெரிந்தன. ஆத்திரப் பெருமூச்சு வந்தது.

''அவ்வளவு அவசரமாக விடுதலையான மனிதன் யார்? உனக்குத் தெரியுமா?'' என்று கேட்டாள்.

''தெரியாமல் என்ன? யாரோ பழையாறை வைத்தியர் மகனாம்!''

''அப்படி என்ன அப்பா, அவன் தகாத வார்த்தைகளைச் சொன்னான்? அவனைக் கொன்று விடலாமா என்று அவ்வளவு கோபம் உனக்கு வந்ததாகச் சொன்னாயே?''

''கோடிக்கரையில் என் மாமன் மகள் பூங்குழலி இருக்கிறாள். அவளைப்





பற்றி இவன் தகாத வார்த்தைகளைச் சொன்னான். அதனாலேதான் அவன் பேரில் எனக்கு அவ்வளவு கோபம் வந்தது. ஆனாலும் அவன் ஒரு நல்ல சமாசாரம் சொன்னபடியால் போனால் போகிறதென்று விட்டுவிட்டேன்.''

''அது என்ன அவ்வளவு நல்ல சமாசாரம், அப்பா!''

''என்னுடைய நண்பன் வந்தியத்தேவனுடனேதான் இவன் கோடிக்கரைக்குப் போனான். அங்கே இந்தச் சண்டாளன் என் சிநேகிதனுக்குத் துரோகம் செய்து பழுவூர் ஆட்களிடம் பிடித்துக் கொடுத்து விடப் பார்த்தான், அது முடியவில்லை......''

''முடியவில்லையா? அப்படியானால் அந்த ஒற்றன் தப்பித்துக் கொண்டு விட்டானா?'' என்று வானதியும் குந்தவையும் ஒரே குரலில் ஆர்வத்துடன் கேட்டார்கள். இதைத் தெரிந்து கொள்ளத்தானே அவர்கள் இந்தப் பாதாளச் சிறைக்குள்ளே வந்தது?

''ஆம், அம்மணி! என் நண்பன் தப்பித்துக்கொண்டு போய்விட்டான். பூங்குழலி அவனை இரவில் படகில் ஏற்றிக் கொண்டு கடலில் இலங்கைத் தீவுக்குச் சென்று விட்டாளாம்! தேடிப் போனவர்கள் ஏமாந்தார்கள். இந்தப் பாதகனும் ஏமாந்தான்!''

பெண்மணிகள் இருவரும் ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டார்கள். அவர்களுடைய உள்ளத்தில் ததும்பிய மகிழ்ச்சியை அவர்களுடைய முக மலர்கள் வெளியிட்டன.

குந்தவை, சேந்தன் அமுதனைப் பார்த்து. ''அப்பனே! ஒற்றன் ஒருவன் தப்பித்துக் கொண்டது பற்றி நீ இவ்வளவு சந்தோஷப்படுகிறாயே? உன்னைச் சிறையில் வைத்திருப்பது சரிதான்!'' என்றாள்.

''தாயே! அந்தக் குற்றத்துக்காக என்னைச் சிறையில் போடுவது சரியானால், உங்கள் இருவரையும் கூட எனக்குப் பக்கத்து அறையில் போட வேண்டுமே!'' என்றான்.

பெண்மணிகள் இருவரும் நகைத்தார்கள். இருளடைந்த அந்தப் பாதாளச் சிறையில், சேந்தன் அமுதனுடைய பாட்டு எவ்வளவு விசித்திரமாயிருந்ததோ, அப்படி அவர்களுடைய சிரிப்பும் அபூர்வமாக ஒலித்தது.

''நீ வெகு கெட்டிக்காரன். மிகப் பொல்லாதவன். உன்னை இங்கே வைத்திருந்தால் நீ பாட்டுப் பாடியே இங்கேயுள்ள மற்றவர்களையும் கெடுத்துவிடுவாய். கோட்டைத்தலைவரிடம் சொல்லி உன்னை விடுதலை செய்யப் பண்ணி விட்டு மறுகாரியம் பார்க்க வேண்டும்'' என்றாள் குந்தவை.

''தாயே! அப்படிச் செய்ய வேண்டாம்! அடுத்த அறையில் ஒரு மனிதன் இருக்கிறான். அவன் என்னிடம் தினம் நூறு தடவை 'நீ எனக்கு ஒரு பாட்டுச் சொல்லிக் கொடு! சொல்லிக் கொடுத்தால், பாண்டிய குலத்து மணி மகுடமும் மாலையும் இலங்கையில் எங்கே ஒளித்து வைத்திருக்கிறேன் என்று தெரிவிக்கிறேன்' என்பதாகச் சொல்லிக் கொண்டிருக்கிறான். அந்த இரகசியத்தை நான் தெரிந்து கொள்ளும் வரையில் இங்கேயே விட்டு வைக்கச் சொல்லுங்கள்!'' என்றான் சேந்தன் அமுதன்.

''பாவம்! அந்த மாதிரி உனக்கும் பைத்தியம் பிடிக்கும் வரையில் இங்கேயே இருப்பேன் என்கிறாயா? அப்புறம் உன் தாயார் வாணியம்மையின் கதி என்ன?'' என்று கூறிவிட்டு இளையபிராட்டி அங்கிருந்து புறப்பட, மற்றவர்களும் சென்றார்கள்.

அரை நாழிகை நேரத்துக்கெல்லாம் சில சேவகர்கள் வந்து சேந்தன் அமுதனைப் பாதாளச் சிறையிலிருந்து விடுதலை செய்து தஞ்சைக் கோட்டை வாசலில் கொண்டு போய் விட்டார்கள்.

# அத்தியாயம் 23

## நந்தினியின் நிருபம்

அன்று மாலை நந்தினி லதா மண்டபத்தில் ஹம்ஸதூளிகா மஞ்சத்தில் அமர்ந்து நிருபம் ஒன்று எழுதிக் கொண்டிருந்தாள். சில வரிகள்தான் எழுதினாள். எழுதும்போது சில சமயம் சுழற்காற்றில் இளங்கொடி நடுங்குவது போல் அவள் உடம்பு நடுங்கிற்று. அடிக்கடி பெருமூச்சு விட்டாள். அந்தக் குளிர்ந்த வேளையில் பக்கத்தில் தாதிப் பெண் நின்று மயில் விசிறியால் விசிறிக்கொண்டிருந்தும் அவளுடைய பளிங்கு நெற்றியில் முத்து முத்தாக வியர்வை துளித்திருந்தது. அவள் எழுதிய நிருபமாவது:—

**"அரசிளங்குமரா! தயங்கித் தயங்கி, பயந்து பயந்து, இந்த நிருபம் எழுதத் துணிந்தேன். இராஜ்யத்தின் நிலைமையைப் பற்றிப் பலவிதமான செய்திகள் காதில் விழுகின்றன. தாங்கள் எதையும் கவனிப்பதில்லை. நோயினால் மெலிந்திருக்கும் தங்கள் தந்தை பலமுறை சொல்லி அனுப்பியும் தாங்கள் தஞ்சைக்கு வரவில்லை. இதற்குக் காரணம் நான்தானோ என்ற எண்ணம் என்னை வதைக்கிறது. தங்களை ஒருமுறை சந்தித்தால் எல்லாச் சந்தேகங்களையும் போக்கி விடுவேன். அதற்குத் திருவுளம் இரங்குவீர்களா? தஞ்சைக்கு வர விருப்பமில்லாவிட்டால், கடம்பூர் சம்புவரையர் மாளிகையில் சந்திக்கலாம். நான் இன்று தங்கள் பாட்டியின் ஸ்தானத்தில் இருக்கிறேன். நாம் சந்தித்துப் பேசுவதில் என்ன ஆட்சேபம் இருக்க முடியும்? இதைக் கொண்டு வரும் வீர இளைஞர், சம்புவரையர் குமாரரைத் தாங்கள் பூரணமாக நம்பி அவரிடம் எந்தச் செய்தியும் சொல்லி அனுப்பலாம்.— இங்ஙனம், துரதிர்ஷ்டத்துடன் கூடப் பிறந்த அபாக்கியவதி நந்தினி."**

உண்மையிலேயே தயங்கித் தயங்கி, யோசித்து யோசித்து, மேற்கூறிய நிருபத்தை எழுதிய பிறகு, விசிறிக் கொண்டிருந்த தாதிப் பெண்ணைப் பார்த்து, "போடி! போய்க் கடம்பூர் இளவரசரை உடனே அழைத்து வா!" என்றாள் நந்தினி.

தாதி சென்று கந்தமாறனை அழைத்து வந்து விட்டுவிட்டுச் சற்று விலகிப் போய் நின்றாள்.

கந்தமாறனின் கண்கள் நந்தினியை ஏறிட்டுப் பார்ப்பதற்குக் கூசின. எங்கேயோ தோட்டத்தைப் பார்த்த வண்ணம் கந்தமாறன் நின்றான்.

"ஐயா! உட்காருங்கள்!" என்று கூறிய நந்தினியின் குரல் நடுக்கம் கந்தமாறனை அவளுடைய முகத்தை உற்றுப் பார்க்கும்படி செய்தது.

நந்தினி தொடர்ந்து, "குந்தவை தேவியைப் பார்த்த கண்களினால் என்னைப் பார்க்க முடியாமலிருப்பதில் வியப்பில்லை!" என்று கூறிப் புன்னகை புரிந்தாள்.

அந்தச் சொற்கள் கந்தமாறனுடைய நெஞ்சைப் பிளந்தன. அவளுடைய புன்னகையோ அவனுடைய தலையைக் கிறுகிறுக்கச் செய்தது.

தட்டுத் தடுமாறி, "ஆயிரம் குந்தவைகள் ஒரு நந்தினி தேவிக்கு இணையாக மாட்டார்கள்!" என்றான்.

"ஆயினும், இளையபிராட்டி விரலை அசைத்தால் வானுலகம் சென்று இந்திரனுடைய சிம்மாசனத்தைக் கொண்டு வந்து விடுவீர்கள். நான் வருந்தி வேண்டிக் கொண்டால், உட்காரக் கூட மாட்டீர்கள்!"

கந்தமாறன் உடனே எதிரிலிருந்த மேடையில் உட்கார்ந்து, "தாங்கள் பணித்தால் பிரம்மலோகம் சென்று



பிரம்மாவின் தலையைக் கொய்து கொண்டு வருவேன்!" என்றான்.

நந்தினி நடுநடுங்கினாள். கந்தமாறனைப் பாராமல் வேறு பக்கம் பார்த்துக் கொண்டு, "பரமசிவன் கொய்தது போகப் பிரம்மாவுக்கு மிச்சம் நாலு தலைகள் இருக்கின்றன. தாங்கள் இன்னொன்றைக் கொய்தாலும் பிரம்மா பிழைத்துப் போவார்!" என்றாள்.

"தேவி! வேறு எது வேண்டுமானாலும் சொல்லுங்கள். ஆனால் குந்தவை தேவியைப் பற்றி மட்டும் என்னிடம் புகழ்ந்து பேச வேண்டாம். சிநேகிதத் துரோகியான வந்தியத்தேவனுக்கு அவள் பரிந்து பேசியதை நினைத்தால் என்னுடைய இரத்தம் கொதிக்கிறது!" என்றான் கந்தமாறன்.

"ஆனாலும் இன்று காலையில் தங்களுடைய கற்பனா சக்தி அபாரமாயிருந்தது என்னவோ உண்மைதான்! தங்களுக்கும் தங்கள் நண்பனுக்கும் நடந்து வந்த யுத்தம் பற்றி எவ்வளவு கற்பனையாகப் பேசினீர்கள்?" என்று நந்தினி கூறிய வார்த்தைகள் கந்தமாறனுக்குச் சிறிது வெட்கத்தை உண்டாக்கின.

"அவனைச் சந்தித்தது எப்படி என்பதற்கு ஏதாவது சொல்ல வேண்டும் அல்லவா? அதனால் சொன்னேன். அவன் என்னை முதுகில் குத்தியது என்னமோ உண்மைதானே!" என்றான்.

"ஐயா! அன்று நடந்ததையெல்லாம் தாங்கள் மறுபடியும் ஒரு தடவை ஞாபகப்படுத்திக் கொண்டு பார்ப்பது நல்லதல்லவா?" என்றாள் நந்தினி.

"தாங்கள் கூட என் வார்த்தையைச் சந்தேகிக்கிறீர்களா, என்ன?"

"சந்தேகிக்கவில்லை. ஆயினும் தாங்கள் சில விஷயங்களை மறந்து விட்டிருக்கிறீர்கள். வந்தியத்தேவனை என்றைக்காவது ஒரு நாள் சிறைப்படுத்திக் கொண்டு வருவார்கள். அப்போது தாங்கள் அவன் மீது சாட்டும் குற்றம் உண்மையென்று ருசுவாக வேண்டும் அல்லவா?"

"அதில் எனக்கு ஒன்றும் சிரத்தை இல்லை. அவனை இன்னமும் மன்னித்து விடவே விரும்புகிறேன்."

"தங்களுடைய பெருந்தன்மையைப் பாராட்டுகிறேன். ஆயினும் நமக்குள் உண்மையை நிச்சயம் செய்து கொள்வது நல்லது. அன்றிரவு நடந்ததையெல்லாம் மீண்டும் ஒரு முறை ஞாபகப்படுத்திக் கொண்டு பாருங்கள். நிலவறையின் வழியாகத் தாங்கள் வந்தபோது பழுவேட்டரையரையும் என்னையும் வழியில் சந்தித்தீர்கள். தங்களுக்கு அது நினைவிருக்கிறதா?"

"நன்றாய் நினைவிருக்கிறது. என் உடம்பில் உயிர் உள்ள வரையில் அதை நான் மறக்க முடியாது."

"அப்போது தாங்கள் என்ன சொன்னீர்கள் என்பதும் நினைவிருக்கிறதல்லவா?"

"என்ன சொன்னேன் என்பது நினைவில்லை. தங்களைப் பார்த்தபோது மெய்மறந்து போனேன்."

"ஆனால் தாங்கள் சொன்னது எனக்கு நன்றாய் நினைவிருக்கிறது. 'ஐயா! தங்கள் **குமாரியின்** அழகைப் பற்றி எவ்வளவோ நான் கேள்விப்பட்டதுண்டு. ஆனால் அதெல்லாம் உண்மைக்கு உறைபோடக் காணாது!' என்று சொன்னீர்கள்!..."

"ஐயையோ! அப்படியா சொன்னேன்?— அதனால்தான் அவர் முகம் அப்படிச் சிவந்ததாக்கும்! இப்போது கூட அவருக்கு என்னைக் கண்டால் அவ்வளவாகப் பிடிக்கவில்லை......"

நந்தினி சிரித்துவிட்டு, "உங்களை அவருக்குப் பிடிக்காவிட்டால் பாதகமில்லை; உங்களுக்கு அவரைப் பிடித்திருக்கிறதல்லவா! அதுவே போதும்!" என்றாள்.

"தேவி! உண்மையைச் சொல்கிறேன். தங்களிடம் மறைப்பதில் பயன் என்ன? எனக்கு அவரைப் பிடிக்கவில்லை" என்றான் கந்தமாறன்.

"அதனாலும் பாதகமில்லை! எனக்கு அவரைப் பிடித்திருக்கிறது; அதுவே போதும்! இப்படிப்பட்ட கணவனைப் பெறுவதற்கு நான் எவ்வளவு தவம் செய்தேனோ?" என்றாள்.

இதைக் கேட்டு கந்தமாறன் உள்ளம்

குழம்பிற்று. ஒன்றும் சொல்லத் தெரியாமல் சும்மா இருந்தான்.

"அது போனால் போகட்டும்; நிலவறையில் எங்களைப் பார்த்த பிறகு என்ன செய்தீர்கள்?" என்று நந்தினி கேட்டாள்.

"தீவர்த்தி பிடித்து வந்த காவலன் வழி காட்டிக் கொண்டு சென்றான். நான் தங்கள் நினைவாகவே கூடச் சென்றேன். இரகசிய மதில் சுவரைத் திறந்து விட்டுக் காவலன் நகர்ந்து கொண்டான். நான் அதில் நுழைந்தேன். உடனே முதுகில் யாரோ குத்தினார்கள். அவ்வளவுதான் நினைவிருக்கிறது. வந்தியத்தேவன் நான் அங்கு வருவேன் என்பதை எப்படியோ தெரிந்து கொண்டு வெளியில் காத்திருந்திருக்க வேண்டும்......"

"இல்லை ஐயா! தங்கள் ஊகம் மிகத் தவறானது. வெளியில் அவர் காத்திருக்கவே இல்லை."

"தாங்கள் கூட அவன் கட்சியில் சேர்ந்து விட்டீர்களா?"

"நான் ஏன் அவன் கட்சியில் சேர வேண்டும்? எனக்கு என்ன லாபம்? அல்லது அவனுக்குத்தான் என்ன லாபம்? இப்படித்தான் நடந்திருக்க வேண்டும் என்று எனக்கு இப்போது நிச்சயமாய்த் தெரிகிறது."

"சொல்லுங்கள், தேவி! எப்படியென்று சொல்லுங்கள்!"

"வந்தியத்தேவன் வெளியே காத்திருக்கவில்லை!..."

"பின்னே யார் காத்திருந்தார்கள்?"

"வேறு யாரும் இல்லை; வந்தியத்தேவன் **வெளியில்** காத்திருக்கவில்லையென்றுதானே சொன்னேன்? அவன் அந்தப் பொக்கிஷ நிலவறைக்குள்ளேயேதான் காத்திருந்திருக்கிறான்!"

"என்ன? என்ன? அது எப்படி சாத்தியமாகும், தேவி!"

"அவன் அன்று திடீரென்று மாயமாய் மறைந்து விட்டான். எப்படி மறைந்திருப்பான்? நீங்களே யோசித்துப் பாருங்கள்! எப்படியோ அவன் பொக்கிஷநிலவறைக்குள் புகுந்து அவ்விடத்து இரகசியங்களையெல்லாம் அறிந்து கொண்டான். பின்னர், உங்களைப் பின் தொடர்ந்து வந்திருக்கிறான். கதவைத் திறந்ததும் தங்களைப் பின்னாலிருந்து குத்தித் தள்ளி விட்டுத் தானும் வெளியேறியிருக்கிறான். அப்புறம் ஒருவேளை அவன் மனச்சாட்சியே அவனை உறுத்தியிருக்கலாம். தங்களை அந்த ஊமையின் வீட்டில் கொண்டு போய்ப் போட்டுவிட்டுப் போயிருக்கிறான்!..."

"தேவி! தாங்கள் சொல்கிறபடிதான் நடந்திருக்க வேண்டும்; சந்தேகமில்லை. இத்தனை நாளும் இது என் புத்திக்கும் எட்டவில்லை; மற்றவர்களுக்கும் புலப்படவில்லை! இந்தச் சோழ நாட்டிலேயே மதி நுட்பம் அதிகம் உள்ளவர் யார் என்று கேட்டால், தாங்கள்தான் என்று நான் சொல்லுவேன். இந்த உலகத்தில் அறிவு படைத்தவர்கள் உண்டு; அழகு படைத்தவர்கள் உண்டு. இரண்டும் சேர்ந்துள்ளவர்களைப் பிரம்மசிருஷ்டியில் காண்பது அபூர்வம். தங்களிடந்தான் அழகு, அறிவு, இரண்டும் பொருந்தியிருக்கக் காண்கிறேன்!" என்று பரவசமாகக் கூறினான் கந்தமாறன்.

"ஐயா! தாங்கள் இப்போது சொன்னது மனப்பூர்வமாகக் கூறின வார்த்தையா? அல்லது உலகத்தில் விட புருஷர்கள் பர ஸ்திரீகளிடம் சொல்லும் முகஸ்துதியா?"

"முகஸ்துதியல்ல; சத்தியமாக என் மனத்தில் இருப்பதையே சொன்னேன்."

"அப்படியானால் என்னைப் பூரணமாக நம்புவீர்களா? நம்பி எனக்காக ஓர் உதவி செய்வீர்களா?"

"என்னால் முடிகிற காரியம் எதுவாயிருந்தாலும் அதைச் செய்யச் சித்தமாயிருக்கிறேன்."

"எனக்காகத் தாங்கள் காஞ்சிக்குப் போக வேண்டும்."

"காசிக்குப் போகச் சொன்னாலும் போகிறேன்."

"அவ்வளவு தூரம் போக வேண்டியதில்லை. காஞ்சியில் உள்ள இளவரசர் ஆதித்த கரிகாலருக்கு ஒரு திருமுகம் கொடுப்பேன். அதை அவரிடம் சேர்ப்பிக்க வேண்டும். சேர்ப்பித்துவிட்டு அவரைத் தங்கள் கடம்பூர் அரண்மனைக்கு விருந்தாளியாக

அழைக்க வேண்டும்....."

"தேவி! இது என்ன வார்த்தை சொல்கிறீர்கள்? தங்கள் கணவரும், என் தந்தையும், மற்றும் பல சோழ நாட்டுப் பிரமுகர்களும் இராஜ்யத்தைப் பற்றிச் செய்துவரும் ஏற்பாடு தங்களுக்குத் தெரியாதா?"

"நன்றாய்த் தெரியும். அதைவிட இன்னும் சில செய்திகளும் தெரியும். ஐயா! தங்கள் குடும்பமும் என் குடும்பமும் மற்றும் பல பெரிய குடும்பங்களும் பெரும் அபாயத்தின் வாசலில் நின்று வருகின்றன. அதற்குக் காரணம் யார் தெரியுமா?"

"சொல்லுங்கள், தேவி!"

"இன்று மத்தியானம் இங்கு விருந்தாளியாக வந்திருந்தாளே அந்தப் பாதகிதான்!"

"ஐயையோ! இளையபிராட்டியையா சொல்கிறீர்கள்?"

"அந்த நாகப் பாம்பைத்தான் சொல்கிறேன். பாம்பின் கால் பாம்பு அறியும். குந்தவையின் சூழ்ச்சி இந்த நந்தினிக்குத்தான் தெரியும். உம்முடைய சிநேகிதன் வந்தியத்தேவனை அவள் இலங்கைக்கு அனுப்பியிருக்கிறாள். எதற்காகத் தெரியுமா? மூலிகைகொண்டுவருவதற்கு என்பது பெரும் பொய்! சுந்தர சோழர் பிழைக்க வேண்டுமே என்று அவள் தவித்துக் கொண்டிருக்கவில்லை. அவருக்குப் பிறகு மதுராந்தகரும் பட்டத்துக்கு வ்ரக்கூடாது. ஆதித்த கரிகாலரும் பட்டத்துக்கு வரக்கூடாது. அவனுடைய அருமைத் தம்பி அருள்மொழி வர்மன் வரவேண்டும் என்பது அவள் எண்ணம். அருள்மொழி வர்மன் பட்டத்துக்கு வந்தால் இவள் இஷ்டம் போல் ஆட்டி வைக்கலாம். அப்புறம் சோழ சாம்ராஜ்யத்தின் சக்கரவர்த்தினி குந்தவை தேவிதான்; சக்கரவர்த்தி யார் தெரியுமா? உங்கள் சிநேகிதன் வந்தியத்தேவன்!......"

"ஆகா! அப்படியா? இதை எப்படியாவது தடுத்தே தீர வேண்டும். என் தந்தையிடமும் பழுவேட்டரையர்களிடமும் உடனே சொல்ல வேண்டும்......"

"அவர்களிடம் சொல்லிப் பயன் இல்லை. அவர்கள் நம்ப மாட்டார்கள். குந்தவையின் தந்திரத்தை மாற்றுத் தந்திரத்தால் வெல்ல வேண்டும். நீர் உதவி செய்தால் வெல்லலாம்!"

"கட்டளையிடுங்கள், தேவி!"

"இதோ இந்த ஓலையைச் சர்வ ஜாக்கிரதையாகக் கொண்டு போய்க் காஞ்சியில் ஆதித்தகரிகாலரிடம் கொடுக்க வேண்டும், கொடுப்பீர்களா?" என்று சொல்லிக் கொண்டே ஓலைச் சுருளையும் அதைப் போட வேண்டிய குழலையும் நீட்டினாள். மோக வெறியில் மூழ்கிப் போயிருந்த கந்தமாறன் ஓலைச் சுருளையும் குழலையும் வாங்கிக் கொள்வதற்குப் பதிலாக நந்தினியின் கரத்தைப் பிடித்துக் கொண்டு, "தங்களுக்காக எது வேணுமானாலும் செய்வேன்!" என்று உளறினான்.

அச்சமயம் சடசடவென்று ஒரு சத்தம் கேட்டது. பழுவேட்டரையர் அரண்மனையிலிருந்து லதா மண்டபத்துக்கு வரும் பாதையில் விரைந்து வந்து கொண்டிருந்தார். திடீரென்று எதிர்பாராமல் வந்தவரைக் கண்டு, தாதிப் பெண் திடுக்கிட்டு விலகி நின்றாள். அங்கே மண்டபத்தில் விட்டத்திலிருந்து தொங்கி ஆடிய ஒரு முக்கோணத்தில் பெரிய கிளி ஒன்று சங்கிலியால் பிணைத்து வைக்கப்பட்டிருந்தது. வந்த வேகத்தில் பழுவேட்டரையர் தம்மையறியாமல் அந்தக் கிளியைக் கையினால் பற்றினார். அவருடைய மனத்திலிருந்த வேகம் அவருடைய கையின் வழியாகப் பாய்ந்தது. கிளியின் சிறகுகள் சடசடவென்று அடித்துக்கொண்டன. பழுவேட்டரையரின் கொடூரமான பிடியைத் தாங்க முடியாமல் கிளி 'கிறீச்' சிட்டது!

(தொடரும்)

"மாப்பிள்ளே! தீபாவளிக்கு உனக்கு டி. வி.... ஃப்ரிட்ஜ், வைர மோதிரம்... ஸ்கூட்டர்... அம்பாஸிடர் கார்... எது வேணுமோ கேளு... கொண்டாந்து தரேன்!"



# தீபாவளி வாழ்த்துக்கள்

- தேவேந்திர சேலைகள்
- கோயமுத்தூர் கோரா சேலைகள்
- பரமகுடி புட்டா சேலைகள்
- கோடம்பாக்கம் சேலைகள்
- உறையூர் சேலைகள்
- செட்டிநாடு சேலைகள்
- ஓர நாட்டுச் சேலைகள்
- மற்றும் பலவிதமான

பட்டு மற்றும் பருத்திச் சேலைகள்

**கோ-ஆப்டெக்ஸ்**
கைத்தறி



**20-40%**
பண்டிகைக்கால
சிறப்புத் தள்ளுபடி

DIPR/MS/87 : EFFICIENT

# உப்பு பிஸ்கோத்து

(அறிமுக எழுத்தாளர்)

"உங்க அப்பாவும், அம்மாவும் காலைல எங்கேயோ போனாங்களே, எங்கே?'' அந்தச் சிறுமி மீனுவிடம் கேட்டாள்.

''எங்கம்மாவுக்கு வயித்து வலி வந்துருச்சு. அப்பா ஆஸ்பத்திரிக்குக் கூட்டிக்கிட்டுப் போயிருக்கிறார்.''

மீனாட்சி அந்தச் சிறுமியின் கேள்விக்குப் பதில் சொல்லி விட்டாள். அதன் பிறகு,

''எங்கப்பா வரும் போது எனக்கு உப்பு பிஸ்கோத்து வாங்கிட்டு வருவார்,'' என்று ஆவல் மேலிடச் சொன்னாள்.

''எனக்குக் குடுப்பியா?'' மீனாட்சியிடம் அந்தச் சிறுமி கேட்டதற்கு,

''ஓ, மத்தியானம் எடுத்துட்டு வந்து தர்றேன்'' என்றாள்.

மீனாட்சி எட்டு வயதுச் சிறுமி. அவளுக்கு ஆசையெல்லாம் அந்த உப்பு பிஸ்கட்டின் மேல்தான்.

அந்தக் கிராமத்தின் பிள்ளையார் கோயில் முன்புறமிருந்த பெரிய வேப்ப மரத்தின் நிழலில் அவ்விருவரும் பாண்டி ஆடிக்கொண்டிருந்தனர். அன்று, சனிக்கிழமையாதலால் பள்ளிக்கூடமில்லை. எனவே, இவர்களோடு இன்னும் சில குழந்தைகளும் விளையாடிக் கொண்டிருந்தனர்.

காலையில் மீனாட்சியின் அம்மா வயிற்று வலியால் அவதிப்பட்டதால் எதுவும் சமைக்க முடியவில்லை. அவர்கள் போகும் போது,

''மீனு, நாங்க வர நேரமானாலும் ஆகும். நீ பாட்டி வீட்டிலே போய்ச் சாப்பிட்டுக்கோ. பாட்டிகிட்டே சொல்லி இருக்கேன். சமைச்சு வெச்சிருப்பாங்க. வீட்டைப் பூட்டிச் சாவியைப் பாட்டிகிட்டே கொடுத்துடு. எங்கேயாவது தொலைச்சிடாதே, என்ன?'' என்று சொல்லிவிட்டுப் போனார்கள்.

மீனு, ''சரிம்மா,'' என்றவளாய், வீட்டைப் பூட்டிக் கொண்டு பாட்டி வீட்டில் போய்ச் சாப்பிட்டு விட்டு வந்து இப்போது இங்கே விளையாடிக் கொண்டிருக்கிறாள்.

அவர்கள் எப்போது டவுனுக்குப் போனாலும் தங்கள் ஒரே பெண் மீனாட்சிக்கென அந்த உப்பு பிஸ்கட்டும், மிக்ஸரும் இருநூறு கிராம் வாங்கி வருவார்கள். மற்ற நாட்களில் அவளுக்குத் தீனி என்று ஒன்றும் கிடைக்காது. உள்ளூர் மளிகைக் கடையில், பொரியும் பொட்டுக்கடலையும்தான் கிடைக்கும். இல்லையென்றால் அம்மாவிடம் பத்துப் பைசா வாங்கிக் கொண்டு போய், மிட்டாய் வாங்கித் தின்பாள்.

இன்றைக்கு அவளின் அப்பாவும், அம்மாவும் டவுனுக்குப் போயிருக்கிறார்கள். இன்னும் நான்கைந்து நாட்களுக்கு மிக்ஸரும் பிஸ்கட்டும் கொஞ்சம் கொஞ்சமாகத் தின்னலாம் என்ற எண்ணம் அவளுக்குள் ஒரு சந்தோஷத்தை உண்டு பண்ண, நாவில் நீர் ஊறியது.

பதினொரு மணி சுமாருக்கு அவள் விளையாடுவதை விட்டுவிட்டு வீட்டுக்கு வந்து, வீட்டைப் பெருக்கி, சுத்தம் செய்து விட்டு, கொல்லைப் புறத்துத் தொட்டிக்குக் கிணற்றிலிருந்து ஐந்தாறு குடம் தண்ணீர் கொண்டு வந்து ஊற்றினாள். அவள் பாவாடையும் சட்டையும் நனைந்து போனதையும் அவள் பொருட்படுத்தவில்லை. வெயில் நேரம், சீக்கிரமாய்க் காய்ந்து போகும் என்றெண்ணிக் கொண்டு பாட்டி வீட்டுக்குப் போய்ப் பாட்டியிடம்,

''எங்களுக்குச் சோறு ஆக்கி வெச்சிருக்கியா?'' என்று கேட்டாள்.

''ஆக்கி வெச்சிருக்கு. இதென்ன துணியெல்லாம் நனைஞ்சிருக்கு! தண்ணியெடுத்தியா?'' என்று பாட்டி கேட்டாள்.

''ஆமாம்.''

''இப்ப இருந்தே குடத்தைப் போட்டுக்கிட்டுத் தண்ணி எடுத்தா இடுப்பு என்னத்துக்குடி ஆகும்?'' என்று பாட்டி கோபித்தாள்.

மீனாட்சி தானாகவே சாப்பாட்டைத் தட்டில் போட்டுச் சாப்பிட்டுவிட்டு, கைகழுவிக்கொண்டு தட்டையும் கழுவி வைத்தாள். ஈரக் கையைப் பாவாடையில் துடைத்துக்கொண்டு, மீண்டும் கோயில் பக்கம் ஓடினாள், விளையாட.

அவளைப் போலவே எல்லாக் குழந்தைகளும் சாப்பிடப் போய்விட்டார்கள். எனவே, வீட்டுத் திண்ணையில் வந்து உட்கார்ந்து கொண்டாள். பந்தலில், குருவி ஒன்று குதித்துக் குதித்து இரை கொத்திக் கொண்டிருந்தது. கீச் கீச்சென்று.

அதை அவள் வேடிக்கை பார்த்துக் கொண்டே இருந்தாள். வீட்டைத் திறந்து, அரிசி ஒரு பிடி எடுத்து வந்து, பரவலாகப் போட்டாள். முதலில் பயந்து பறந்த குருவி,

மீண்டும் வந்து கொத்தியது. மகிழ்ச்சியோடு மௌனமாகக் கன்னத்தில் கைகொடுத்துக் குருவியையே கவனித்துக் கொண்டிருந்தாள்.

அப்போது சைக்கிள் டயரை உருட்டிக் கொண்டு ஒரு சிறுவன் ஓடி வந்தான். சத்தம் கேட்டுக் குருவி பறந்து விட்டது.

''மீனாட்சி! உங்க அப்பா அம்மா, பஸ்ஸை விட்டு இறங்கி வர்றாங்க!'' — தெருவோரத்திலிருந்து தோழியின் குரல் கேட்டது.

அவளுக்கு அப்போதே நாக்குச் சுழற்றியது. வெளியில் வந்து நின்று வீதியைப் பார்த்தாள். தூரத்தில் அவர்கள் வந்துகொண்டிருந்தார்கள். அம்மாவின் கையில் அந்த மஞ்சள் நிறத் துணிப்பை இருந்தது.

அம்மா, பையை இவள் கையில் கொடுத்துவிட்டு, கொல்லைப்புறமாக கை, கால் கழுவப் போனாள். அம்மாவின் முகம் லேசாக வாடியிருந்ததைப் பார்த்தாள், மீனாட்சி.

அப்பா, சட்டையைக் கழற்றி, சுவரில், ஆணியில் மாட்டி விட்டு வந்து சுவரோரம் மூட்டை மேல் உட்கார்ந்தார்.

''ஏய் மீனு! சாப்பாடு எடுத்துட்டு வா!'' என்று கூப்பிட, அப்போதுதான் பையைப் பிரித்து பிஸ்கட்டைக் கையில் எடுத்தவள், அதை அப்படியே வைத்துவிட்டு வந்தாள்.

''என்னப்பா?''

''சாப்பாடு போடுன்னு, என்னவா?'' குரலில் கோபமிருந்தது.

''சாப்பாடு இங்கே இல்லே. பாட்டி வீட்டிலே இருக்கு.

''காலையிலிருந்து என்ன பண்ணினே? உன்னாலே சாப்பாட்டைக் கூட இங்கே எடுத்

—கிருஷ்நா—



துட்டு வந்து வைக்க முடியாதா?''

அப்பா இப்படிப் பேசுவார் என்று அவள் எதிர்பார்க்கவில்லை.

''வந்ததும் வராததுமா திங்கறதுக்குத் தேடறியே. அந்த உணர்த்தி வேலையிலும் இருக்கணும். போய்ச் சாப்பாட்டை எடுத்துட்டு வா.''

அதற்குள் அம்மா வந்துவிட்டாள்.

''என்னங்க, குழந்தையை இப்படித்திட்டிக்கிட்டு. அவள் என்ன வேலை செய்வாள்? நான் போய் எடுத்திட்டு வர்றேன்,'' என்று போனாள்.

மீனாட்சிக்கு அழுகை அழுகையாக வந்தது. அப்பாவின் இந்தக் கோபத்தை அவள் எதிர்பார்க்கவில்லை. அப்பாவின் முன் நிற்கப் பயந்தவளாய்த் திண்ணையில் வந்து உட்கார்ந்து கொண்டாள்.

முழங்காலைக் கட்டிக் கொண்டு முக வாயைக் கைகள் மேல் வைத்துக் கொண்டு, இன்னும் பந்தல் நிழலில் அரிசியைக் கொத்திக் கொண்டிருந்த குருவியைப் பார்த்தாள். அதன் சுதந்திரத்தைக் கண்டு அவள் பொறாமைப்பட்டாள்.

அம்மா, ''உள்ளே வா மீனு,'' என்று அழைத்தபடி சாப்பாட்டுப் பாத்திரங்களோடு உள்ளே போனாள்.

அவளுக்கு ஒரே வேதனை.

உள்ளே சாப்பாட்டுத் தட்டை அப்பா வீசியெறியும் சப்தம் கேட்டது. 'எப்போதும் இப்படி நடக்காதே.'

''ஏங்க இப்படிக் கோபப்படறீங்க?'' என்று அம்மா கேட்டாள்.

''பின்னே என்னடி? அவனவன் பசியோடு வீட்டுக்கு வந்தால் இங்கே பச்சைத் தண்ணி கூட இருக்காது.''

''அதுதான் நான் போய் எடுத்துட்டு வந்துட்டேனே?''

அப்பா, அப்புறம் பேசவில்லை. மீனாட்சி திண்ணையிலேயே உட்கார்ந்திருந்தாள்.

''டாக்டர் கொடுத்த மாத்திரையெல்லாம் பத்திரமா எடுத்து வெச்சியா?'' என்று அப்பா கேட்டது அவளுக்குக் கேட்டது.

''எடுத்து வெச்சிருக்கேன். ஆபரேஷனுக்கு எவ்வளவு பணம் செலவாகப் போகுதோ? எனக்குப் பயமா இருக்குங்க.''

''இத்தனை நாள் கவனிக்காம விட்டது நம்ம தப்புதான். இன்னும் தாமதம் பண்ணியிருந்தால் நீ பொழைக்கிறதே கஷ்டம்னு டாக்டர் சொன்னதும் எனக்கு உசிரே இல்லை.''

அப்பாவும் அம்மாவும் பேசிக் கொண்டது அவள் காதில் விழுந்து நெஞ்சில் சுரீர் என்று குத்தியது. அம்மாவுக்கென்ன? அதனால்தான் அப்பா கோபித்துக் கொண்டாரா? அதனால்தான் அம்மா முகம் வாடியிருந்ததா?

'ஐயோ! கடவுளே! என் அம்மாவுக்கு ஒன்றும் நேரக் கூடாது.' அவள் சின்னப் பெண்ணானாலும் மனத்துக்குள் அழுதாள்.

உப்பு பிஸ்கட் மீதான எண்ணத்தை அப்போதே விட்டுவிட்டாள்.

அம்மா கூப்பிட்டுக் கொடுத்த போதும் கூட அதை வாங்க மறுத்து விட்டாள்.

அப்பா ஒன்றும் பேசாமல் அதை வேடிக்கை பார்த்தார். மீனாட்சியை அதிகம் திட்டி விட்டதற்காக அவர் மனம் வருத்தப்பட்டது.

அம்மா சமையல் கட்டுக்குள் போன போது, மீனாட்சி அப்பாவுக்கு அருகில் வந்து, ''அம்மாவுக்கு என்னப்பா?'' என்று கேட்டாள். அப்பா அவளை வாரியணைத்துக் கொண்டார். அவர் கண்களில் நீர் துளிர்த்தது.

---

''மாமா! போன வருஷம் தீபாவளிக்கு ஸ்கூட்டர் வாங்கித் தராமே ப்ரோ நோட் எழுதிக் கொடுத்தீங்க.... இந்த தீபாவளிக்கு என்ன செய்யப் போறீங்க....?''

''அந்த ப்ரோ நோட்டைக் கொடுங்க; புதுப்பிச்சுத் தர்றேன்!''






அவள்: ''இப்ப மாதர் சங்கத்தை எதுக்கு, உடனடியாகக் கூட்டி ஆகணும்கிறே?''

இவள்: ''மார்க்கெட்ல தீபாவளிக்கு என்னென்ன 'டிஸைன்ஸ்' வந்திருக்குன்னு விவாதிக்கத்தான்.''

— ஆர். வசந்தகுமார்.

# ஊர்க்காவலன்



ஒரு அவுன்ஸ் கதை. இரண்டு அவுன்ஸ் ரஜினியின் டிஷ்யூம், டிஷ்யூம். ஒரு அவுன்ஸ் மிராசு ரகுவரனின் வில்லத்தனம். ஒன்றரை அவுன்ஸ் ராதிகாவின் காதல் கிளுகிளுப்பு, ஒரு அவுன்ஸ் கண்ணீர் என்ற விகிதாசாரத்தில் கலந்து குலுக்கி ஊர்க்காவலன் மிக்ஸ்சரைத் தயாரித்திருக்கிறார்கள்.

மலேசியா வாசுதேவனுக்குப் பெண்ணைப் பணத்திற்குக் கட்டி வைக்க ஆசை. பெண் சித்ராவிற்கோ ரஜினியின் தம்பி மீது ஒரு கண். முதலில் தருமம் ஜெயித்து விடுகிறது. ரஜினியின் தம்பியைப் போலீஸ் உதவியுடன் ஜாம் ஜாமென்று கல்யாணம் பண்ணிக் கொள்கிறார் சித்ரா. அப்புறம் தான் தர்மத்தின் வாழ்வுதனைச் சூது கவ்வுகிறது.

சித்ராவைக் கல்யாணம் செய்து கொள்வதில் குறியாக இருக்கும் ரகுவரன் கோயில் பூசாரியைக் கைக்குள் போட்டுக் கொள்ள, பூசாரிக்குச் சாமி வர, சாமி வந்த் பூசாரியின் கையில் சூலம் ஏற, அந்தச் சூலத்தின் முனைக்குப் பலியாவது சித்ராவின் காதல் கணவன்—ரஜினியின் தம்பி.

மலேசியா வாசுதேவன் விதவைப் பெண்ணை ரகுவரனுக்கே கட்டிக் கொடுப்பேன் என்று இன்னும் குதிக்கிறார்.

ஊர்க்காவலன் ரஜினி ஆக்ரோஷமாக பராக்—பராக்.

தம்பி மனைவிக்கு மறுவாழ்வு தருவதாக ஒரு சபதம் போடுகிறார்.

இந்த ஊர்க்காவலன் ரஜினியைக் காதலித்து, கெஞ்சி, கொஞ்சி வளைய வளைய வருவது கிள்ளைமொழி ராதிகா.

ஊர்க்காவலனின் லட்சியத்திற்காகக் கடைசியில் ராதிகா உயிரை விட, தாய்மார்களின் கண்களில் கண்ணீர் கரை கட்ட... என்று இப்படிப் போகிறது கதை.

என்ன இருந்தாலும் ஓர் அரைக் கண்ணடி, கையில் ஒரு வாக்கிங் ஸ்டிக்குடன் தாழ்ந்த பார்வை பார்த்துக் கொண்டே பண்ணிய வில்லன் ரோலில் ஒரு மென்மை இருந்தது. அந்த ரகுவரனை மிராசுதாராகப் பார்க்க ஒத்துக் கொள்ளவில்லை. ஒட்டடைக் குச்சி ஆகிருதிக்கும் மிராசு வேஷத்திற்கும் தூரம் அதிகம் என்பது ஒரு காரணமோ?

ராதிகாவின் கொஞ்சல் ஆரம்பத்தில் அடிக்கரும்பு. போகப் போக நாள்பட்ட திராட்சை ரசம் போல் புளிக்கிறது.

பாண்டியன். வருகிறார். போகிறார்.

கொஞ்ச நாட்கள் கழித்து ரஜினிகாந்தை ஸ்க்ரீனில் பார்ப்பதால், பார்த்தவுடன், பிடித்துப் போகிறது. ஒட்டிக் கொள்கிறார். கூடவே அவருடைய ஸ்பெஷாலிடிகளான வசனம் பேசுதல், துள்ளித் துள்ளிச் சண்டை போடுதல் — கேட்க வேண்டுமா? விசில் தான். கைதட்டல்தான்.

ஊர்க்காவலன் தலைப்பிலேயே மசாலா நெடி அடியோ அடி என்று அடித்து விடுவதால் நிறைய எதிர்பார்ப்புடன் யாரும் படத்திற்குப் போகப் போவதில்லை. எனவே யாரும் ஏமாறவும் போவதில்லை.

— ஜெயமன்மதன்

''என்னுடைய சொந்த விவகாரங்களில் என்னுடைய பேரண்ட்ஸே தலையிட முடியாது. நீங்க என்னிடம் விளக்கம் கேட்பது சரியல்ல.''

என்று தெளிவாய்ப் பேசிக் கொண்டிருந்தவனை நிமிர்ந்து பார்த்தான் விவேக். உயரம் கம்மி, நல்ல சிவப்பு, முகத்தில் பயத்தை மறைக்க முயற்சி, பக்கத்தில் அந்தப் பெண்ணும் நிற்பதால் துணிவாய்ப் பேசுவதாகக் காட்ட விரும்புகிறான். அந்தப் பெண்ணின் கண்களில் துளிர்த்த கண்ணீரைக் கண்ணாடி மறைத்தது. கைக்குட்டையால் அடிக்கடி மேலுதட்டைத் துடைத்துக் கொண்டிருந்தாள்.

சிவா — சீதா, கல்லூரிக் கிசுகிசுக்களில் பலமுறை வலம் வந்தவர்கள். விவேக்கே பலமுறை பார்த்திருக்கிறான். வகுப்பறைகள், கேன்டீன், அநேகமாய் எல்லா மரத்தடிகளிலும் சதா பேசிக் கொண்டிருப்பார்கள். கல்லூரி பாஷையில் சொல்லப் போனால் 'கடலை — குயில்கள்.'

விவேக் கல்லூரியின் ஸ்டூடண்ட்ஸ் சர்வீஸ் ஆபீசர் பொறுப்பிலும் இருக்கிறான். அதனால் எந்த விசாரணைக் கமிட்டியிலும் இவன் உண்டு. 'கல்லூரியின் நற்பெயரைக் களங்கப்படுத்தும் வகையில் செயல்பட்ட தங்கள் மீது ஏன் நடவடிக்கை எடுக்கக் கூடாது என்று விசாரணைக் கமிட்டியின் முன்பு விளக்கம் அளிக்கவும்,' என்று விசாரணைக் குழு கேட்டிருந்தது.

''நீங்க இரண்டு பேரும் சினிமா போனது உண்மையா?'' ஓர் ஆசிரியர் கேட்டார்.

''ஆமாம், ஆனால் அதை நாங்க தப்பா நினைக்கலே!''

''அதைப் பற்றி எனக்குக் கவலையில்லை. தேதியும், நேரமும் சொன்னால், குறித்துக் கொள்ள வசதியாய் இருக்கும்.''

விவேக்கிற்கு எரிச்சல் வந்தது. என்ன விசாரணையிது?

''என்ன படம்?''

''சார், ஸ்டூடண்டைப் பேச விடுங்க,'' என்றான் விவேக்.

''சரி. இது சம்பந்தமாய் எதுவும் சொல்ல விரும்புகிறீர்களா?''

''நாங்கள் இரண்டு பேரும் சினிமாவுக்குப் போனது, கல்லூரி நேரத்தில் இல்லை. மேலும் சினிமாவுக்குப் போகக் கூடாதுன்னு கல்லூரி விதியில் இல்லை.''

யாருமே தன்னுடைய விளக்கத்தைப் பொருட்படுத்தப் போவதில்லை என்று உணர்ந்து நிறுத்தி விட்டான்.

''சீதா, எதுவும் சொல்ல விரும்புகிறாயா?''

அவள் அழுதாள்.

''இந்த அழுகை மட்டும் இல்லாட்டா...'' ஒருவர் முணுமுணுத்தார்.

''நீங்க போகலாம்.''

சிவாவும், சீதாவும் அகன்றார்கள்.

''இதுக்கு மேலே என்ன செய்யப் போறீங்க?'' என்று விவேக் கேட்டான்.

# வெறும் நண்பர்கள்

பிருதிவிராஜ்

''ஒண்ணும் செய்யப் போறதில்லை. செய்யவும் முடியாது. சினிமாவுக்குப் போனதுக்கெல்லாம் ஆக்ஷன் எடுக்க முடியாது. 'ராகிங்' கேஸ்களையே ஒண்ணும் செய்ய முடியலே.''

''அப்புறம் எதுக்கு இந்த நாடகம்?''

''சும்மா ஒரு பயமுறுத்தல்தான். இல்லாட்டா துளிர் விட்டுப் போகும்.''

''எல்லாம் சினிமாதான் காரணம்.''

'''பருவராகம்' பார்த்தீங்களா?''

'''காலேஜ்லே லவ்'னு ஆயிட்டுது.''

''படிக்கணும்னு அக்கறையே இல்லே.''

ஆளாளாய்ப் பேசினார்கள். விவேக்கிற்கு இவர்களிடம் பேசிப் பிரயோஜனம் இல்லை என்று தோன்றியது. எழுந்து வந்து விட்டான்.

''என்ன விவேக் போயிட்டாரு?''

''என்ன அவனே ஒரு வருஷத்துக்கு முன்னால ஸ்டூடண்டா இருந்தவன் — சின்னப் பையன். என்னத்தைச் சொல்லப் போறான்?''

இந்த விசாரணையே அனாவசியமானது. இன்னும் இங்கு ஆண்—பெண் உறவு சிக்கலாகவே இருக்கிறது. இந்த மாதிரியான விசாரணைகள் கல்லூரிக்குக் 'கண்டிப்பான கல்லூரி' என்று பட்டம் வாங்கிக் கொடுக்கலாம். 'பெஸ்ட் ஃபார்ம் ஆப் எஜுகேஷன் இஸ் கோ — எஜுகேஷன்' என்று பறை சாற்றுவது வீண். இது ஒரு குழப்பமான காலமோ என்று தோன்றியது. ஒரேயடியாய்ப் பெண்ணைப் பூட்டியும் வைக்காமல், முழுமையாய்ச் சுதந்திரம் கொடுக்கவும் முடி

யாமல் சமுதாயம் திண்டாடுகிறது. அடுத்த தலைமுறையிலாவது மாறுமா? என்று சந்தேகம் வந்துவிட்டது. இன்றைய இளைஞர்களுக்கே பெண் நட்பு, காதல் பற்றிச் சரியான கண்ணோட்டம் இல்லை. சிவா — சீதாவுக்கிடையே காதலோ, நட்போ அது அவர்கள் விஷயம். ஆனால் கல்லூரி அவர்களை விடுவதாயில்லை.

"மச்சி, என்கொய்ரி என்ன ஆச்சாம்?"
"ஒண்ணும் இல்லையாம்."
"எதுவும் ஆக்ஷன்னா ஸ்டிரைக்தான்."



''ஆமா, சினிமாப் போறதுக்கெல்லாம் சப்போர்ட் பண்ணுங்க. ஏதோ ராகிங், 'பிட்,' இப்படி மாட்டினு சப்போர்ட் பண்ண லாம்.''

''டேய், எனக்கு வருத்தமெல்லாம் எலெக்ட்ரானிக்ஸ் படிக்கிற பொண்ணு, மெக்கானிக்கல் பிராஞ்ச் பையனோட சினிமா போயிருக்கா! நாமெல்லாம் எலெக்ட் ரானிக்ஸ் பிராஞ்ச்லேயே இருந்து என்ன பிரயோஜனம்?''

''நான் நாளைக்கே மெக்கானிகல் பிராஞ்ச் போகப் போறேன்.''

''எந்த பிராஞ்ச் போனாலும் சரி, உன்னோட யாருடா சினிமாவுக்கு வருவா? அதுக் கெல்லாம் மச்சம் வேணும்.''

கமெண்ட்கள் தூள் பறந்தன.

''ஏய், சீதா பாவம்டி.''

''யாரு, சீதாவா? எனக்கு நல்லாத் தெரியும். இவ சிவாவை எங்கேயாவது வசமா மாட்டி விடுவான்னு நினைச்சேன்.''

''சிவா உண்மையிலே நல்லவர்டி...''

''ஓ... நீ சிவாவை நினைச்சு...''

''ஏய் நிறுத்து. உடனே கதை கட்டாதே. வாபஸ், சிவா கெட்டவன்.''

''சீதா வீட்டிலே என்ன சொன்னாங்களாம்?''

''எங்கப்பான்னு ஆளிடைத் தூக்கி மூஞ்சிலே ஊத்திடுவாரு.''

''உங்கப்பா லேப் அட்டெண்டரா?''

''இண்டலா? புரொபஸர்!''

''உண்மையிலே சீதாவுக்கு வீட்டில் சொல்ல பயமாம். அதனாலதான் சிவாவைக் கட்டாயப்படுத்தி சினிமாவுக்குக் கூட்டிட்டுப் போய், விஷயத்தை வீட்டுக்கு விட்டிருக்கா.''

கதைகள் கட்டப்பட்டன.

'இந்த மாதிரியான விசாரணைகள் கல்லூரியில் அனாவசியமான பரபரப்பையும் மாணவ — மாணவியர் உறவில் சிக்கலையும் ஏற்படுத்துகின்றன. கட்டுப்பாட்டை வலியுறுத்துவதனால், கல்லூரியின் பெயரைக் காப்பாற்றலாம். ஒழுக்கத்தை வலியுறுத்துவதன் மூலமே நல்ல குடிமகன்களைத் தேசத்திற்குத் தர முடியும்'

என்று விசாரணை ஃபைலில் தன் பங்கிற்கு நோட் எழுதினான் விவேக்.

''இதுக்கு என்ன அர்த்தம்?'' — சக ஆசிரியர்கள் பேசிக் கொண்டார்கள்.

''அட விடுங்க சார். புரியாம எழுதறதே புத்திசாலித்தனம்னு நிறையப் பேருக்கு நினைப்பு.''

''சின்னப் பையனையெல்லாம் யார் என் கொய்ரியில் உட்காரச் சொன்னது?''

''சரி, அடுத்த என்கொய்ரியில் வேண்டாம்.''

யாரும் நினைத்துக்கூடப் பார்க்கவில்லை, அடுத்த என்கொய்ரி விவேக் மேலேயே இருக்கும் என்று.

**வி**வேக் விஜேலியாவை நிமிர்ந்து பார்த்தான். நல்ல நிறம், நெற்றியில் பொட்டு இல்லை. கழுத்தில் சிலுவை, கையில் ஃபைல்......

''ஐ யாம் விஜேலியா. புதுசா லெக்சரரா ஜாயின் பண்ணியிருக்கேன். புரொபஸர் உங்களைப் பார்க்கச் சொன்னார்.''

''வெரிகுட். எந்த காலேஜ்?''

''ஏ. என். ஜி. நீங்க?''

''திருநெல்வேலி காலேஜ்.''

முதலில் இப்படித்தான் அறிமுகமானார்கள்.

ஒரு நாள் விஜேலியா அழுது விடுவது போல் கிளாஸிலிருந்து ஓடி வந்தாள். கிளாஸில் பையன்கள் கலாட்டாவாம். விவேக் போய்ச் சத்தம் போட்டான்.

''ஸ்டூடண்ட்ஸ் கண்ணாடி போல! இறுக்கிப் பிடிச்சாலும் உடைஞ்சுடும். லூசா பிடிச்சாலும் உடைஞ்சுடும். சரியாகப் பிடிக்கணும்.''

என்று விஜேலியாவிற்குப் புத்திமதி பண்ணிப் பழக்கமானான்.

''பாலகுமாரன் படிச்சிருக்கீங்களா?'' என்பான்.

''என்ன டைட்டில்? எலெக்டிரிக் சர்க்யூட்ஸா?''

''ஸாரி! உங்ககிட்டே பாலகுமாரன் பற்றிப் பேசியது என் தப்பு.'' என்று சலித்துக் கொள்வான்.

''ஸ்டெப்பிகிராப் ஆட்டம் பார்த்திங்களா?'' என்று அவன் கேட்கும் போது இப்பெல்லாம் செமி — லாக் கிராப் கிடைக்கவே மாட்டேன்கிறது.'' என்று அவள் பதில் சொல்லக் கேட்டு, இவனுக்கு எரிச்சல் வரும். மில்மனும், மித்தாலேயும் தவிர, ஒன்றும் தெரியாதா இவளுக்கு? ஆனால் எப்படியோ இருவரும் நெருக்கமானார்கள். நட்பு உணர்வுபூர்வமான விஷயம். அதனால் அறிவு ஒரு தடையே இல்லை.

''சரி. தேக்கடி ஸ்டாப் டூர் பற்றி விஜேலியாகிட்டே சொன்னியா? சும்மா கடலை போட்டுக்கிட்டேயிரு.''

— கூட வேலை பார்க்கும் வாசு பேச்சை ஆரம்பித்தான்.

''நாமெல்லாம் ஸ்டூடண்ட்ஸ் இல்லை. ஸ்டாஃப் ஆயிட்டோம். கொஞ்சம்

**கைதி 1:** ஓட்டப் பந்தயத்தில் தோற்றுப் போனதுனலதான் ஜெயிலுக்கு வந்தியா...? ஆச்சரியமா இருக்கே...!
ஜெயிச்சது யாரு...?

**கைதி 2:** போலீஸ்காரங்கதான்!

— கரடிகுளம் ஜெயாபாரதிப்ரியா



மலையாண்டா பேசறது.''

''சரி, தப்பு. தாங்கள் நட்பு முறையில் பழகும் விநோலியாவிடம் ஸ்டாஃப் டூர் பற்றி எடுத்துக் கூறினீர்களா?''

''இண்டலா? மறந்து போச்சு. இன்னும் சொல்லலே.''

''நல்லவேளே!''

''ஏன் டூர் கேன்ஸலாயிடுத்தா?''

''ச்சீய். இல்ல நானே நேர்ல எக்ஸ்ப்ளைன் பண்ணுவேன் இல்லேயா? நீயே பேசறே. என்னைக் கொஞ்சம் பேச விடேன். இழவெடுத்த இந்த மெக்கானிக்கல் டிபார்ட்மேண்ட்ல லேடி ஸ்டூடண்டும் கிடையாது. லேடி ஸ்டாஃப்பும் கிடையாது.''

விவேக்கிற்குச் சிரிப்பாய் வந்தது.

''ஏய், என்ன கனவு காண்றே?''

''ஒண்ணும் இல்லே.''

''தேக்கடியிலேயே டூயட் பாடற மாதிரி கனவா? கூட நாங்க நாலு பேர் வருகிறோம்.''

''மொத்தம் ஆறு பேர்தானா?''

''ஆமா. ஆபீஸ் ஸ்டாஃப் கிடையாது. வழுக்கைத் தலை வகையறுக்கள் கிடையாது. மிஞ்சினது நாம ஆறு பேர்தான்.''

''இதுக்கு ஒரு ஸ்டாஃப் டூரா?''

''இல்லே விடு! ஜாலி டூர்!''

''சரி, காலையில் எங்கே வரணும்?''

''முத்துசாமியைக் கூட்டிட்டு பஸ் ஸ்டாண்ட் வந்துவிடு.''

காலையில் முத்துச்சாமி பாத்ரூமுக்கும் பெட்ரூமுக்கும் ரன் எடுத்துக் கொண்டிருந்தான். டயரியா. 'வரவில்லே' என்றான்.

விவேக் பஸ் ஸ்டாண்டில் போய் நின்று கொண்டிருந்தான். வாசு வேகமாய் ஓடி வந்தான்.

''ஏய், நாராயணனை உடனே வரச் சொல்லித் தந்தி வந்திருக்கு. பணம் ஏற்பாடு பண்ணி அனுப்பிட்டு நான் பின்னால வர்றேன். புரோக்ராம் அப்செட் ஆக வேண்டாம். நீங்க புறப்படுங்க.''

''ஏய், நீ?''

''கவலைப்படாதே. நீ போய்ச் சேரும் போது நான் அங்கே இருப்பேன்.''

விவேக் குழம்பினான்.

வாசு போய்விட்டான். விநோலியா வந்தாள்.

''ப்ருந்தா எங்கே?''

''அவளோட தங்கை வந்திருக்கா. இன்னிக்கு ஊரைச் சுற்றிப் பார்க்கப் போறாங்களாம்.''

''மண்ணாங்கட்டி. இந்த ஊர்லே தீப்பெட்டி தொழிற்சாலையைத் தவிர என்ன இருக்கு?''

''இப்ப என்ன செய்யலாம்?''

''கேன்ஸல் பண்ண வேண்டியது தான்.''

''ஏன்?'' என்றாள்.

தீர்மானமாயிருந்த விவேக் அப்போது தான் தவறிப் போனான். ஏன் கேன்ஸல் பண்ண வேண்டும்? இந்நேரம் நானும், வாசுவும் மட்டும் என்றால் போயிருப்போமே.



''தலைவரோட சிலையை அவரோட மனைவியையே விட்டுத் திறக்கப் போறதா இருந்த திட்டத்திலே தகராறுமே, ஏன்?''

''எந்த மனைவிங்கறதுதான் தகராறு!''

நண்பர்களில் ஆண் — பெண் என்ற பிரிவு கிடையாது என்ற என்னுடைய வாதத்தில் எனக்கே நம்பிக்கையில்லையா? போனால் என்ன? என்று கிளம்பினான்.

முதலில் மற்றவர்கள் வரவில்லை என்று தெரியாமல், ''ஏன்?'' என்று கேட்ட விநோலியா இப்போது தயங்கினாள். ஆனால் விவேக்கிடம் சொல்லவும் தயங்கினாள். ஏற்கெனவே விவேக் சிந்தனைக்குத் தான் ஈடானவள் அல்ல என்ற காம்ப்ளக்ஸ் இருந்ததால் சொல்ல முடியவில்லை. இருவருமே தங்களுடைய விருப்பத்திற்கு மாறாக, ஒருவர் எண்ணத்தை மற்றவர் அறிந்து கொள்ளாமல் செயல்பட்டனர்.

தேக்கடியை முழுமையாய் என்ஜாய் பண்ண முடியவில்லை. பண்ணவில்லை என்பதை வெளிக்காட்டாமல் இருவரும் இருந்தனர். படகில் ஏறும்போது,

''என்ன சார், சும்மா டூரா?'' என்று குரல் கேட்டுத் திரும்பினான். சில மாணவர்கள் நின்று கொண்டிருந்தார்கள்.

''நாங்களும் சும்மா ஜாலி டூர், பத்துப் பையன்கள் மட்டும்'' என்று ஒருவன் சொன்னான்.

அவன் பையன்கள் என்ற இடத்தில் அழுத்தம் கொடுத்தது போல் விவேக்கிற்குத் தோன்றியது. ஒன்றும் பேசவில்லை. காலேஜ்டே விவகாரத்தில் சண்டை போட்டிருக்கிறான். இரண்டு பையன்களிடம் பிட்டைப் பிடுங்கி இருக்கிறான். இவர்கள் ஏதாவது குட்டையைக் குழப்பலாம். வாசு வேறு ஏமாற்றி விட்டான். வரவில்லை. எரிச்சல் வந்தது. ஒரு வழியாய் டூர் முடிந்து இரவு திரும்பினார்கள்.

ஒரு நாள் கழித்து காலேஜ் போன விவேக்கிற்கு அதிர்ச்சி இருந்தது. ''நீயும் விநோலியாவும், மட்டும் டூர் போனீங்களா? உங்களை யார் அப்படிப் போகச் சொன்னது?''

— வாசு முதலில் ஆரம்பித்தான்.

''நீதானே புரோக்ராம் அப்செட் ஆக வேண்டாம்னே.''

''எனக்குத் தெரியுமா? என்னால வர முடி

யாமப் போகும்னு! அதுவும் முத்துசாமியும் ப்ருந்தாவும் வரலேன்னு நீ எங்கிட்டே சொல்லவேயில்லையே.''

''சரி, அதுக்கென்ன?''

''அதுக்கென்னவா? போனது போனே காலேஜ் தரிசுக் கோஷ்டி கண்ணில படணுமா? பிரின்சிபால் கத்துகிறார். ஸ்டாஃப் இப்படி இருந்தால் நான் எப்படி ஸ்டுடண்ட்ஸை கண்ட்ரோல் பண்ணுவேன்? என்கிறார்.

''ஸ்டாஃப் எப்படி இருந்தா?''

''எப்படின்னு அவர்கிட்டேயே போய்க் கேளு.''

பிரின்சிபால் கூப்பிட்டு விட்டார்.

ரொம்ப கண்டிப்பான குரலில்,

''உங்க திறமைக்கும், நிர்வாகத் திறனுக்கும் கல்லூரியில் எப்போதும் மரியாதை உண்டு. அதுக்காக நீங்க இந்த காலேஜ் லேடி டீச்சர்லோட டூர் ஆர்கனைஸ் பண்றதையெல்லாம் அனுமதிக்க முடியாது.''

''சார் நடந்தது என்னன்னா...

''நோ. தேக்கடிக்கு நீங்களும் வினோலியாவும் போனது உண்மைதானே?''

''ஆமாம்!''

''அதுக்குமேலே பேச வேண்டாம். எதுவும் சொல்லணும்னா என்கொயரி கமிட்டியிலே சொல்லுங்க.

''சார்!''

''இந்த காலேஜுக்கு டிஸிப்ளின்தான் முக்கியம். நீங்க அட்ஹாக் அப்பாய்ண்ட்மெண்ட்தான். நோ ட்யூஸ் சர்டிபிகேட் வாங்கிடுங்க. என்கொயரி ஒன் அவர்ல இருக்கும்.''

விவேக் பேசவேயில்லை. என்கொயரி ஒரு நாடகம்தான். சூட்சுமமாய்ப் புரிய வைத்து விட்டார். 'அட்ஹாக்' 'நோ ட்யூஸ்' என்பதன் மூலம் அவன் நீக்கப்படப் போகிறான் என்பது புரிந்து போனது.

என்கொயரி அட்டெண்ட் பண்ணுவது அனாவசியம். 'பெங்களூரில் வேலை கிடைத்து விட்டதாகச் சொல்லி...' ஒரு ராஜினாமாக் கடிதம் கொடுத்தான். உடனே ஏற்றுக் கொள்ளப்பட்டது.

வினோலியாவைத் தேடினான். அவளுடைய பெற்றோருக்குத் தந்தி கொடுத்து அவர்கள் வந்து விட்டார்கள். ஏனென்றால் லேடி ஸ்டாஃபைப் பொறுப்பாய்ப் பெற்றோரிடம் ஒப்படைத்த பெயர் கல்லூரிக்கு வேண்டுமே.

வினோலியா மிகவும் பாதிக்கப்பட்டிருப்பாள் போலும். தன்னால்தானே, போய் ஆறுதல் சொல்ல வேண்டும் என்று நினைத்தான்.

வினோலியா தனியாக நின்று கொண்டிருந்தாள். அருகில் சினேக பாவத்துடன் சிரித்துக் கொண்டே போனான்.

''வினோலியா, ஆண்டவர் அறிய நம் நெஞ்சில் ஒரு துளி வஞ்சம் இல்லை. அதனால்..

''உங்க வசனமெல்லாம் அப்புறம் பேசுங்க. அப்பா வர்றார். முதல்ல தள்ளிப் போங்க. அவருக்கு உண்மையிலேயே சந்தேகம் வந்துடும்.''

என்று படாரென்று சொல்லிவிட்டு நகர்ந்தாள்.

விவேக் ஆடிப் போய்விட்டான். நிகழ்ச்சிகள் மனிதர்களை இவ்வளவு பாதிக்கின்றனவா? தன்னுடைய புனிதத்தன்மையை அவள் நிரூபிக்கவே விரும்புகிறாள். பெற்றோர்கள் இல்லாதபோது தன்னிடம் குதூகலமாய்ச் சிரித்துப் பேசியவள், பெற்றோர்கள் முன்னால் ஏதோ தவறு போல் உணர்கிறாள். இவ்வளவு காலம் பேசிய தத்துவங்கள் அனைத்தும் நடைமுறைக்கு ஒவ்வாதவையா? ஆண் — பெண் உறவு சிக்கலானதுதானா? விவேக் ஆயாசமாய் நின்றான்.




குறுநாவல்

# கம்ப்யூட்டரும் கட்டைவண்டியும்

மே — 4

முதல் நாள் ஸ்கூலில் நுழையும் போது பயமாய் இருந்தது.

ட்விங்கிள், ட்விங்கிள் ரைம்ஸில் தொடங்கிக் கால்குலஸ் வரை கற்றுக் கொடுத்த ஸ்கூல். கிட்டத்தட்ட ஆறு வருடங்களுக்கு அப்புறம் அந்தக் காம்பவுண்டை மிதிக்கிறேன்.

பச்சைப்புல்வெளி. குல்மொஹர் பூக்கள். யூனிஃபார்ம் இல்லாத சுதந்திரத்துடன் கல்கல பெண்கள். பையன்களின் கூச்சலான ஃபுட்பால்.

மிஸஸ் தாமஸ்தான் இன்றைக்கும் ஹெட் மிஸ்ட்ரஸ். அந்த மூக்குக் கண்ணாடி. அதன் வழியே தெரியும் கருணைக் கண்கள். வார்த்தைக்கு வார்த்தை உதிர்க்கும் ஜீஸஸ். இந்திரா காந்திக்குப் பிறகு அங்கங்கே ஸ்கேல் பட்டை நரையின் கவர்ச்சி. மிஸஸ் தாமஸை உடனே பார்க்க வேண்டும்.

எனக்கு இங்கிலீஷ் டிபார்ட்மெண்ட். நான் படித்த காலத்தில் இங்கிலீஷ் டிபார்ட்மெண்ட் ஸ்கூல் காரிடாரின் வலது பக்கத் துவக்கத்தில் இருக்கும். அதே எண்ணத்துடன் சட்டென்று அந்த ரூமில் நுழைந்து விட்டேன். பெண்கள் எல்லாம் சேர்ந்து 'ஜோ' என்று டிரம்பட் ஒலி எழுப்பினார்கள். நான் திடுக்கிட்டு அறையை விட்டு வெளியே வந்துவிட்டேன். வெளியே தொங்கிக் கொண்டிருந்த போர்டை அப்போதுதான் படித்தேன்: 'ரெஸ்ட்ரூம் — கேர்ள்ஸ்.'

சே, பாரதி. நீ ஒரு மடச்சி. உலகத்தில் சகலமும் நாளுக்கு நாள் மாறிக் கொண்டிருக்கும் போது உன் இங்கிலீஷ் டிபார்ட்மெண்ட் மட்டும் ஆறு வருடங்களுக்கு முன்னால் இருந்த அதே இடத்தில் இருக்குமா என்ன?

எந்தப் பக்கம் போக வேண்டும்?

''ஹலோ பேபி'' என்று பின்னால் ஒரு ரகசியக் குரல் கேட்டது. திடுக்கிட்டுப் போய்த் திரும்பினேன்.

மதுசூதனன்! கெமிஸ்ட்ரி டீச்சர். இவர் க்ளாஸ் எடுத்தால் மட்டும் ஃபுல் அட்டெண்டன்ஸ் என்பார்கள். கண்டிப்பு என்பதால் இல்லை. அத்தனை அழகாய்ப் பாடம் நடத்துவாராம். நான் மாணவியாய் இருந்த போது, இவர் க்ளாஸ் எடுக்க 'மாட்டாரா என்று ஏங்கி, கடைசி வரை சான்ஸே கிடைக்கவில்லை.

''என்ன பேபி? புது அட்மிஷனா? க்ளாஸ் ரூமுக்குப் போக வழி தெரியவில்லையா?'' என்றார் மதுசூதனன். என்னருகில் வந்து தோளில் ஆதரவாகக் கை வைத்தார். குரல் இன்னும் ரகசியம் பேசுகிற மாதிரியே இருந்தது.

எனக்கு வெட்கமாய் இருந்தது. பெருமையாய் இருந்தது. என்னை ஸ்டூடண்ட் என்று நினைத்து விட்டாரே என்று பெருமை. என்னைக் குழந்தைபோல் நினைத்து விட்டாரே என்று வெட்கம்.

''நோ... நோ...'' என்று லேசாக விலகிக் கொண்டேன்.

நான் இன்றைக்கு ஸல்வார் அணிந்திருக்கக் கூடாது. புடைவை கட்டியிருக்க வேண்டும். சரியாகக் கட்ட வராதே என்று பயந்து ஸல்வாரைத் தேர்ந்தெடுத்ததனால், பார், எம். ஏ. முடித்த என்னை ஸ்கூல் அட்மிஷனா என்று கேட்டுவிட்டார்!

''ஐ'ம் பாரதி'' என்றேன் வெட்கச் சிரிப்போடு. ''இன்றைக்குப் புதிதாகச் சேரும் இங்கிலீஷ் டீச்சர்.''

மதுசூதனன் அதைக் கேட்டுவிட்டுப் புருவங்களைத் தூக்கினார். ''யூ லுக் ஸோ யங்!'' என்றார்.

மது — மதுசூதனன் — மதுதான் கூப்பிடுவதற்கு ஈஸி. மது கூட இளமையாகத்தான் இருக்கிறார். மீசையே இல்லாமல் சுத்தமாய் வழித்திருந்தாலும், அவருடைய அந்த மில்லியன் டாலர் மூக்கு அவர் முகத்திற்குக் கம்பீரம் கொடுத்தது. இளமையான கம்பீரம். நடு வகிடு எடுத்து இந்தப் பக்கமும் அந்தப் பக்கமும் அலை அலையாய்ச் சுருண்ட கேசம் இளமை. அவருடைய ரகசியக் குரல் இளமை. அதனால்தான் அன்றைக்கும் சரி, இன்றைக்கும் சரி, மதுவைச் சுற்றி எப்போதும் கேர்ள் ஸ்டூடண்ட்ஸ்.

''ஹலோ.... இங்கிலீஷ் டிபார்ட்மெண்ட் தானே போக வேண்டும்? வா, என்று எத்தனை தடவை கூப்பிட்டு விட்டேன்?''

இன்னொரு முறை என் தோளைத் தொட்டு மது சொன்ன பிறகுதான் எனக்கு ஸ்கூலுக்குள் நிற்கிற ஞாபகமே வந்தது.

"வாட் ஹாப்பண்ட் டு யூ பாரதி?"

**மு**தல் நாள் க்ளாஸில் அதிகமாக அலட்டிக் கொள்ளவில்லை.

'நான் மிஸ் பாரதி. இந்த ஸ்கூலின் ஓல்ட் ஸ்டூடண்ட்' என்று அறிமுகப்படுத்திக் கொண்டேன்.

என் பெயரை மட்டும்தான் சொன்னேன்.

என்னுடைய அப்பா பெரிய இண்டஸ்ட்ரியலிஸ்ட் என்பதைச் சொல்லவில்லை. என்னுடைய அறிவான, அன்பான, அருமையான, அழகான அம்மா செத்துப் போனவுடன் (கான்ஸர்) இன்னொரு பெண்ணைக் கல்யாணம் செய்து, அவளுக்குத் தங்கச் சங்கிலி போட்டு இழுத்து வந்து, 'டியர், திஸ் ஈஸ் யுவர் மாம்' என்று என்னுடைய இருபதாவது வயதில் என் எதிரில் தைரியமாக நின்று என்னுடைய அப்பா அரக்கத்தனமாகச் சொன்னதைச் சொல்லவில்லை.

அந்தத் தங்கக் கூண்டில் இருக்கப் பிடிக்காமல் நான் அந்த வீட்டை விட்டு வெளியே வந்து விட்டதைச் சொல்லவில்லை.

இதே ஊட்டியில்தான் ஒரு தனி வீடு எடுத்துக் கொண்டு இருக்கிறேன் என்பதைச் சொல்லவில்லை.

கேர்ள்ஸ் அத்தனை பேரும் என்னை ஆச்சரியமாகப் பார்த்தார்கள். நான் பார்ப்பதற்கு டீச்சர் மாதிரியே தெரியவில்லையாம். என் வயது இருபத்திரண்டு என்பதை நம்பவே முடியவில்லையாம்.

பாய்ஸ் எல்லாம் கூரையைத் தொட்டு விடுவது போல் உயரம். ஆனால் சாதுப் பிராணிகளாய்த் தெரிந்தார்கள்.

பாய்ஸில் கிரீஷை எனக்குப் பிடித்திருந்தது.

கேர்ள்ஸில் சுஷ்மா துடிப்பாகத் தெரிந்தாள்.

## ஜூன் — 2

**ஸ்**கூலில் சேர்ந்து கிட்டத்தட்ட ஒரு மாதமாகி விட்டது.

நான் டீச்சர்ஸ் ரூம் பக்கமே கூடிய வரை போவதில்லை. அவர்களுடைய சராசரி வயதை ஒப்பிட்டு என்னை பேபி போலவே 'டீஸ்' பண்ணுவது எனக்குப் பிடிக்கவில்லை.

பாரதி உண்டு. அவள் வேலை உண்டு.

எனக்கென்று ஒரு க்ளாஸை ஒதுக்கிக் கொடுத்து விட்டார்கள். நான்தான் அந்த வகுப்புக்கு முழுப் பொறுப்பு என்று சொல்லி விட்டார்கள். கிரீஷும், சுஷ்மாவும் கூட என் க்ளாஸ்தான்.

இந்த ஒரு மாதத்தில் ஸ்டூடண்ட்ஸ் எல்லாம் நான் போர்டு பக்கம் திரும்பியவுடன் கசமுசவென்று பேசி, தங்கள் ஆச்சரியங்களை எல்லாம் தீர்த்துக் கொண்டு விட்டார்கள்.






''பாரதி, உன்னை ஸ்டூடண்ட்ஸிற்கெல்லாம் பிடித்துப் போய்விட்டது. ஐ'ம் ஸோ ஹாப்பி'' என்று மிஸஸ் தாமஸ் சந்தோஷப் பட்டுவிட்டார்.

இந்த ஒரு மாதத்தில் எனக்குள் சின்னச் சின்ன மாற்றங்களை நான் உணர்ந்தேன்.

மது என்னை அதிகமாக ஈர்த்து விட்டார் என்றுதான் சொல்ல வேண்டும்.

மது, பாவம்! மனைவி இறந்து விட்டாள். தனியாகக் கஷ்டப்படுகிறார். அவரே



சமைக்க வேண்டும் என்று ஒரு பிடிவாதம். தயிர் சாதம், இட்லி என்று உப்பு உறைப்பில்லாத ஐட்டங்களை அவர் டிபன் பாக்ஸில் பார்க்கும் போது பாவமாக இருக்கும். ஒன்றுமே முடியாத அவசர நாட்களில் பிரெட், பட்டர், ஜாம்.

"ஏன் மது நீங்கள் இன்னொரு கல்யாணம் பண்ணிக் கொள்ளக் கூடாது?"

"எனக்கு என் ஷீலாவை மறக்க முடியவில்லை."

"அதற்காக வாழ்நாள் முழுவதையும் விரயம் செய்யப் போகிறீர்களா?"

"ஷீலா மாதிரி ஒரு பெண் கிடைக்கட்டும். அப்புறம் அதைப் பற்றி யோசிக்கலாம்."

உங்கள் ஷீலா எப்படி இருப்பாள் மது?

மதுவைக் கேட்க வேண்டும், கேட்க வேண்டும் என்று நினைத்துக் கேட்காமல் விட்ட கேள்வி.



ஜூலை — 1

கிரீஷை எனக்கு ரொம்பப் பிடிக்கும் என்றேனே, இப்போதெல்லாம் அவனிடம் ஒரு பதற்றம் இருக்கிறது. ஒரு நாளைக்கு யூஸ் பண்ணின ஸ்வெட்டரை மறு நாளைக்குப் போடுவதில்லை. வகுப்பில் உட்கார்ந்திருக்கும் போது அடிக்கடி உதடுகளை ஈரப்படுத்திக் கொள்கிறான். கண்களில் ஏதோ ஒரு கனவைத் தேக்கிக் கொண்டு பார்க்கிறான்.

இன்றைக்கு வகுப்பு முடிந்து சரசர வென்று எல்லோரும் வெளியேறிய பின் கிரீஷ் மட்டும் தயங்கித் தயங்கி நின்றான்.

நான் ஷாப்பிங் போக வேண்டும். டெய்லரிடம் போக வேண்டும்.

"என்ன கிரீஷ்?"

"ஒரு சந்தேகம் மிஸ்."

"என்ன?"

"நான் பக்கத்தில் வரலாமா மிஸ்?"

"வாயேன்."

கிரீஷ் கூரை முட்டும் உயரம். ஹைஹீல்ஸ் ஷூக்களின் உபயத்தில் இன்னும் உயரமாக நின்றான். அவன் பக்கத்தில் நான் மரப்பாச்சி பொம்மைபோல் உணர்ந்தேன். 'மஸ்க்கை'யோ, 'ப்ரூட்'டையோ உடல் முழுக்கச் சீற விட்டிருந்தான். அருகில் வந்தவுடன் அந்த செண்ட் வாசனை என்னைச் சுற்றிக் கோட்டை கட்டிவிட்டது.

"என்ன சந்தேகம்?" என்றேன்.

லேசாகக் குனிந்தான். அவன் மூச்சுக் காற்று என் உச்சந்தலையில் டிராகனின் மூச்சுக் காற்று போல் உஷ்ணமாக இறங்கியது.

"மால்துஷியன் பாபுலேஷன் தியரி பற்றி..."

"வெயிட் கிரீஷ். இந்தக் கேள்வி உன்னுடைய எகனமிக்ஸ் டீச்சரிடம் கேட்க வேண்டிய கேள்வி. என்னைக் கேட்டால்?"

"எனக்கென்னவோ உங்களிடம் கேட்க வேண்டும்போல இருந்தது மிஸ்" என்றான். சடாரென்று விலகி நகர்ந்தான். அப்படி அவன் விலகிய போது, ஒரு கோணத்தில் கிரீஷின் உடல் முழுக்க என் மேல் காற்று போல் படர்ந்து விலகியது.

"பையன்களிடம் ரொம்பவும் நெருங்கிப் பழகாதே பேபி டால்" என்று எனக்கு மிக அருகில் ஒரு குரல் கேட்டது.

'ப்பூ' என்று ஒரு பயக்காற்றை வெளிப்படுத்தித் திரும்பினேன்.

மது!

எனக்குச் சட்டென்று கோபம் வந்தது — கிரீஷையும் என்னையும் தவறாகப் புரிந்து கொண்டு விட்டாரோ என்ற பயத்தில் வந்த கோபம். ஆனால், காட்டிக் கொள்ளவில்லை.

"நீங்கள் என்னைப் பயமுறுத்தி விட்டீர்கள் மது..."

"பையன்களிடம் பழகும் போது அந்தப் பயம் இருக்கட்டும். பேபி..."



ஜூலை — 17

இப்போழுதெல்லாம் மது பார்க்கும் பார்வையில் நிறைய வித்தியாசம் வந்து விட்டது. ஒரு மாதிரி அடிப்பார்வை. அதில் பொதிந்திருப்பவை என்ன என்று சாவகாசமாய் உட்கார்ந்து ஆராய்ந்தேன்.

ஆண்மை, ஒரு தாகம், சாதுர்யமான அழைப்பு —

ஒரு நாள் கிரவுண்டில், பையன்களின் பாஸ்கெட்பால் இரைச்சல்களுக்கு நடுவே, மென்மையாக, மிக மென்மையாக மது சொன்ன வாக்கியம் என்ன தெரியுமா?

"வரவர உன்னைப் பார்த்தால் என் ஷீலாவைப் பார்ப்பது போலவே இருக்கிறது."

நிஜம்ம்மாகவா மது? ஐ'ம் ஸோ ஹாப்பி!

ஜூலை — 25

கிரீஷுக்கு இன்றைக்கெல்லாம் பார்த்



தால் பதினேழு வயதுதான் இருக்கும். இந்த வயதுக்கு அவன் பண்ணுகிற ஆர்ப்பாட்டங்கள் அதிகம். காரில் வருகிறான். காஸ்ட்லியான துணியில் டிரெஸ் போடுகிறான். முகம் பார்க்கிற மாதிரி ஷூ அணிகிறான்.

என்னைப் பார்க்கும்போதெல்லாம் மட்டும் பட்டாம்பூச்சியின் சிறகுகளைப் போல் கண்களை அடித்துக் கொள்கிறான்.

தயங்கித் தயங்கி முதுகுக்குப் பின்னே எதையோ சுமந்து கொண்டு இன்றைக்கு வந்தான்.

''என்ன கிரீஷ்?'' என்றேன் தோட்டத்துக் காற்றை அனுபவித்துக் கொண்டே.

''மிஸ்... நீங்கள்... நீங்கள்... திஸ் ஈஸ் ஃபார் யூ'' என்றான். காலண்டர் போல் நீளமாகச் சுருட்டியிருந்த ஒரு வால் போஸ்டரை மேஜை மீது வைத்தான். என் ரியாக்ஷனுக்காகக் காத்திருக்காமல் நழுவி விட்டான்.

நான் மெல்ல ரப்பர் வளையத்தை விடுவித்தேன். போஸ்டரைத் திறந்தேன்.

ஒரு கொழு கொழு பையன் ஒரு புசுபுசு பூனைக்குட்டியை நெஞ்சோடு அணைத்துக் கொண்டிருக்க, கீழே,

**If You Love Somebody, Show It!**

கிரீஷ்! என்ன சொல்ல வருகிறாய் நீ?

எனக்கு ஏன் உடம்பெல்லாம் இவ்வளவு வேகமாக வியர்த்து விடுகிறது? பயமா, ஆத்திரமா?



## ஜூலை — 26

கிரீஷைப் பற்றி மதுவிடம் சொல்லலாமா?

வேண்டாம்.

'பாய்ஸ் கூட பழகாதே என்று சொன்னேனே?' என்று என்னையே எதிர்க் கேள்வி கேட்டாலும் கேட்பார். மதுவிடம் பேசும் போது, அவருடைய அந்த காந்தக் கண்களில் சிக்கும் போது, பேச நினைப்பதெல்லாம் பேச வராமல் போய் விடுகிறது.

மது, ஐ வான்ட் டு ஸே ஸோ மச்!

## ஆகஸ்ட் — 9

இன்றைக்கு லைப்ரரியில் உட்கார்ந்திருந்தேன்.

நண்பர்களோடு வந்தான் கிரீஷ். அவர்கள் ஆளுக்கொரு புத்தகத்தைப் பொறுக்கிக் கொண்டு கிளம்பிய பின்னும் அவன் மட்டும் அலமாரி அலமாரியாகத் தேடிக் கொண்டிருந்தான்.

பாரதி, அவனைக் கூப்பிடேன். கூப்பிட்டு விஷயங்களைத் தெளிவாக்கி விடேன்.

நான் கூப்பிடத் தேவையில்லாமல் கிரீஷே என் எதிர் நாற்காலியில் வந்து உட்கார்ந்தான். இன்றைக்கும் செண்ட் போட்டிருந்தான்.

''ஹலோ கிரீஷ்... இன்றைக்கு நீ கிளாஸுக்கு வரவில்லை?''

''இல்லை மிஸ்'' என்று உதடுகளை ஈரப்படுத்திக் கொண்டான். ''மிஸ், நான் உங்களுக்கு ஒன்று தந்தால் கோபித்துக் கொள்வீர்களா?''

''ஒன் மோர் வால் போஸ்டர்?''

''இல்லை மிஸ். மை ஹார்ட்.''

''கிரீஷ், என்ன உளறுகிறாய்?''

அவன் கண்களில் ஈரம் படர்ந்தது. கடவுளிடம் வரம் கேட்கும் பக்தனைப் போல் ஓர் அச்சம் கலந்த ஆர்வம்.

''ஐ லவ் யூ ஸோ மச், மிஸ். நீங்கள் எப்பொழுதும் என்னுடனேயே இருக்க வேண்டும். இந்த ஸ்கூலும், பெஞ்சும், பிளாக் போர்டும் எதுவும் வேண்டாம். நாம் இரண்டு பேர் மட்டும்...''

''வெயிட் கிரீஷ்... நீ கண்ட சினிமாக்களை, கண்ட புத்தகங்களைப் பார்த்திருப்பாய்... திஸ் ஈஸ் எ டெலிகேட் ஏஜ்...''

''மிஸ்... ஐ கான்ட் லிவ் விதவுட் யூ...''

''கிரீஷ்... இதோ பார்... நான் சொல்றதைக் கொஞ்சம் கவனமாகக் கேள்,'' என்றேன். மோதப் போகிறது, மோதப் போகிறது என்று பயந்த அலை, மோதியே விட்டது. இவனைக் கவனமாகக் கையாள வேண்டும். ''உன் வயது என்ன? பதினேழு? எனக்கு இருபத்திரண்டு...''

''ஸோ, வாட்?''

''கிரீஷ், நீ புரியாமல் பேசுகிறாய்!''

''மிஸ், நீங்கள்தான் இன்னும் கட்டை வண்டி காலத்திலேயே இருக்கிறீர்கள். இது கம்ப்யூட்டர் காலம்... ஏஜ் ஈஸ் நாட் எ பிராப்ளம். உங்களுக்கு இந்த வேலை வேண்டாம். எனக்குப் பெரிய வீடு இருக்கிறது. அங்கே வந்து விடுங்கள்... உங்களை ஒரு... ஒரு... மலர் போல நான் வைத்திருப்பேன்...''

வேகத்தைக் குறைத்தால் மட்டும் இனி புண்ணியமில்லை. பிரேக் போட வேண்டியதுதான் என்று தீர்மானித்தேன்.

எழுந்தேன்.

''கிரீஷ், யூ ஆர் டாக்கிங் நான்சென்ஸ். இன்னும் ஒரு வார்த்தை நீ பேசினால், நான் உன்னைத் திரும்பிக் கூடப் பார்க்க மாட்டேன்.''



எம். எல். ஏ.: நான் தொகுதிப் பக்கம் போகாததால பெரிய ஆபத்து வந்திடுச்சு!

நண்பர்: என்னங்க?

எம்.எல்.ஏ.: அதைப்பயன்படுத்திக்கிட்டு யாரோ ஒருத்தன் 'நான் தான்எம்.எல்.ஏ.'ன்னு என்னுடை தொகுதியில் சொல்லி, சம்பாதிச்சுக்கிட்டிருக்கானும்!

— மணியன் தர்மலிங்கம்.

படுவேகமாக லைப்ரரியை விட்டு வெளியே வந்து விட்டேன்.

### ஆகஸ்ட் — 13

மூன்றாவது நாளாக கிரீஷ் இன்றைக்கும் கிளாஸுக்கு வரவில்லை.

பாரதி நீ செய்தது சரியா? குண்டூசியால் குத்தி எடுக்க வேண்டியதைக் கடப்பாரையால் இடித்து விட்டாயா?

இப்போது கூட மதுவிடம் எதுவும் சொல்வதற்குப் பயமாகவே இருக்கிறது.

நான் சொல்லா விட்டால் கூட மது என் முகத்தைப் படித்து விட்டார்.

''வாட் ஈஸ் தி டிரபிள் பேபி?''

''நத்திங்'' என்றேன்.

''ஆமாம், நீ டீ நன்றாகப் போடுவாயா?'' என்றார் திடீரென்று.

''ம்,'' என்றேன் புரியாமல்.

''வீட்டில் எக்ஸ்போர்ட் க்வாலிடி டீத்தூள் வைத்திருக்கிறேன். ஆனால் நான் போட்டால் கசப்பாக கஷாயம் மாதிரி வந்து விடுகிறது. யாராவது ஒரு எக்ஸ்பர்ட் வந்து ஒரு நாளைக்குக் கற்றுக் கொடுத்தால் போதும்...''

ரொம்பத்தான் நாசூக்கு இந்த மது! வீட்டோடு இருந்து சமையல் எல்லாம் பார்த்துக் கொள்ளத் தயார் என்று ஒரு வார்த்தை சொல் என்று கேட்காமல் கேட்கிறார்!

''நான் சொல்லித் தருகிறேன் சார்... (மது என்று கூப்பிட நாக்கு வரமாட்டேன் என்கிறது!) ஆனால் ஸம் அதர் டே. இன்றைக்கு எனக்கு வேறு வேலை இருக்கிறது...''

''நேரம் இல்லையா? மூட் இல்லையா?''

அப்பா, நறுக்கென்று ஆளைப் புரிந்து கொண்டு விடுகிறார். எமன்!

கிரீஷ் விவகாரத்தை முதலில் முடி.

நான் ஹெட்மிஸ்ட்ரஸ் ரூமுக்கு நடந்தேன்.

''ஜீஸஸ், நல்ல பையனாயிற்றே அது-மூன்று நாட்களாய் வரவில்லையா? இரு. வீட்டுக்கு போன் செய்கிறேன்'' என்றார் மிஸஸ் தாமஸ். போனில் பேசிவிட்டு. ''ஜீஸஸ்... அந்தப் பையனுக்கு ஜாண்டீஸ் அட்டாக் பண்ணியிருக்கிறதாம்!''

### ஆகஸ்ட் — 15

இன்றைக்கு கிரீஷ் வீட்டிற்குப் போயிருந்தேன்.

வீடா, அது, பாலஸ்!

மாடியில் பெட்ரூமில் கிரீஷ் மஞ்சளாய்ப் படுத்திருந்தான். இரண்டு நர்ஸ்கள். வேலைக்காரர்கள். அவனுடைய அப்பா ஃபாரின் போயிருக்கிறாராம், பிஸினஸ் விஷயமாக. அம்மா லிப்ஸ்டிக் கலையாமல் அழுதாள்.

''ஒரே பிள்ளை... இப்படிப் படுத்து விட்டது...''

கிரீஷ் மஞ்சள் வரிகள் ஓடிய கண்களால் என்னை நிமிர்ந்து பார்த்தான்.

ஸாரி கிரீஷ், ஸாரி கிரீஷ், ஸாரி கிரீஷ்.

அவன் கண்களில் சூரிய ஒளி வந்தது.

''மிஸ், வில் யூ விசிட் மீ எவ்ரி டே?''

தினமும் வருகிறேன், கிரீஷ், தினமும் வருகிறேன்.

எதற்காக என்று தெரியாமல் இன்றைக்கு வெகுநேரம் படுக்கையில் அழுது கொண்டிருந்தேன்.

### ஆகஸ்ட் — 28

எழுதலாமா, வேண்டாமா?

இன்றைக்கு டைரி எழுத என் பேனாவே கூசுகிறது.

மதுவா அப்படி? மதுவா... மதுவா?

நான் இன்றைக்கு அவர் வீட்டுப் பக்கம் போயிருக்க வேண்டாம். 'டீ போடச் சொல்லித் தா' என்றாரே என்று போனேன். சற்று மேடான இடத்தில் வீடு.

வீட்டைச் சுற்றித் தோட்டம். முள் வேலியை ஒட்டி நான் நடந்தபோது, ஜன்னல் திறந்திருந்ததைப் பார்த்தேன்.

உள்ளே...

**God!** நான் பார்த்தது நிஜமா?

சுஷ்மா, நீயா?

''யூ ஆர் வெரி நாட்டி, ஸார்...'' என்று கொஞ்சும் குரல்.

என் பாதம் நழுவி ஒரு சிறு கல் உருண்டு உருண்டு... என் காயப்பட்ட நெஞ்சைப் போலவே அதல பாதாளத்திற்குள் எங்கோ போனது.

சே, பாரதி! எழுதியதை அடித்து விடு.
மதுவைப் பற்றி எழுதினால் கூட உன் டைரிக்கு அசிங்கம்.

ஒரே ஓர் ஆச்சரியம். எனக்குக் கொஞ்சம் கூட அழுகை வரவில்லை.

### அக்டோபர் — 29

எத்தனை நாட்களாகிவிட்டது, நான் டைரியைத் தொட்டு!

இன்றைக்கு என் நெஞ்சில் இருப்பதையெல்லாம் யாரிடமாவது கொட்டியே ஆக வேண்டும்!

கிரீஷை என்னென்னவோ டெஸ்ட் செய்து விட்டு, அந்த வெடிகுண்டை டாக்டர்கள் வெடித்து விட்டார்கள்.

இரண்டு கிட்னிகளும் படுத்து விட்டதாம்.
உடனே மெட்ராஸிற்கு எடுத்துப் போங்கள் என்று சொல்லி விட்டார்கள்.

பாரதி, உன் மனம் ஏன் கிடந்து அடித்துக் கொள்கிறது?

நிச்சயமாக அவன் கிட்னி ஃபெயிலூருக்கும், நீ கடுமையாகப் பேசியதற்கும் சம்பந்தமில்லை.

காரில் ஏற்றப்படுவதற்கு முன்னால் கிரீஷ் பார்த்த பார்வை இருக்கிறதே...

"மிஸ், இனிமேல் என்னைப் பார்க்க வர மாட்டீர்களா?"

அவன் வீட்டில் என்னவென்று புரிந்து கொண்டார்களோ?

"டீச்சர், நீங்களும் மெட்ராஸிற்கு வந்தால் கிரீஷிற்கு உதவியாய் இருக்கும்... ப்ளீஸ்..."

"அவசியமென்றால் அப்புறம் வருகிறேன்" என்று சொல்லி விட்டேனே தவிர, இப்போது மனம் வேறு எதிலும் பதிய மாட்டேன் என்கிறது.

### நவம்பர் — 19

இன்றைக்கு லெட்டர் வந்திருக்கிறது, மெட்ராஸிலிருந்து.

நான் உடனே புறப்பட வேண்டும்.

"போய் வா, பாரதி. ஜீஸஸ், ஸேவ் தட் பாய்!" என்று சிலுவையின் முன் மண்டியிட்டாள் மிஸஸ் தாமஸ்.

நினைக்க வேண்டாம் என்று நினைத்தாலும் நினைக்கத் தோன்றுகிறது.

இன்றைக்கு மதுவை ரேவதி என்ற ஸ்டூடண்ட்டோடு பார்த்தேன். மதுவின் பின்னால் ஸ்கூட்டரில் அப்படியே ஒட்டிக் கொண்டு...

மது... நீங்கள் அடலஸண்ட் பெண்களை அநியாயமாய் ஏமாற்றுகிறீர்கள்... எனக்கு வேறு வழி தோன்றவில்லை. மிஸஸ் தாமஸிடம் சொல்லப் போகிறேன். இந்த அழகில், "பேபி, நீ என்றைக்கு எனக்கு டீ போடச் சொல்லித் தரப் போகிறாய்?" என்ற விசாரணை வேறு!

### டிஸம்பர் — 12

ஹாஸ்பிடல் படுக்கையில் உட்கார்ந்து

---

நினைவூட்டுகிறோம்.

---

## மாதம் ஒரு மாவட்டம்

**கல்கி ஏற்கும் சமுதாயப் பணி**

**மறுபடியும் தென்னாற்காடு, காமராஜர், கோவை மாவட்டங்கள்......**



கடந்த ஆண்டு செப்டம்பர், அக்டோபர், நவம்பர் மாதக் கல்கி இதழ்களில் தென்னாற்காடு, காமராஜர், கோவை மாவட்டங்களின் பிரச்னைகள் பற்றி எழுதியிருந்தோம். கூடவே, அந்தந்த மாவட்டக் கலெக்டர் பேட்டியையும் வெளியிட்டிருந்தோம்.

இப்போது அந்தப் பிரச்னைகளெல்லாம் எப்படியிருக்கின்றன? தீர்வு காணப் பட்டனவா, இல்லையா? தீர்வு காணப்பட்டவற்றையும் எழுதுங்கள்; தீர்வு காணப்படாதவற்றையும் எழுதுங்கள். மறுபடியும் நமது நிருபர்கள் வரும் நவம்பர் மாதத்தில் இந்த மூன்று மாவட்டங்களுக்கும் ரீ–விஸிட் செய்ய வருகிறார்கள்.

கடிதங்கள் வந்து சேரவேண்டிய கடைசித் தேதி: 20.10.87.

உடனடியாக எழுதி அனுப்புங்கள்!

— ஆசிரியர்

எழுதும்போது, எழுத்துக்கள் எல்லாம் எவ்வளவு அசிங்கமாகக் கோணல் கோணலாகப் போகிறது! ச்சே!

ஆபரேஷனுக்கு அப்புறம் இன்றைக்குத்தான் கிரீஷைப் பார்த்தேன்.

"மிஸ்... மிஸ்... நீங்கள்தான் எனக்கு..." அழ ஆரம்பித்து விட்டான்.

"இதோ, பார் கிரீஷ். உணர்ச்சி வசப்படாதே. என்னுடைய கிட்னிதான் உனக்குப் பொருத்தமாயிருந்தது. ஸோ வாட்? என்னிடம் இரண்டு இருந்தது. ஒன்றைத்தானே கொடுத்தேன்? நீதானே சொல்வாய் நான் எப்போதும் உன்னோடு இருக்க வேண்டும் என்று? இனிமேல் நான் எப்போதும் உனக்கு உள்ளேயே இருக்கப் போகிறேன்... கிரேட், இல்லே?" என்று கண்களைச் சிமிட்டிக் கேட்டேன்.

அவன் அப்பா முட்டாள்தனமாகப் பெரிய தொகையைச் செக்காக எழுதி, கவரில் போட்டு என்னிடம் நீட்டினார். ஸ்டுப்பிட்!

எதற்கு விலை பேசுவது? என் டியர் கிரீஷிற்காக, ஓர் அம்மாவின் ஸ்தானத்தில் நின்று நான் செய்ததற்காகவா?

பணம் வேண்டாமென்றால், எஸ்டேட்டிலாவது ஒரு நல்ல வேலையை நீங்கள் எடுத்துக் கொள்ள வேண்டும் என்றார்கள்.

அதற்கும் ஒரு நோ.

## டிஸம்பர் — 29

ஸ்கூலில் உயர உயரமாக நடக்கும் பையன்களில் நான் கிரீஷின் துடிப்பை, கிரீஷின் அவசரத்தைப் பார்க்கிறேன்.

மது போன்ற ஆசாமிகளிடம் கழுத்தை நீட்டி, வாழ்நாளை விரயமாக்குவதை விட, உபயோகமான வேலைகள் எத்தனை செய்ய முடியும்?

நான் சந்தோஷமாயிருக்கிறேன்.

திருப்தியாய் இருக்கிறேன்.

கிரீஷ், நீ சிகிச்சை முடிந்து ஊட்டிக்குத் திரும்பியதும், நான் தினமும் உன் வீட்டிற்கு வருவேன் — உனக்குப் பாடங்கள் சொல்லித் தருவதற்காக.

எப்போது வருவாய் கிரீஷ்?

## டிஸம்பர் — 31

கட்டை வண்டி நீ, கம்ப்யூட்டர் நான் என்று கிரீஷ் சொன்னான் அல்லவா?

கட்டை வண்டியை நகர்த்த ஒரு மனிதனின் உதவி தேவை.

கம்ப்யூட்டரை இயக்க மின்சாரம் தேவை.

அன்றைக்கும், இன்றைக்கும் ஒவ்வொன்றிற்குப் பின்னாலும் ஒரு சக்தி வேண்டியிருக்கிறது, பார்த்தாயா கிரீஷ்? (அட, எனக்குத் தத்துவமெல்லாம் வருகிறது!)

சக்தி.

சக்தி என்றால் பெண்.

பெண் என்றால் சக்தி.





காவிய நயம் மிக்க
சாரதா'ஸின் பட்டுப் புடவைகள்
கலை நயம், விலை நயம்,
கலந்தது. இந்த தீபாவளிக்கு
சாரதா'ஸ் பட்டு புடவைகளை
அணிந்து ஆனந்தமாக
கொண்டாடுவோம்.
சாரதாஸ்
(முகூர்த்தப் பட்டு புடவைகளுக்கு அதிர்ஷ்டமான இடம்)
தன் பில்டிங்
மவுண்ட் ரோடு
சென்னை-600 002
போன் : 87177
N.S.B. ரோடு
திருச்சி-620 002
போன் : 27077
SARATHA'S

# உங்கள் சிற்றுண்டி நேரங்களை இப்பொழுது மேலும் சுவையூட்டுவதாக அமைக்கிறது

## குடும்பத்தினரின் குதூகலமான நேரங்கள்

# nafed

"நாபெட் சுவை மன்னர்கள்"

பரபரப்பூட்டும் இன்சுவை ரகங்கள்.
டெமொட்டோ கெச்சப், பைன் ஆப்பிள் ஜூஸ், தக்காளி ஜூஸ்,
மாங்கோ பல்ப், ஆரஞ்சு ஜூஸ், மிக்சட் ப்ரூட் ஜாம்,
மற்றும் பல விதங்கள்.




**NAFED PROCESSED FOODS**
"Cresent Court "2nd Floor, 963, Poonamallee High Road,
Madras-600 084. Phone: 665851. Telex: MS-7472.

# சாவுமணி ஓயட்டும் சகஜ வாழ்வு திரும்பட்டும்

பலாலி விமான நிலையத்திலிருந்து யாழ்ப்பாணம் நகரத்துக்குச் செல்லும் பலாலி வீதி வளைவில்லாத, கிளைகள் பிரியாத நேர் வீதி. வழியெங்கும் அங்கங்கே இடிந்து போன கட்டடங்கள் தெரிந்தன.

"வீடுகளை ரிப்பேர் செய்யவும் மீண்டும் குடி வரவுமே ஜனங்கள் பயப்படுகிறார்கள். எங்கே வெடிகள் புதைக்கப்பட்டிருக்கின்றன என்று தெரியாது. நம் ஆட்களே மூன்று பேர்கள் இன்ஸ்பெக்ஷனின் போது வெடி

பசுமையான செடிகள் அடர்ந்த அடக்கமான வீடுகள். எங்கு பார்த்தாலும் தமிழில் எழுதப்பட்ட பலகைகள். கொழும்புக்கும் யாழ்ப்பாணத்துக்கும் சம்பந்தமே இல்லாதது போல் இருந்தது. கொழும்புத் தெருக்களில் நான் பார்த்த பெயர்ப் பலகைகள் எல்லாவற்றிலும் சிங்களம், தமிழ், ஆங்கிலம் ஆகிய மூன்று மொழிகளிலும் எழுத்துக்கள் காணப்பட்டன. இங்கு தமிழைத் தவிர வேறு இல்லை. சில இடங்களில் ஆங்கிலமும்

**இலங்கையில் இன்றைய நிலை — III**

**— வாஸந்தி —**



யாழ்ப்பாணம்: போர் அடையாளம் — இடம் விரிக்கும் அரங்கம்.

வெடித்து இறந்து போனார்கள்" என்றார் ரெட்கிராஸ் வேணுகோபால். அவரது வாகனத்தில் நான் ஏறியிருந்தேன். நான் தங்க இருந்த ஓட்டலில் என்னை இறக்கிவிட அன்புடன் இசைந்திருந்தார்.

"யார் வைத்த வெடிகள்?"

"சிங்கள ராணுவம், போராளிகள், இருவரும் வைத்தவைதாம். அவர்களுக்கே தெரியாது இப்பொழுது எங்கே வைத்தோம் என்று!"

நகரத்தை நெருங்க நெருங்க நிறைய ஜன நடமாட்டம் தெரிந்தது. பள்ளிக்குச் சைக்கிளில் செல்லும் பெண்கள் நிறையத் தென்பட்டார்கள்.

"பையன்களையே காணோமே?"

"பையன்களை அதிகம் பார்க்க முடியாது. இறந்து போனவர்கள், கைதானவர்கள் போராளிக் கும்பலில் இன்னும் இருப்பவர்கள் — எல்லோரும் பையன்கள் தானே?"

தமிழ்நாட்டுச் சிறிய பட்டிணம் ஒன்றுக்குள் நுழைந்தது போல் பிரமையேற்பட்டது.

இருந்தது. மூலைக்கு மூலை, விடுதலைப் புலிகளின் சிவப்புநிறப் புலிக்கொடிகள், 'இது எங்கள் ராஜ்யம்' என்று பறைசாற்றின.

"ஒப்பந்தம் ஆகிப் பத்து நாட்கள் வரை கூடத் தெருவில் வர ஜனங்கள் பயந்துகொண்டிருந்தார்கள். இப்பொழுதுதான் தைரியத்துடன் வர ஆரம்பித்திருக்கிறார்கள்" என்றார் வேணுகோபால்.

நான் ஹோட்டலில் இறங்கி சீனிவாசன் கொடுத்து அனுப்பியிருந்த கடிதத்தை முதலாளியிடம் காண்பித்ததுமே அவர் வரவேற்ற கையோடு மனம் திறந்து படபடப்புடன் பேசவும் ஆரம்பித்து விட்டார்!

"'83 கலவரத்துக்குப் பிறகு இந்த ஹோட்டல் மூடியே இருந்ததும்மா. இந்திய சமாதானப்படை வந்த பிறகுதான் ஹோட்டலைத் திறந்தேன்!"

ஹோட்டல் அதிபர் இந்தியாவைச் சேர்ந்தவர்.

"இந்த ஒப்பந்தத்தைப் பற்றி என்ன நினைக்கிறீங்க?"



''என்னது... வறட்சிக் காலத்தில 'வெள்ள நிவாரணப் பணியைக் காண வரும் மந்திரியே வருக வருக'ன்னு போஸ்டர் ஒட்டியிருக்காங்க...?''

''வெள்ளம் வந்தப்ப தொகுதிக்கு வரணும்னு நினைச்சவரு தன்னோட தொகுதியைக் கண்டுபிடிச்சு வர்றதுக்குள்ள வறட்சி வந்திடுச்சு...''

— கோ. க. சுரேஷ்.

''தெய்வ அனுக்கிரகமாத் தோணுதும்மா. இப்ப பயமில்லாம தெருவிலே நடக்கிறோம். இப்படியே சமாதானம் நிலைச்சுப் போகணும், எப்படியாவது. சிங்கள விமானங்கள் வீசிய குண்டுக்கு ஒரு பக்கம் பயந்தம்னா ராத்திரி போராளிங்க எங்கே வந்து கதவை இடிப்பான்களோன்னு மறுபக்கம் பயம் இருந்ததில்லே?''

அதிகம் சொல்லி விட்டோமோ என்கிற கவலையுடன் கூடவே, ''எல்லாப் போராளிகளும் அப்படி எண்டு சொல்ல மாட்டேன். அதெல்லாம் ஒரு இடைக்கால அனுபவமாத்தான் கொள்ளணும். பயந்து பயந்து செத்ததெல்லாம் போதும். இனி அமைதி வேணும்,'' என்றார்.

**அ**ங்கு பலருடன் பேசும்போது ஒரு விஷயம் கவனித்தேன். போராட்டத்திற்காகப் போராளிகள் செய்த உயிர்த்தியாகத்தை மெச்சினார்கள்! அவர்களால்தான் யாழ்ப்பாண மக்களுக்குப் பாதுகாப்பு ஓரளவுக்காவது இருந்தது என்று பகிரங்கமாக ஒப்புக் கொண்டார்கள். ஆனால் தங்கள் பிள்ளைகள் இயக்கங்களில் இருப்பதை அவர்கள் விரும்பவில்லை என்று தெரிந்தது.

''நல்ல வேளை, நான் செய்த அதிர்ஷ்டம் என் பிள்ளை அதில் சேரவில்லை,'' என்றனர் பலர். சேர்ந்திருந்தால் அவர்களால் தடுத்திருக்க முடிந்திராது!

''இயக்கங்களுள் ஒற்றுமை இருந்திருந்தால் போராளிகள் அற்புதங்களைச் சாதித்திருப்பார்கள்'' என்றார் ஃபர்னாண்டோ — ஹோட்டலின் ரிஸப்ஷனிஸ்ட்.

முதலில் யாழ்ப்பாணப் பல்கலைக் கழகத்தின் துணைவேந்தர் நித்தியானந்தத்தைப் பார்க்கச் சென்றோம். எல்லாக் கல்லூரிகளையும் போல மாணவ மாணவிகள் கறுகறுப்பும் சிரிப்பும் பேச்சுமாக இருந்தார்கள்.

''சமாதானக் கோரிக்கைகள் ஒப்பந்தங்கள் எதுவும் பலனளிக்காததால்தான் பொடியன்கள் ஆயுதமேந்தும் நிலைக்குத் தள்ளப்பட்டார்கள்,'' என்றார் நித்தியானந்தம்.

''உங்கள் கல்லூரி மாணவர்கள் இயக்கங்களில் சேர்ந்தார்களா?''

''அதிகமாக இல்லை. பொதுவாகக் கல்லூரிகளில் இடம் கிடைக்காத மாணவர்கள்தான் ஏமாற்றத்தினால் அதிகமாய்ச் சேர்ந்தார்கள். எந்தக் கட்டத்திலும் நாங்கள் பல்கலைக் கழகத்தை மூடவில்லை.''

''ஒப்பந்தத்தைப் பற்றி என்ன நினைக்கிறீர்கள்?''

''இப்போது நிம்மதியாக இருக்கிறது. போகப் போக எப்படி அமுல்படுத்தப்படுகிறது என்று பார்க்க வேண்டும்.''

பொருளாதாரம் போதிக்கும் பாலகிருஷ்ணன் அழுத்தமாகச் சொன்னார்: ''இந்த ஒப்பந்தம் வரவேற்கப்பட வேண்டிய ஒன்றுதான். ஆனாலும் எங்களுக்குள் பழைய சரித்திரத்தின் ஞாபகத்தால் நிறையச் சந்தேகங்கள் எழுகின்றன. எத்தனை காலத்துக்கு இந்திய ராணுவம் இருக்கும்? ஆஃப்கானிஸ்தானில் ருஷ்யப் படைகள் தங்கிவிட்டது போலவும் வியட்நாமில் அமெரிக்கப் படைகள் தங்கியது போலவும் தங்க நேரிடுமா? 'திரிகோணமலையில் ஏதோ கலவரம்; சிங்கள ராணுவம் வந்தது' என்றார்கள். இப்படிப்பட்ட செய்திகள் எங்களுக்குச் சந்தேகத்தை ஏற்படுத்துகின்றன. சிங்கள அரசு எத்தனை காலத்துக்கு இந்தியாவின் பேச்சுக்கு அடங்கியிருக்கும்?''

பல்கலைக் கழகத்தை விட்டு வெளியே வரும்போது, இங்கிருக்கும் இளைஞர்கள் எல்லாம் எத்தனை காலத்துக்குப் பழைய ஞாபகங்களில் இருக்க வேண்டியிருக்கும்? ஞாபகங்கள் தேயுமா? தேயாதவரை இன ஒற்றுமை ஏற்படுமா? என்ற கவலை ஏற்பட்டது.

**யா**ழ்ப்பாணம் ஜெனரல் ஆஸ்பத்திரி துப்புரவாக, அமைதியாக இருந்தது. கோட்டையில் தங்கி ராணுவம் வீசிய ஷெல் வீச்சினால் சேதமடைந்த பகுதிகளைத் துரைராஜன் என்ற இளைஞர் காட்டினார். — ஆஸ்பத்திரியின் டைரக்டர் டாக்டர் நச்சினார்க்கினியனின் அலுவலகத்தில் பணிபுரிகிறவர்.

''சேதங்களைப் பார்த்தீர்களா?'' என்றார் டாக்டர் நச்சினார்க்கினியன். ''கோட்டையிலிருந்து குண்டு வீச வேண்டும் என்ற காரணத்துக்காக இங்கிருக்கும் ஒரே ஆஸ்பத்திரியைச் சிங்கள ராணுவம் மூடச் சொன்னபோது மறுத்தேன். பின் விளைவுக்கும் சித்தமானேன்!''

அவர் தொடர்ந்து ரொம்பவும் உணர்ச்சிவசப்பட்டு ராணுவத்தால் விளைந்த உயிர்ச்சேதத்தைப் பற்றியும் பொருள் நஷ்டத்தைப் பற்றியும் விவரித்தார்.

''ஒப்பந்தத்தைப் பற்றி என்ன நினைக்கிறீர்கள்? இரு பக்கமும் இருந்த வன்முறைக்கு ஒரு முடிவு ஏற்பட்டதாகத் தோன்றவில்லையா?''

''நிச்சயமாக. ஆனால் எங்களுக்கு இந்திய ராணுவப் படையைப் பற்றி நிறைய சந்தேகம் இருக்கிறது. திரிகோணமலையில்

இன்னமும் சிங்களக் குடியேற்றம் நடந்து கொண்டிருக்கிறது. போராளிக் கும்பல்களுக் கிடையில் பூசல்களும் மரணங்களும் நிகழ் கின்றன. இந்திய ராணுவத்தினர் என்ன செய்து கொண்டிருக்கிறார்கள்? அவர்கள் யாருடைய நண்பர்கள்?''

ஒரு பத்திரிகை ஆசிரியர் வேறு விதமாகச் சாடினார். ''ஒப்பந்தத்தின் ஷரத்துக்களைப் பாருங்கள். தமிழர்களைப் பற்றி ஏதுவுமே இல்லை! இந்தியாவுக்கும் ஸ்ரீலங்கா அரசுக்கும் இடையே உருவான ஒப்பந்தம் அது. எங்களுக்கும் அதற்கும் சம்பந்த மில்லை.''

'இந்தியாவுக்கு இப்பொழுது பெரிய பொறுப்பு மட்டுமில்லை; பெரிய தலைவலி' என்று தீக்ஷித் சொன்னது எத்தனை உண்மை என்று நினைத்துக் கொண்டேன்.

நான் சந்தித்த பெண்களும், அரசியல் விதண்டாவாதத்தில் குழப்பமடையாத எளிய மக்களும், ''எங்களுக்கு இப்பத்தான் நிம்மதி. சந்தோஷமா இருக்கிறோம். இஷ்டப் படி வெளியிலே போறோம். இதற்கு முன்பு காலையிலிருந்து மாலைவரை குண்டு வீசும் விமான ஓசை எப்போது கேட்குமோ என்று எப்பவும் பயந்து பயந்து சாவோம்!'' என் றார்கள்.

நான் கேட்ட புகார்களை என்னைச் சந்திக்க வந்த இந்திய அமைதிப் படையைச் சேர்ந்த லெஃப்டினன்ட் கர்னல் ஹரிஹர னிடம் சொன்னேன்.

''இந்த மாதிரி இரண்டு பக்கமும் சந்தேகங்கள் வருவது இயற்கை. அதனால்தான் நாம் ரொம்ப ஜாக்கிரதையாகச் செயல்பட வேண்டியிருக்கிறது. ஒப்பந்தத்தின் ஷரத்துக்களை இவர்கள் சரியாகப் புரிந்து கொள்ள வில்லை. போர் நிறுத்தம் அமுல் செய்யப்படு கிறதா என்று கவனிக்கவே நாங்கள் இருக்கி றோம். இந்தியா இனிமேலும் சும்மா இருக் காது என்று இலங்கை அரசு புரிந்து கொண் டிருக்கிறது. அதனால் இனிமேல் கவனமாகத் தான் இருக்கும். இரண்டாவதாக, போராளி கள் ஆயுதங்களை ஒப்படைக்கும் பணியில் அவர்களது ஒத்துழைப்பைப் பெற இலங்கை அரசுக்கு நடு நிலையாளராக நாங்கள் இருக்கிறோம். இங்கே போலீஸ் உத்தியோகம் செய்ய நாங்கள் வரவில்லை. அது இலங்கையின் உள்நாட்டு விஷயம். அரசு உதவி கோரினால் மட்டுமே கொடுப் போம். இது ஒரு அந்நிய நாடு என்பதை நாங்கள் மறக்க முடியாது. ரொம்ப ஸென் ஸிடிவ் ஏரியா. வரம்பு மீறித் தலையிட்டு நம் அதிகாரத்தைக்காண்பித்தோமானால் ஆக்கிர மிக்க வந்திருக்கிறோம்' என்ற எண்ணம் ஏற்பட்டு விடும்!''

அன்று மதியம் நான் வடமராச்சி பகுதிக்குப் போக நினைப்பதாகச் சொன் னேன். ''ஜாக்கிரதையாகப் போய் வாருங் கள்'' என்றார் அவர், கவலையுடன். ''காரை விட்டு இறங்க வேண்டாம். தப்பித் தவறி ஏதாவது கண்ணி வெடியில் கால் வைத் தீர்களானால் ஆள் க்ளோஸ்தான்.''



''கல்யாணம் பண்ணிக்கிட்டா உன்னைத்தான் பண்ணிப்பேன். இல்லாட்டி பாழும் கிணத்துல விழுந் துடுவேன்.''

''ஏன் அப்படிச் சொல்றீங்க?''

''ரெண்டும் ஒண்ணுதானே?''

— ராதா வாசுதேவன்

என்னுடன் கூட ஃபர்னாண்டோவும் துரைராஜனும் வந்தார்கள். வெல்வெட்டித் துறை, பாயிண்ட் பெட்ரோ, வடமராச்சி ஆகிய இடங்களில் இலங்கை ராணுவத் தால் ஏற்பட்டிருந்த சேதங்களை வர்ணிக்க வார்த்தைகள் இல்லை. முக்கால்வாசி வீடுகள் ராணுவ விமானத் தாக்குதல்களால் பொடிப் பொடியாகி இருந்தன. நான் சர்வ ஜாக்கிரதையாகச் சில இடங்களில் இறங்கி போட்டோ பிடித்தேன். வெகு குறைவான ஜனங்களே இருந்தார்கள். கடைத் தெருக் களில் முக்கால்வாசிக் கடைகள், சொந்தக் காரர்கள் இன்னும் திரும்பி வராததால் பூட்டப் பட்டே கிடந்தன. வெல்வெட்டித் துறையில் இருந்த ஓர் இளைஞர், ''தனித் தமிழ் ஈழம்தான் எங்களுக்கு வேண்டும். இந்த அரை வேக்காடு ஒப்பந்தம் எங்க ளுக்குத் தேவை இல்லை, நாங்களே போராடி அடைவோம்!'' என்றார். இடிபாடுகளுக்கு நடுவே நின்று இப்படிப் பேச அவருக்கு எப்படித் தைரியம் வருகிறது என்று நான் வியந்தேன்.

வழிநெடுக அங்கங்கே ஒலிபெருக்கியில் சோக கீதம் ஒலித்தது. விடுதலைப் புலிகள் மூன்று பேர் இறந்ததற்காக அப்படி துக்கம் கொண்டாடினார்கள். சுவரொட்டிகள் வீர மரணமடைந்த விடுதலைப்புலிகளுக்காக அஞ்சலி செலுத்தின.

காட்டிக் கொடுத்த துரோகிகளையும் வேறு சில தவறுகளைச் செய்தவர்களையும் விளக்குக் கம்பத்தில் கட்டிப் பொது ஜனங் களின் பார்வையில் சுட்டுத் தள்ளிய விடு தலைப் புலிகளின் ஃபாஸிஸ முறைகளைப் பற்றியும் மெல்லிய குரலில் சிலர் பயந்து கொண்டே சொன்னார்கள். எனக்கு முந்நூறு ஆண்டு நாகரிக முன்னேற்றத்தை மறந்து அவர்கள் பின்தங்கிவிட்டது போன்ற உணர்வு ஏற்பட்டது. அதே நேரத்தில் இத்த கைய நிலை ஏற்பட்டதற்கான சரித்திர நிகழ்ச்சிகளை நினைத்துத் துயரமும் ஏற்பட் டது.

மனத்தில் கவிந்த சோகத்தை மறக்க நல்லூர் கந்தசாமி கோயிலுக்குச் சென்று வந்தேன். ஒரு வாரத்துக்கு முன்புதான்

அங்கு கோலாகலமாகத் தேர்த் திருவிழா நடந்திருந்தது. அங்கு நான் சந்தித்த ஓர் இளைஞர் பொது ஜனங்களின் மனநிலையைத் தெளிவாகச் சொன்னார்:

"எங்களுக்கு வெடிச் சப்தத்தைக் கேட்டு அலுத்துப் போச்சு. அமைதியைத் தவிர வேறு ஒன்றும் வேண்டாம். இந்த ஒப்பந்தம் ஏற்பட்டதும், உயிருக்குக் காப்புறுதி கிடைத்தது போல் இருக்கிறது. போராளிகள் என்னதான் ஆயுதமெடுத்து ஈழத்துக்காகச் சண்டை போட்டாலும் எங்களுக்கு உயிர்ப் பாதுகாப்பு இருக்கவில்லை. இங்கே இருபத்தைந்து சதம் பேர்தான் போராளிகளுக்கு ஆதரவாக இருப்பார்கள். எழுபத்தைந்து சதம் மக்கள் (வெளிப்படையாகச் சொல்லாவிட்டாலும்) அவர்களுக்கு ஆதரவு கொடுக்க மாட்டார்கள். போராளிகளின் இயக்கம் ஓர் இடைக்காலக் கனவாகத்தான் இருக்குமே தவிர அதனால் நிரந்தர நன்மை ஏற்பட முடியாது!"

ஆயுதம் பிடித்துப் பழகிவிட்ட இளைஞர்களுக்குச் சரியான பாதை இப்பொழுது காண்பிக்கப்படாவிட்டால் அவர்கள் பெரியதொரு சமூகப் பிரச்னையாக மாறுவார்கள். எனவே அரசு நிர்வாகத்தில் ஈடுபடக் கூடிய ஜனநாயகப் பிரக்ஞை அவர்களுக்கு ஊட்டப்பட வேண்டும். — இது நடக்குமா?"

இந்தக் கேள்வியை நான், டி. யூ எல். எஃப். கட்சியின் முக்கிய அங்கத்தினரும் முன்னாள் நாடாளுமன்ற உறுப்பினருமான நீலன் திருச்செல்வத்திடம் கொழும்பில்

---



லாவணிக்......



......கச்சேரி



...மர்மயாகம்

**வம்பு மார்க்கெட்:**

# மேற்கு மாம்பலத்தில் மர்ம யாகம்!

## இங்கே 'பஞ்சம்' இல்லையா?

ஒரு சுவாரசியமான லாவணிக் கச்சேரி, நம் மத்திய, மாநில மந்திரிகள் மத்தியில் நடக்கிறது. மத்திய மந்திரி ப. சிதம்பரம் "தமிழகத்திலிருந்து வறட்சி நிவாரணம் கோரி முறையான மனு எதுவும் வரவில்லை" என்று குற்றம் சாட்ட —

ராசாராம், வி. வி. சுவாமிநாதன் போன்ற மந்திரிகள், "யார் சொன்னது அப்படி? பலான பலான தேதிகளில் முதலமைச்சர் எழுதியிருக்கிறாரே...!" என்று இழுத்தாற் போல் பதில் சொல்ல, 'யார் நம் காதில் பூ சுற்றுகிறார்கள்?' என்று தெரியாமல் நாம் விழிக்கிறோம் அல்லவா?

இதன் உண்மையை ஆராயப் போனால், இன்னும் பிரமாதமாக நாம் குழம்பலாம்!

மத்திய அரசில், பஞ்ச நிவாரணங்களைக் கவனிக்கும் ஓர் இலாகா இருக்கிறது. ஆண்டுதோறும் ஒவ்வொரு மாநிலமும் ஒரு குறிப்பிட்ட தேதிக்குள் பஞ்ச நிவாரணக் கோரிக்கை அனுப்ப வேண்டும். அதற்கேற்ப மத்திய உதவி அளிக்கப்படுகிறது...

ஆனால், இந்த அறிக்கையை அனுப்பாமலும், உதவி பெறாமலும் இருக்கும் ஒரே அரசு, நம் தமிழக அரசுதான்! இந்த ஆண்டு மட்டுமல்ல, இதை விடக் கடும் பஞ்சம் ஏற்பட்ட காலத்திலும் (சுமார் நான்கு ஆண்டுகளுக்கு முன்) அப்படி உதவி கோரி மாநில அரசு அனுப்பாமல், தூங்கிக் கொண்டிருந்திருக்கிறது (மத்திய அரசு வெளியிடும் ஓர் அறிக்கையில் இது இடம் பெற்றிருக்கிறது!)

ஏன் இப்படி?

'எல்லாவற்றிற்கும் காரணம் அரசியல்தான்' என்கிறார் ஓர் அதிகாரி. வறட்சி இருந்தாலும், தமிழகம் தன்னிறைவுடன் இருப்பதாகவும், பஞ்சமே இல்லை என்பது போலவும் 'புரட்சித் தலைவர்' ஆட்சியில் பொன் பொழிகிறது என்பது போலவும் அமைச்சர்கள் பீற்றிக் கொண்டு அறிக்கை விடும்போது, அவற்றிற்கு மாறாக அதிகாரிகளால் பஞ்ச அறிக்கைகளைத் தயாரித்து

கேட்டேன்.

"ஏன் நடக்காது?" என்றார் அவர். "மீஜோ பயங்கரவாதத் தலைவர் லால்டெங்கா மீஜோ ராமில் முக்கிய மந்திரி பதவி ஏற்கவில்லையா?"

ஒப்பந்தம் வெற்றி பெற வேண்டும் என்று தமிழ் — சிங்கள சாமானிய மக்கள் பெரிதும் விரும்புகிறார்கள். ஆனால் இதற்கு முத்தரப்பு அரசியல்வாதிகளும் தங்கள் தங்கள் ஈகோவை விட்டுக் கொடுத்து முயற்சி செய்வார்களா? "அவர்களுடைய முயற்சி மட்டும் போதாது" என்றும் பலர் என்னிடம் கொழும்புவில் கூறினார்கள்! "தமிழ் நாட்டு அரசியல்வாதிகளாலும் பத்திரிகைகளாலும் எங்களுக்கு அதிக தொந்தரவு. இனத் துவேஷத்தைப் பேச்சினாலும் எழுத்தினாலும் தூண்டி விடுகிறார்கள். போராளிகளைக் கதாநாயகர்களாக வர்ணித்து தாங்களே கொடுக்காத முக்கியத்துவத்தை அவர்களுக்கு ஏற்றுகிறார்கள். இங்கு ஜனங்கள் இனக் கலவரங்களால் எத்தனை சோர்ந்திருக்கிறார்கள் என்பதை அவர்கள் அறிய மாட்டார்கள். எங்களுக்கு அமைதி வேண்டும். இந்தஒப்பந்தம்ஏற்பட்டதைஒருவரப்பிரசாதமாகவே கருதுகிறோம். இரு இனத்தவரும் பரஸ்பர நம்பிக்கையை வளர்த்துக் கொண்டால்தான், அதற்கு வேண்டிய சூழ்நிலையை உருவாக்கினால்தான், ஒப்பந்தம் வெற்றிகரமாக அமுலாக்கப்படும். அதற்கு எதிராகத் தமிழ்நாட்டிலிருந்து வரும் செய்திகள் எங்களுக்கு மிகவும் வேதனையைத் தருகின்றன."

அனுப்ப முடிவதில்லையாம்!

## மேற்கு மாம்பலத்தில் 'மர்ம' யாகம்

அமெரிக்காவிலிருக்கும் எம். ஜி. ஆரின் உடல்நிலையைப் பற்றி உற்சாகமான செய்திகளே, நமக்கு வந்து கொண்டிருக்கின்றன! 'பால்டிமோரில் ஓய்வெடுக்கிறார்,' 'புது மருந்துகள் அளிக்கப்படுகின்றன' ... இப்படி இப்படி... ஆனால் அதே சமயம், ஓசையில்லாமல் அவருக்காக, மேற்கு மாம்பலத்தில் ஒரு ஜோதிட நிலையத்தில் பிரமாதமான ராஜ யாகம் ஒன்று நடந்தது!

1984 இல் எம். ஜி. ஆர். மிக மோசமாகப் பாதிக்கப்பட்டிருந்த போது, இப்படி யாகங்கள் நடந்தன. இப்போது அமெரிக்காவிலிருந்து, உற்சாகமாக அறிக்கைகளை விட்டு அவர் ஆட்சி செய்து கொண்டிருக்கும் போது, யாகம் ஏன்?

அதற்கு ஒருவர் கூறிய ஜோஷ்யம்:

"இது எம். ஜி. ஆரின் நலனுக்காக நடத்தப்பட்ட யாகம் அல்ல. திருமதி ஆர். எம். வீ. அந்த யாகத்தில் கலந்து கொள்கிறார். எம். ஜி. ஆரிடம் தம் செல்வாக்கு பலமாக இருக்க, ஆர். எம். வீ. யால், ஆர். எம். வீ.க்காக நடத்தப்படும் யாகம்!" என்றார்.

உண்மைதானோ? யாகத்தை நடத்தியவர், எம். ஜி. ஆரின் ஆஸ்தான ஜோதிடர் மட்டுமல்ல, ஆர். எம். வீ. யின் ஆத்மார்த்த நண்பரும் ஆன 'இளைய' ஜோசியர்!

## கோட்டையில் விசித்திரம்

சென்னை தலைமைச் செயலகக் கோட்டையில் ஒரு விசித்திரமான நிலை உருவாகியிருக்கிறது. தமக்கு வேண்டியவர்களுக்கான சில்லறை சகாயங்களைச் செய்வதைத் தவிர, அமைச்சர்கள் எந்த உருப்படியான காரியமும் செய்வதில்லை. வருவதும், காத்திருக்கும் கட்சிக்காரர்களிடம் ஊர் வம்பு கேட்பதும், கிளம்பிப் போய்விடுவதுமாக இருக்கிறார்கள்.

ஏன் அப்படி?

அவர்களை, அதிகாரிகளே, மதிப்பதில்லை. எல்லா அதிகாரிகளும் நேரடியாக அமெரிக்காவுக்கே தொடர்பு கொண்டு பரமசிவம் மூலம் உத்தரவுகளைப் பெற்றுக் கொள்ள வேண்டும் என்று மேலிடத்துக் கட்டளையாம்! ஆக, இப்போது அதிகாரிகள் தாம், அமைச்சர்களை ஓரம் கட்டிவிட்டு, தூள் கிளப்பிக் கொண்டிருக்கிறார்கள். தமக்கு ஏதாவது ஆக வேண்டும் என்றால் அமைச்சர்களே அதிகாரிகளைத் தாஜா செய்யும் நிலை! அதிகாரிகள் அமைச்சர்களை மதிக்காததற்குக் காரணம், அமைச்சர்களின் நிலையற்ற தன்மைதான்! எம். ஜி. ஆர். வந்ததும் (எப்போது???) பலருடைய சீட்டு போய் விடும் என்பதால்தான்!

## இ. காங் — அ. தி. மு. க. கூட்டு இல்லையா?

தமிழகத்தை, அ. தி. மு. க. வுடன் சேர்ந்து ஆள வேண்டும் என்ற ஆசை இ. காங்கிரஸுக்கு 'மூக்கு முட்ட' இருக்கிறது! ஆனால் வேளைதான் ஒத்துவர மாட்டேனென்கிறது!

கடந்த ஆண்டு ஜூன் மாதம் வாக்கில், அப்படியொரு முடிவு எடுக்கப்பட்டு, இ. காங்கிரஸ் சார்பில் யாரையெல்லாம் தமிழக மந்திரிசபையில் இடம் பெறச் செய்வது என்பது வரை முடிவு செய்தார்கள்! அந்த முடிவு நழுவிப் போனதற்குக் காரணம், ராஜீவ் காந்தியின் அரசே ஊழல் குற்றச்சாட்டுக்கு உள்ளாகி, ஆட்டம் கண்டது தான்.

இந்த ஆண்டு, கடந்த மாதத்தில் மீண்டும் அந்த முடிவுக்கு இறுதி வடிவம் தரப்பட்டது! 'இலங்கை — இந்திய ஒப்பந்தத்தால் — தமிழர்கள் மத்தியில் கிடைக்கும் வரவேற்பை மூலதனமாக்கி, தமிழக மந்திரிசபைக்குள் தம் கட்சியைச் செருகி விடுவது என்று மேலிடம் திட்டமிட்டது! ஆனால், ஐயகோ! மீண்டும் அந்தத் திட்டம் ஒத்தி வைக்கப்பட்டு விட்டது! காரணம், இலங்கை ஒப்பந்தம் செயல்பட முடியாமல் சந்தி சிரிப்பதுதான்!

— ஒட்டக்கூத்தன் ஜி

# சந்திப் பிரசாதம்!

வந்தது வயிற்றுவலி!

* நீங்கள் தேர்ந்தெடுத்து வெளியிட்டிருந்த டாக்டர் ஜோக்குகளைப் படித்து எங்களுக்கு வயிற்றுவலியே வந்துவிட்டது! ஜோக் டாக்டரை உங்கள் அலுவலகத்திலேயே காத்திருக்கச் சொல்லுங்கள். இதோ வருகிறோம். அவர்தான் வயிற்றுவலியைப் போக்க வேண்டும்!

நாகூர், டி. என். இமாஜான்.

* டாக்டர் ஜோக் போட்டியில் இடம் பெற்றிருந்த, வயிற்று வலியை 'சாய்ஸில்' விட்ட ஜோக், ஏற்கெனவே வேறு ஒரு பத்திரிகையில் வந்துவிட்டது. தேர்ந்தெடுக்கும் போது இப்படிப்பட்ட ஜோக்குகளையெல்லாம் 'சாய்ஸில்' விட்டுவிடக் கூடாதா?

விருத்தாசலம், வி. நாகராஜன்.

* தேசிய நோக்குடன் ஓர் ஆன்மீக இயக்கம் துவக்கும் ஸ்ரீ ஜெயேந்திர சரஸ்வதி சுவாமிகளின் பேட்டி, அவர் மேற்கொண்டுள்ள நிலையினை நயம் திரிபுற விளக்கியது. அவரது இயக்கம் வெற்றி பெற வேண்டும் என்னும் தூய்மையான நோக்கில் அட்டையில் அவரது படத்துடன் பேட்டியினை வெளியிட்ட 'கல்கி'க்குப் பாராட்டுக்கள்.

சென்னை — 28, எல். ஆர். சுந்தரராஜன்.

சிரிப்புக் கொத்து

* ''ஐயோ இந்தக் கிழங்கள்'' கதை ஒரு சிரிப்புக் கொத்து. கதையின் முடிவை முதலிலேயே யூகிக்க முடிந்தாலும் வர்ணனைகளும் நகைச்சுவையும் வாசகனைப் படிக்கத் தூண்டின.

சென்னை — 4, ஆர். ராமமூர்த்தி.

* முதல் பக்கத்தில் இடம் பெற்றிருந்த பாரதி பா. மு. தாசனின் 'ஒரு இரவு நேரக் கெகிகெப்பு' அர்த்தங்கள் ஆயிரம் நிறைந்திருந்த அற்புதமான கவிதை. ஓவியர் ''ஜெ''யின் கச்சிதமான படம் டாப்!

தோட்டக்குறிச்சி, இரா. வனையாபதி

* என்ன சார்? ரொம்ப குழப்பத்தில் இருக்கிறீர் போலிருக்கிறதே? 20.9.87 இதழ் முக்கான வாசகர் கடிதக் கருத்துக்களை 'வட்டமேஜை' பகுதியில் பிரசுரித்துவிட்டு, 27.9.87 இதழ் 'கல்கி'யின் அட்டைப்படத்தைப் பிரசுரித்து உள்ளீரே?

குத்தாலம், எஸ். ராஜா.

* ஜெயமன்மதன் தீட்டிய விமரிசனங்கள் 'மினி' தான் என்றாலும் 'மணி'யானவை. ஒய். ஜி. மகேந்திரனின் ஸ்டைலுக்கு அடித்திருந்த கமெண்ட் — டாப் கிளாஸ்!

மதுரை — 20, மதுரை ஜோ.

* இந்த இதழில் இடம் பெற்றிருந்த நான்கு சிறுகதைகளும் அருமை. குறிப்பாக 'தேர்க்கால்' என்ற போட்டிக் கதை மிக நன்றாக இருந்தது.

நத்தியநல்லூர், க. கயல்விழி.

* 4.10.87 இல் வெளியான கல்கி தலையங்கம் மக்களின் மனத்தில் படர்ந்திருக்கும் உணர்வுகளை அப்பட்டமாகப் படம் பிடித்துக் காண்பித்தது. 'இந்தியாவில் ஜாதிகள் என்பது கிடையாது. பொருளாதார ரீதியில் பின்தங்கிய வகுப்பினருக்கு மட்டுமே இட ஒதுக்கீடுகள். இந்தச் சலுகைகளிலும் திறமை, தகுதி அடிப்படையில் முன்னுரிமை என்று அறிவித்து, இந்தக் கொள்கைக்குப் பொதுஜன வாக்கெடுப்பு மூலம் மக்களின் அங்கீகாரம் பெற்றாலன்றிப் பிரச்னை தீராது' என்ற வரிகள் சத்திய வாக்கு.

நாகப்பட்டினம், சுதா ஜகன்.

* அம்பத்தூர் — பாடியிலுள்ள T. M. P. நகரில் தாய் — சேய் நல விடுதி இப்பொழுது திறக்கப்பட்டு இயங்குகிறது. இவ்வளவு நாளும் திறக்கப்படாமல் இருந்த அவ்விடுதி பற்றிச் செங்கல்பட்டு மாவட்டக் கலெக்டரின் கவனத்திற்குக் கொணர்ந்த கல்கிக்கும், உடனே நடவடிக்கை எடுத்த கலெக்டருக்கும் மிக்க நன்றி.

சென்னை — 50, சி. இ. அரசு.

* ''பத்திரிகைகளில் எழுதப்படும் தலையங்கம் எப்படி இருக்க வேண்டும்'' எனும் கேள்விக்குத் தராக அளித்த பதிலுக்கு ஓர் உதாரணமாய் சபாஷ் போடும் வகையில் அமைந்திருந்தது, அதே இதழில் இடம் பெற்ற தலையங்கம்.

கும்பகோணம் — 1, எஸ். தேவாதிராஜன்.

* 1,60,000 பள்ளிகளில் 'ஒரே ஆசிரியரே இருக்கிறார்' என்ற கடைசிப் பக்கத் துணுக்குச் செய்தி என்னை யோசிக்க வைத்துவிட்டது. ஓர் ஆசிரியர் குறைந்தபட்சம் ஐந்து வகுப்புகளை எப்படிக் கவனிக்க முடியும்? அதோடு அவருக்கு உடல் நிலை சரியில்லையென்றாலோ, சொந்த வேலை இருந்தாலோ அன்று பள்ளிக்கு விடுமுறைதான். இந்தியாவின் கல்வித் தரம் தாழ்ந்து கொண்டிருப்பதன் காரணம் நன்றாகவே விளங்குகிறது.

திருநெல்விக்காவல், எஸ். அரிஅரன்.

* ''அறிமுகம் ஓர் அனுபவம்'' சிறுகதையில், அனுபவமற்றவர்களுக்குப் புதிய பிரச்னை எவ்வாறு அறிமுகமாகிறது என்பதைத் தெளிவாகவும், சிறப்பாகவும் எழுதிய ஆசிரியருக்கு வாழ்த்துக்கள். விரல் சப்புவதற்கு கர்ப்பீப் கிடைக்காமல் மணிக்கணக்கில் அழுத சிறுவன் பிரபுவை லேசில் மறக்க முடியாது.

கொத்தமங்கலம், எஸ். ராமன்.

* 'தேர்க்கால்' என்ற எனது போட்டிக் கதை தேர்வு பெற்றபோது அடைந்த மகிழ்ச்சிக்கு இப்பொழுது ஊனம் ஏற்பட்டு விட்டது. 4.10.87 இதழில் வெளியான அக்கதையில் என் பெயரை 'அ. குமார்' என்று பிரசுரித்துள்ளீர்கள். 'எஸ். குமார்' என்று இருக்க வேண்டும்.

திருக்கழுக்குன்றம், எஸ். குமார்.

# கல்கி



# தீபாவளி மலர் 1987

வண்ண மயமாய்த் திகழ்கிறது; இதோ,
விமரிசையான வண்ணப்படங்களின் வரிசை:

**ஆன்மீகம்:**

* காஞ்சி பரமாச்சார்யாள், பீடாதிபதி, இளவல்
* ஸ்ரீ ராகவேந்திர சுவாமிகள்
* நாட்டரசன்கோட்டை ஆயிரம் கண்ணுடையாள்
* சபரிமலை தல புராணக் காட்சிகள்.
* ராமனுக்கு நிகர் ராமனே!

**கலை; இலக்கியம்:**

* இலக்கியக் காதலர்கள்
* கவிதை மடல்.
* வனிதையர் விரும்பும் வளையல்கள்
* கடவுளைக் கனியச் செய்த கவிகள்
* ஒப்பற்ற ஓவியப் பாணிகள்

**பயண அனுபவக் காட்சிகள்:**

* சோளிங்கபுரம் யோக ஆஞ்சநேயர்
* காசி யாத்திரை
* ருஷ்ய, அமெரிக்கச் சுற்றுலா
* ஸெஷல்ஸ் தீவுகள்

**கோகுலம் பக்கங்கள்**

* அழ. வள்ளியப்பா தயாரிப்பு

**அமரர் கல்கி**

எழுதிய குறுநாவல்

* வீணை பவானி

**மர்ம நாவல்**

* ராஜேஷ்குமார்

---

கதைகள்; கட்டுரைகள்; சிரிப்பு வெடிகள்; மங்கையர் மலர்

---

**இப்போதே உள்ளூர் ஏஜெண்டிடம் பதிவு செய்து கொள்ளுங்கள்.**
**விலை ரூ. 30/— ரிஜிஸ்தர் தபாலில் பெற ரூ. 35/— அனுப்பவும்.**
**மானேஜர், கல்கி, சென்னை — 600 032.**

# 1

# வேரில்லாத மரங்கள்

பஸ் ஒன்று தெரு முனையில் துவங்கி, கடைசி வரை விடாமல் ஹாரனை நாராசமாய் ஒலித்துக் கொண்டு போனதில் விழிப்புக் கொடுத்து விட்டது.

சட்......

நிம்மதியாய் உறங்க விடாமல் தினமும் இது ஒரு அவஸ்தை......

பஸ் ஹாரனைத் தொடர்ந்து, அடுத்த கட்டடத்தில் இயங்கி வரும் ஆட்டோ மொபைல் ஒர்க் ஷாப்பில் யாரோ இரும்புத் தகட்டைச் சுத்தியால் ஓங்கித் தட்டும் 'டொம்' சத்தமும், எங்கோ ஒரு குழந்தை விராட் விராட்டென்று நாக்கு இழுத்துக் கொள்ள அலறுவதும் செவிப்பறையைத் தாக்க, மாதவன் அவசரமாய்த் தலைகாணிக்கு அடியில் தலையை நுழைத்து, ஒலிகள் உண்டாக்கிய அவஸ்தையைக் குறைக்கப் பார்த்தான்.

ம்ஹூம்... பலன் இல்லை...

பஞ்சுத் தலைகாணி கவசத்தையும் ஊடுருவிக் கொண்டு சத்தங்கள் காதில் நுழைந்து, மூளையைத் தொட்டு, விழிப்புணர்வை அதிகமாக்கினதில், தூங்கியது போதும் என்று அலுப்புடன் தீர்மானித்தான்.

நான் மட்டும் மந்திரியானால் முதலில் இந்த மாதிரி காட்டுத்தனமாய் ஹாரனை ஒலிக்கும் ஓட்டுனரின் லைசென்ஸைப் பறிமுதல் செய்வேன்... ஊருக்குள் ஆட்டோ மொபைல் ஒர்க் ஷாப் இருக்கக் கூடாது என்றும், பெற்றோர்கள் காலை வேளையில் குழந்தைகளை அழவிடக் கூடாது என்றும் சட்டம் கொண்டு வருவேன் — என்று எரிச்சலுடன் நினைத்தவன் தலைகாணியைத் தள்ளி விட்டு, கண்களை மூடியபடியே எழுந்து உட்கார்ந்தான்.

இரண்டு உள்ளங்கைகளையும் சூடு பறக்கத் தேய்த்துக் கண்களில் ஒற்றிக் கொண்டான். உள்ளங்கைகளை நேராகப் பிடித்தபடி கண்களைத் திறந்தான்.

சிவசங்கரி



பார்வை உள்ளங்கை ரேகைகளில் விழுந்தது.

நினைவு தெரிந்த நாளாய் அவனுக்கு இப்படி ஒரு பழக்கம்.

சின்ன வயசில் ஆயா — அப்பாவைப் பெற்ற பாட்டி — சொல்லித் தந்த வழக்கம், இன்றைக்கும் விட்டுப் போகாமல் இருக்கிறது.

ஆயாவுக்கு இவன் ஏகச் செல்லம். மூத்த பிள்ளை மூலம் பிறந்திருக்கும் முதல் பேரன் என்று சலுகைகள் எக்கச்சக்கம்...

பெற்றவள் என்கிற பேர் மட்டும்தான் அம்மாவுக்கு... மற்றபடி குளிப்பாட்டுவது, சோறு ஊட்டுவது, அலங்கரிப்பது, தூங்க வைப்பது எல்லாம் ஆயாதான்...



மாதவனுக்கு நன்றாக நினைவிருக்கிறது...

சனிக்கிழமை ஆனால் வெற்றிலே, மஞ்சள் போட்டுக் காய்ச்சிய எண்ணெய்க் கிண்ணத்தைக் கையில் எடுத்துக் கொண்டு, 'என் ராசா இல்ல, என் தங்கம் இல்ல, என் கண்ணு இல்ல' என்று ஆயா பின்னால் வர, இவன் தோட்டத்து மரங்களைச் சுற்றிச் சுற்றி ஓடி, அவள் பிடிக்கு அகப்படாமல் டபாய்ப்பான்.

பட்டம் வாங்க நாலணா, அடுத்த வார அம்மன் கோவில் திருவிழாவில் பஞ்சு மிட்டாய், தீபாவளிக்கு ஸில்க் ஷர்ட் என்று வாக்குறுதிகள் ஏகமாய்ப் பெற்று, ஒரு வழியாய் அவள் இஷ்டப்படி எண்ணெய் தேய்த்துக் குளித்து முடிப்பதற்குள் வீடு இரண்டு பட்டுப் போகும்.

ஆயா ராமாயண, மகாபாரதங்களை நீள நீளமாய், சுவாரஸ்யமாய், கூறிச் சோறு ஊட்டுவாள். ராம, லக்ஷ்மண, பரத, சத்ருக்னர்களின் வீர தீரப் பிரதாபங்களை உணர்ச்சி பொங்க அவள் விவரிக்கையில், நேரில் பார்க்கிற துடிப்பு உண்டாகி, மாதவனுக்குக் கண்கள் கலங்கிவிடும்...

ராத்திரி ஆனால் படுக்கை ஆயாவுக்குப் பக்கத்தில்தான். விரித்த பாயில் படுத்து அவள் இடுப்பில் குறுக்காக ஒரு காலைப் போட்டுக் கொள்வான். 'கதை சொல்லு ஆயா' என்று கேட்டு, அவள் ராஜா கதை சொல்ல ஆரம்பித்ததும் இவன் மனசும் கற்பனையில் இறங்கிவிடும்.

பெரிய மண்டபம்....

மந்திரிப் பிரதானிகள் நிறைந்த கொலு மண்டபம்...

நவரத்தினங்கள் பதித்த கிரீடம், முத்துக் குண்டலங்கள் ஜொலிக்க...

''ராஜாதிராஜ, வீராதிவீர, பராக்ரம மாதவன் ராஜா பராக்...''

''யாரங்கே, மன்னர் வந்துவிட்டார், நாட்டியம் ஆரம்பமாகட்டும்...''

ஆயாவின் செம்மிப் போன குரல் காதில் விழுந்தபடியே இருக்க உறக்கத்தில் ஆழ்ந்து போன நாட்கள் ஏராளம்...

காலையில் எழுந்ததும் உள்ளங்கைகளைத் தேய்த்து, கண்களில் ஒற்றி, பிறகு விழிகளைத் திறக்கும் பழக்கம் அப்போது ஆயா செய்வதைப் பார்த்து இவனும் செய்யத் தொடங்கிய போது உண்டானதுதான்...

''வலது, இடது உள்ளங்கையிலே லட்சுமியும், சரஸ்வதியும் இருக்காங்க ராஜா... அதனால்தான் கண் விழிச்சதும் உள்ளங்கைகளைப் பார்க்கணும்னு பெரியவங்க ஒரு பழக்கத்தை வச்சிருந்தாங்க... பொழுது நல்லபடியாப்போகணும்னு வேண்டிக்கிட்டு, உள்ளங்கையைப் பார்த்தோம்னா, நாள் பூரா லட்சுமி, சரஸ்வதியோட கடாட்சம் இருக்கும்னு சொல்வாங்க...''

லட்சுமி, சரஸ்வதியின் அருள் கிட்டியதோ, இல்லையோ, ஆயா சொல்லித் தந்து செய்ய ஆரம்பித்தது, தொட்டில் பழக்கம் சுடுகாடு வரைக்கும் என்கிற பழமொழிக்குச் சாட்சியாய் இன்றைக்கும் இருந்து கொண்டுதான் இருக்கிறது!

மாதவன் பெரிசாய்க் கொட்டாவி விட்டபடி எழுந்தான்.

இரவு மேஜைமேல் கழற்றி வைத்திருந்த கைக்கடிகாரத்தை எடுத்துப் பார்த்தான்.

ஆறேகால்......

ப்ச்... எட்டு வரைக்கும் தூங்கினால் கூடத் தட்டிக் கேட்க ஆள் இல்லை — ஆனாலும் பாழும் உறக்கம் வந்தால்தானே?

சுற்றுப்புறச் சத்தங்கள் ஒருபக்கம் என்றால், கிராமத்தில் ஆயாவிடம் வளர்ந்ததில் ஆறுமணிக்கெல்லாம் விழிப்பு மண்டையைத் தட்டி உட்கார வைத்து விடுகிறதே, அதை என்ன செய்ய?

''பொழுது விடிஞ்சு தூங்கினா, வீட்டுல தரித்திரம்தான் தாண்டவமாடும்... எந்திரி



''எல்லாரும் லதாவின் கணவர் சிகரெட் பிடிப்பார்ன்னு பேசிக்கிறாங் களே!''

''நெருப்பில்லாம புகையாது!''

— ராதா வாசுதேவன்

ராஜா... மொகத்தைக் கழுவிக்கிட்டு, படிக்க உட்காரு... என் தங்கமில்லே...''

ஒரு நாளைக்கு நூறு தரமாவது 'என் தங்கமில்ல' 'என் செல்லமில்ல' என்று ஆயாவுக்கு அவனைக் கொஞ்ச வேண்டும்... சினேகிதர்கள் எதிரில் சீராடினால் அவர்கள் 'என்னடா பொட்டைப் பிள்ளையாட்டம் இப்படிக் கொஞ்சறாங்க?' என்று கேலி பண்ணுவார்கள் என்பதால், நண்பர்கள் கூட இருக்கையில் ஆயாவைச் சந்திப்பதையே அவன் தவிர்க்கப் பார்ப்பான்.

மீறிப்போய் ''என்ன ஆயா நீ — என் ஃபிரெண்ட்ஸ் நடுவுல செல்லம் கொஞ்சாதேன்னு சொன்னாக் காதுல வாங்க மாட்டேன்றியே...?'' என்று கத்திய நாட்களும் உண்டுதான். ஆனால், எதற்கும் ஆயா மசிய மாட்டாள். ''போக்கத்தவனுக! கேலி காட்டறாங்கங்கறதுக்காக என் பேரனை நான் கொஞ்சாம இருக்க முடியுமா? என் பேரன் எனக்கு ஒஸ்தி...'' என்று சிரித்துக்கொண்டே பதில் கூறுவாள்.

ஆயா இருந்த வரைக்கும் அதே சீராடல் தான்... அப்புறம், இவன் எட்டாவது படிக்கையில், ஒருநாள் திடுமென நினைத்த நினைப்பில்லாமல் அவள் போய்ச் சேர்ந்தாள். பெரிசாக ஒண்ணும் இல்லை. வெறும் வயிற்றுப் போக்கு... இரண்டு நாட்களாகவே இருந்திருக்கிறது. ஆயா வாயைத் திறந்து ஒருத்தரிடமும் ஒன்றும் சொல்லவில்லை. மூன்றாம் நாள் கால், கை வலிப்பு வந்த மாதிரி இழுக்க ஆரம்பித்ததும், அள்ளிப் போட்டுக் கொண்டு ஆஸ்பத்திரிக்கு ஓடினார்கள். டீஹைட்ரேஷனாம்! உடம்பில் உள்ள தண்ணீர் குறைந்துவிட்டதாம். ஸலைன் ஏற்றிக் கொண்டிருக்கையிலேயே, தப்பின நினைவு திரும்பாமலேயே சாயங்காலம் செத்துப் போனாள்.

ஆயாவின் மறைவுக்குப் பின் பள்ளிப் படிப்பை முடிக்கும் வரை மாதவன் பெற்றவர்களோடு தங்கிப் படித்தான். பின்னர் அப்பா ஊர் ஊராக மாறும் புது வேலையில் சேர்ந்ததும் பட்டினத்துக்கு வந்து ஹாஸ்டலில் தங்கிப் படிக்க ஆரம்பித்தான்.

சின்ன வயசு முழுதும் ஆயாவிடம் வளர்ந்துவிட்டதாலோ என்னவோ, ஒற்றைப் பிள்ளையாக இருந்தும் மாதவனுக்கு, அப்பா, அம்மாவிடம் அத்தனை ஒட்டுதல் கிடையாது. லீவுக்கு லீவு அப்பா எந்த ஊரில் இருக்கிறாரோ அங்கு போவான்... ஒன்றோ, இரண்டோ மாதங்கள் தங்குவான். அதிகம் எதிலும் பட்டுக் கொள்ளாமல், ஒரு வித விட்டேத்தியான குணத்தோடு இருந்து விட்டு, லீவு முடிந்ததும் புறப்பட்டு ஹாஸ்டலுக்கு வந்துவிடுவான்.

சுபாவத்திலேயே மாதவன் அத்தனை கலகலப்புப்பேர்வழிஇல்லைதான். 'ரிஸர்வ்ட் டைப்' என்று முத்திரை குத்தும் பிரிவு...

காகம் ஒன்று ஜன்னல் கதவில் வந்தமர்ந்து கட்டைத் தொண்டையில் 'க்கா...க' என்று கத்தியது.

பிரஷ்ஷில் பேஸ்டை நீட்டி, வாயில் வைத்துத் தேய்த்தபடி ஜன்னலருகில் வந்து அவன் நின்றதும், காகம் பறந்து போயிற்று.

கீரைக் கட்டுக்களைக் கூடையில் சுமந்த படி செல்லும்பெண்; யார்வீட்டுத்தோட்டத்திலிருந்தோ திருட்டுத்தனமாய்ப் பறித்த செம்பருத்திப் பூக்களுடன் போகும் முதியவர்; சைக்கிளில் பேப்பர்களைச் சுமந்து கொண்டு வீடு வீடாக விசிறிவிட்டு ஓடும் பையன்; நாலைந்து எருமைமாடுகள்; வைக்கோல் திணித்த எருமைக் கன்று, பொட்டு கூடை, கால் கயிறு, குவளை சகிதம் ட்ரு... ட்ரு... என்று சத்தம் போட்டுக் கொண்டே பின்னால் செல்லும் பால் காரர், மூனாவது வீட்டு வாசலில் குனிந்து கோலம் போடும் இளசு...

இளசு மேல் விழுந்த பார்வை ஒரு சில கணங்களுக்கு வேறு எதன்மேலும் தாவாமல் நிலைத்து நின்றது.

குனிந்து கோலம் போடுபவளை மாதவனுக்குத் தெரியும்தான். அவள் பேர் கோகிலா... வயசு பதினாறோ, பதினேழோ ஆகிறது... பள்ளிப் படிப்பை முடித்து விட்டு, டைப்பிங், ஷார்ட் ஹாண்ட் கற்றுக் கொண்டிருக்கிறாள்.

நிறையப் பேசுவாள், பேச ஆரம்பித்தால் ஓய மாட்டாள். வாயாடி என்று ஒர்க் ஷாப்பில் வேலை பார்க்கும் சிவானந்தம் சொல்லி மாதவன் கேட்டிருக்கிறான்.

கோகிலாவுக்கும், சிவானந்தத்துக்கும் இடையில் ஒரு 'இது' இருக்கிற மாதிரி தான் கொஞ்ச நாட்களாகவே மாதவனுக்குப் படுகிறது...

அந்தப் பார்வை, வேண்டாத சிரிப்பு... அவற்றுக்கு அர்த்தம்தான் என்ன?

நிச்சயம் ஏதோ சமாசாரம்தான்...

கோலம் போட்டு நிமிர்ந்த கோகிலா ஒர்க்ஷாப் பக்கம் திரும்பி ஊடுருவும் பார்வையினால் தேட, 'பார், பார், சிவானந்தத்தைத் தேடுகிறாள், பார்' என்று மாதவனின் மனசு குரல் கொடுத்தது...

கோகிலா திரும்பி வீட்டுக்குள் போய் விட்டாள்.

இப்போது மாதவனின் கவனம் தெருவோடு போன ஆட்டோவில், அதனுள் பயணித்த பெண்மேல் சென்றது.

# சிறு கைத்தொழில் செய்ய விரும்புவோர் கவனிக்க!

எங்களிடம் பத்தி, பல்பொடி, முகப்பவுடர், சோப் பவுடர், சொட்டு நீலம், கற்பூரம், சோப் ஆயில் ஷாம்பு, ஒயிட் பினுயில், ஸ்னோ, சாந்து, தலைவலி தைலம், இங்க், பார் சோப், கொசுவத்தி முதலியவை செய்வதற்கு செய்முறை விளக்கமும், பொருளும், மொத்தமாகவும் சில்லரையாகவும் கிடைக்கும். சிறு கைத்தொழில் செய்ய விரும்புவோர் அணுகவும்

**ஜோக்கர் பெர்பியுமெரி கோ**
23, நைனியப்ப நாயக்கன் தெரு (முதல் மாடி)
சென்னை - 3. போன் : 564601; 519794.

★ விபரங்களுக்கு ஒரு ரூபாய் ஸ்டாம்பு அனுப்பவும்.

Whenever you Smell Fragrance

JOKER

Think of us

**JOKER PERFUMERY CO.**
23, NYNIAPPA NAICK ST.,
MADRAS-3.



**BISON**
BRIEF & VESTS

ஆடவருக்கென உயர் ரக எகிப்திய
பருத்தி நூலினால்
தயாரிக்கப்பட்டவை.





Chari.

பைஸன் பனியன்கள்/ ஜட்டிகள் டயாஞ் ப்ரிப்
ட்ரைமி ப்ரிப் கூல்டெக்ஸ் பனியன்கள் பார் யூ
பெண்கள் பேண்டிஸ்

பைஸன் நிட்டிங் கோ
திருப்பூர் 638 602

நடுத்தர வயசு. நல்ல சிவப்பு.

ஆட்டோ வேகத்தைக் குறைத்து, லாட்ஜைத் தாண்டுவதற்கு எடுத்துக் கொண்ட நொடிகள் கையில்லாத ரவிக்கையும், காற்றில் அலைந்த செம்பட்டை முடியையும் பார்க்கப் போதுமானதாகவே இருந்தது.

கட்டாயம் வடக்கத்திய பெண்மணி தான்...

வாழைத் தண்டு போல கை இருப்பவர்கள் ஸ்லீவ் லெஸ் போட்டால், தனி அழகுதான்...

அது என்னமோ தெரியவில்லை, தலைமுடியைக் குட்டையாக வெட்டி, கைஇல்லாத ரவிக்கை அணிந்து, மென்மையாகச் சிரிக்கும் பெண்களை நினைத்து விட்டால், நெஞ்சுக்குள் வண்ணத்துப் பூச்சிகள் பறக்கத்தான் செய்கின்றன.

'வயசாயிக்கிட்டே போகுதேடா மாது, காலாகாலத்துல உனக்குன்னு ஒருத்தி வந்தாதானே எங்க பொறுப்பை நாங்க செஞ்சு முடிச்ச நிம்மதி எங்களுக்கும் வரும்? எம். ஏ. படிக்கணும்னு சொன்னே, பாங்க் வேலை வேணும்னு சொன்னே... ரெண்டும் நடந்திட்டது. இனியும் தனிக்கட்டையா லாட்ஜில தங்கிக்கிட்டு, வெந்ததும் வேவாததுமா ஹோட்டல் சோத்தைத் தின்னு, கஷ்டப் படறது எதுக்கப்பா?... ம்...னு சொல்லு... நாளைக்கே நல்ல பொண்ணாப் பார்த்து முடிச்சுடறோம்...'' என்று ஊருக்குப் போகும் போதெல்லாம் அம்மா புலம்பவே செய்கிறாள்.

அம்மா கூறும் 'நல்ல பெண்ணை' — முகத்தில் மஞ்சளும், எண்ணெய்த் தலையும், பூவுமாய் — நினைத்தாலே எரிச்சல்தானே நமநமவென்று படர்கிறது!

''சார்...''

மாதவன் குரல் வந்த திசையில் பார்வையைத் திருப்பினான்.

துரை......

அந்த லாட்ஜில் தங்கியிருக்கும் இவனைப் போன்றவர்களின் தேவைகளைக் கவனிக்கும் எடுபிடி ஆள்...

கீழே நின்றிருந்தவன் மாதவனைப் பார்த்துக் கத்தினான்.

''எழுந்துட்டீங்களா? டீயும் பேப்பரும் கொண்டாரவா?''

மாதவன் சரி என்று தலை அசைத்துவிட்டு, அறைக் கதவைத் திறந்து கொண்டு வெளியில் வந்தான்.

அந்த லாட்ஜில், தளத்துக்கு எட்டு அறைகள் வீதம் மொத்தம் பதினாறு அறைகள். இவன் மாடி அறையில்...

வராந்தாவின் கோடியில் எட்டு அறைகளுக்கும் பொதுவாக இரண்டு கழிவறைகள், குளியலறைகள் உண்டு.

மாதவன் பல்விளக்கி, முகம் கழுவிக் கொண்டு, மீண்டும் தன் அறைக்கு வந்த போது துரை டீ டம்ளர், பேப்பருடன் காத்திருந்தான்.

டீ டம்ளரைக் கையில் கொடுத்த துரை கேட்டான்.

''முத்துவேல் சாரை ஆஸ்பத்திரியிலே சேர்த்திருக்காங்க தெரியுமா சார்?''

உதட்டை டீ சுட, அவசரமாய் டம்ளரை மாதவன் தழைத்தான்.

''முத்துவேலையா? ஆஸ்பத்திரியிலயா? எதுக்கு?''

''ஆபீஸ்ல நேத்து திடும்னு ரொம்ப வயித்த வலிக்க ஆரம்பிச்சதாம். டாக்டராண்ட கொண்டு போனதும் ஆஸ்பத்திரில சேர்த்து உடனே ஆபரேஷன் பண்ணணும்னு சொல்லிட்டாராம்...''

அப்பெண்டிசைடிஸ்...?

முத்துவேல் அந்த லாட்ஜின் கீழ்த்தளத்தில் இருப்பவன். பல்லாவரத்தில் இருக்கும் இங்கிலீஷ் எலெக்ட்ரிக் கம்பெனியில் வேலை பார்ப்பவன். சாயங்காலம் பாங்கில் வேலை முடிந்ததும் போய்ப் பார்க்க வேண்டும்.

''எந்த ஆஸ்பத்திரி துரை?''

சொன்னான்.

''நீங்க நேத்து வர ரொம்ப லேட்டாயிருச்சே... ஸினிமாவா சார்?''

''ம்...''

''இங்கிலீஷ் படமா?''

''இல்ல, ஹிந்தி... மும்தாஜ் நடிச்சது...''

டம்ளரோடு துரை போனதும், மும்தாஜின் சற்றே தூக்கின மூக்கு, ஸ்லீவ்லெஸ் அணிந்த கைகளை நினைத்தபடியே மாதவன் குளித்தான்.

ஈரத்தலையை வாரி, பாண்ட் ஷர்ட்டை அணிந்து, கண்ணாடியில் இப்படியும், அப்படியும் திரும்பிப் பார்த்தபோது பிரதிபலித்த பிம்பம் திருப்தியைத் தந்தது.

இரவு பார்த்துவிட்டு மேஜைமேல் வைத்த ஃபிலிம்ஃபேர் பத்திரிகை கண்களில் பட, எடுத்தான். அட்டையில் ஷர்மிலா டாகூர். திருமணமாகி, குழந்தை பிறந்தும் என்னமாய் இருக்கிறாள்! உள்ளே ஹேமமாலினியின் வண்ணப்படம்!

அட! மனைவியாக வருபவள் முழுக்க முழுக்க ஹேமமாலினி, மும்தாஜ் மாதிரி அமையா விட்டாலும், அவள் கவர்ச்சியில் கால் பங்காவது இவனுக்கு இருக்க வேண்டும் என்று எதிர்பார்ப்பது தவறா என்ன?

மாதவன் குனிந்து மீண்டும் கண்ணாடியில் தன்னைப் பார்த்துக் கொண்டான்.

எனக்கு என்ன குறை?

எனக்கு மனைவியாக வருபவள் இன்னின்ன தகுதிகளோடு இருக்க வேண்டும் என்று ஆசைப்படுவது நியாயமான எண்ணம்தானே?

கண்ணாடிக்கருகில், பிளாஸ்டிக் டப்பாவில் வைத்திருந்த பழனி விபூதியை ஆள்காட்டி விரலால் தொட்டு நெற்றியில் பூசி — இதுவும் ஆயா உண்டாக்கிய பழக்கம்தான் — 'பாழும் நெத்தியா இருக்கக் கூடாது ராஜா' — கதவைப் பூட்டிக் கொண்டு கிளம்பின நிமிஷத்தில் சென்ற வாரம் உறவினர் வீட்டுத் திருமணத்துக்காகச் சென்னைக்கு வந்திருந்த அம்மா —

''வரவர கல்யாணம், கார்த்தின்னு வந்து போகக் கூட கூச்சமா இருக்கு மாது...'' பிள்ளைக்கு இருபத்தியாறு வயசாகிவிட்டது.



கைநிறையச் சம்பாதிக்கிறான் — அம்மாவா லட்சணமா உன் பொறுப்பைச் செய்யாம சும்மா இருக்கியே'ன்னு கண்டவங்களும் ஏசறாங்கப்பா'' என்று பொருமியது மறுபடியும் ஞாபகத்துக்கு வந்தது.

''ஏன் கல்யாணம் வேணாங்கறே... நாகப்பட்டினம் வேலாயுதம் மாமாவைத் தெரியுமில்லை? போன மாசம் கூடக் காஞ்சிபுரத்துக்கு வந்தாரு — 'கையில இருபதாயிரம் கொடுக்கறேன்; முப்பது பவுன் போடறேன் — கனகாவை உன் பையனுக்குக் கட்டி வச்சிடுன்னு சொல்றாரு... கனகா' பத்தாவது படிச்சிருக்கா... அடக்க ஒடுக்க மானவ.. நெருக்கிக் கேட்டா, வேலாயுதம் இன்னும் பத்து, பதினைஞ்சு கூடச் சேர்த்தே கொடுப்பார்தான்... நாலையும் யோசனை பண்ணிப் பார்க்கறப்போ அந்தப் பொண்ணுக்கு ஒரு குறையும் இருக்கிறதா எனக்குப் படலை... நீ என்ன சொல்றே?''

என்ன சொல்வது?

என்ன சொல்லிப் புரிய வைப்பது?

எனக்கு இருபதாயிரம் பணமும், முப்பது பவுனும் பெரிசில்லை. ஆனால் மும்தாஜ் மாதிரி நாகரிகமாக உடை அணிய, கவர்ச்சியாய்ச் சிரிக்க அவளுக்குத் தெரியுமா? கனகா அப்படி இல்லாதது ஒன்றுதான் குறை... வேறே எதுவும் இல்லை என்று எப்படிக் கூறுவது?

சொன்னால்தான் அம்மாவுக்குப் புரியுமா?

தெருவில் இறங்கி நடந்தான்.

அடுத்த தெருவில் இருந்த 'மீனாட்சி சைவ உணவு விடுதி'யில் நுழைந்து வழக்கமாய் உட்காரும் இடத்தில் அமர்ந்து, அன்றாடம் சாப்பிடுவது போல் இட்லி, பூரி சாப்பிட்டான்.

கணக்கில் குறித்துக் கொள்ளச் சொல்லி விட்டு வெளியில் வந்து, பெட்டிக் கடையில் சிகரெட் ஒன்றை வாங்கிப் பற்ற வைத்தான்.

எட்டு முப்பத்தைந்து.

மெதுவாக நடந்து, எட்டு ஐம்பது பஸ்ஸைப் பிடித்தால் ஒன்பதே முக்காலுக்குள் பாங்க் வாசலில் இருக்கலாம்.

சிகரெட்டை வாயில் வைத்து, புகையை உள்ளுக்கு இழுத்து நடந்தான். தெரு முனையில் இருந்த சர்ச்சை நெருங்கிய போது உள்ளிருந்து அந்தச் சிறு கும்பல் வெளியே வந்தது.

கூட்டத்தில் அவள் தனித்துத் தெரிந்தாள்.

நல்ல உயரம். சிவப்பு என்று கூற முடியா விட்டாலும், மாநிறத்துக்கும் மேற்பட்ட நிறம். ஷாம்பு போட்டுக் குளித்திருக்க வேண்டும். நெற்றியில் முடி சற்று அலட்சியமாய் விளையாடியது. வெள்ளைப் புடைவையில் ஸ்லீவ்லெஸ் ரவிக்கையில் ஓர் இளவரசி மாதிரி தோன்றியவள் சட்டென்று திரும்பியதில் இருவர் பார்வையும் சந்தித்த போது, தங்கச் சங்கிலியில் அவள் நெஞ்சுக்கு மேலாகத் தொங்கிக் கொண்டிருந்த சிலுவை காலை வெயிலில் பளபளத்தது.

(தொடரும்)



CHAITRA-B-BLS-678 TAM

# எண்ணெயில் தான் இருக்கிறது நம் எதிர்காலம்!

இன்றைய அறிவியல் முன்னேற்றத்தில் பெண்கள் உதட்டுக்குப் பூசுகிற சாயத்திலிருந்து, உடுத்திக் கொள்கிற செயற்கை இழைத் துணிகள், டிடெர்ஜெண்ட் சோப்புகள், பாலிதீன் மற்றும் பிளாஸ்டிக் பொருள்கள், உரம், பூச்சிக் கொல்லி மருந்துகள் வரை ஏன், மோட்டார்களுக்கான உதிரிப் பாகங்கள் செய்யும் தொழில் வரை பல தொழில்கள் கச்சா எண்ணெயைத்தான் மூலப் பொருளாகக் கொண்டிருக்கின்றன. அதனால்தான் கச்சா எண்ணெயைக் கறுப்புத் தங்கம் என்றும் அது கண்டுபிடிக்கப்பட்ட நாளே உலக நாகரிகத்தின் மிகப் பெரிய திருப்பு முனையான நாள் என்றும் சொல்கிறார்கள்.

உலகப் பொருளாதாரத்தின் பெரும் பகுதியை நிர்ணயிப்பதும் இந்தக் கச்சா எண்ணெய்தான். அதனால்தான் இந்தியாவில், அங்க்லேசுவர் என்னுமிடத்தில் தோண்டப்பட்ட முதல் கச்சா எண்ணெய்க் கிணற்றுக்கு வஸுந்தாரா (வஸுந்தாரா என்றால் செல்வத்தின் ஓடை என்று பொருள்) என்று பெயரிட்டார் பண்டித ஜவாஹர்லால் நேரு. இப்படிப்பட்டதொரு செல்வத்தின் ஓடையான கச்சா எண்ணெய் இருக்கும் இடங்களை இந்தியாவில் தேடிக் கண்டுபிடிக்கும் பணியில் மிகத் தீவிரமாகஈடுபட்டிருப்பதுதான் எண்ணெய் மற்றும் எரிவாயுக் கமிஷன் (ஓ. என். ஜி. சி.)

கச்சா எண்ணெயின் ஒரு பகுதிப் பொருளான தார் பற்றிய குறிப்பு பைபிளிலேயே காணப்படுகிறது என்றாலும், உலகின் முதல் எண்ணெய்க் கிணறு தோண்டப்பட்டது 1859 இல்தான். இது தோண்டப்பட்டது அமெரிக்காவிலுள்ள டைட்டஸ்வில் என்னுமிடத்தில். தோண்டியவர் கர்னல் ட்ரேக் என்பவர். அதன் பிறகுதான் மற்ற நாடுகளிலும் எண்ணெய் வளங்களைக் கண்டுபிடிக்கும் பணி தீவிரமாக்கப்பட்டது. அதற்கான புதிய புதிய ஆராய்ச்சிகளும் உபகரணங்களும் தோன்றின.

இந்தியாவிலுள்ள அஸ்ஸாம் பகுதியில் எண்ணெய்வளம்இருப்பதுகடந்த1867 ஆம் ஆண்டே கண்டுபிடிக்கப்பட்டு விட்டது என்றாலும், அதைத் தோண்டியெடுக்கும் பணி விரைவுபடுத்தப்பட்டது 1956 இல்தான். ஆம்! அப்போதுதான் ஓ. என். ஜி. சி. நிறுவப்பட்டது. இதன் பணியால்தான் பாம்பே ஹையில் எண்ணெய் வளம் இருப்பதும் க ண் டு பி டி க் க ப் ப ட் டு வெளிக் கொணரப்பட்டது. ஓ. என். ஜி. சி. யின் மும்முரமான தேடுதலால்தான், ஆண்டொன்றுக்கு நம் நாட்டுக்குத் தேவைப்படும் நாற்பத்தைந்து மில்லியன் டன் கச்சா எண்ணெயில் முப்பது மில்லியன் டன்னை நம் நாட்டிலேயே பெற்றுக் கொண்டிருக்கிறோம். மிச்சமுள்ள தேவைகளையும் நாமே நிறைவேற்றிக் கொள்ள வேண்டும் என்ற உந்துதலால்தான் காவிரி மற்றும் கோதா



• நீலகண்டன்: இணைந்து விடலாம்!





• நரிமணத்திலிருந்து சென்னைக்கு வரும் எண்ணெய் லாரி...

வரிப்படுகைகளிலும் அந்தமான் நிக்கோபார் பகுதிகளிலும் எண்ணெய் தேடும் பணி நடந்து கொண்டிருக்கிறது.

**கா**விரிப் படுகையிலும் சரி, பாண்டிச்சேரி மற்றும் தமிழ்நாட்டின் கடலோரப் பகுதிகளிலும் சரி, எண்ணெய் தேடும் பணி கடந்த '57 ஆம் ஆண்டிலிருந்தே துவங்கப்பட்டு விட்டது என்றாலும் கடந்த 63 — 64 ஆம் ஆண்டுகளில்தான் பட்டுக்கோட்டையிலும் தஞ்சை — காரைக்கால் பகுதிகளிலும் பூமிக்கடியில் ஹைட்ரோ கார்பன் (ஹைட்ரஜனும் கார்பனும் சேர்ந்ததுதான் கச்சா எண்ணெய் என்பது. வாயு நிலையில் உள்ளதுதான் சமையல் எரிவாயுவாகிறது.) இருப்பது தெரிய வந்தது. பிறகு பரங்கிப்பேட்டைக் கடற்பகுதியிலும் பாக் ஜலசந்தியிலும் எரிவாயுவும் எண்ணெயும் இருப்பது கண்டுபிடிக்கப்பட்டது. இறுதியில் கடந்த '85 இல் மார்ச் மாதம், நாகப்பட்டினத்திற்கும் காரைக்காலுக்கும் இடையிலுள்ள நரிமணம் என்னும் இடத்தில் ஆழ்குழாய்க் கிணறு ஒன்று தோண்டப்பட்டு, அதில் பெருமளவு கச்சா எண்ணெய் இருப்பது கண்டுபிடிக்கப்பட்டது. இப்போது அக்



* துரப்பணக் கருவிகளைக் கொண்டு எண்ணெய்க் கிணறு தோண்டப்படுகிறது.

கிணற்றிலிருந்து நாளொன்றுக்கு முப்பத்தைந்து கிலோ லிட்டர் வீதம் கச்சா எண்ணெய் எடுக்கப்பட்டுச் சென்னையிலுள்ள சுத்திகரிப்பு ஆலைக்கு அனுப்பப்பட்டு வருகிறது.

எல்லாம் சரி. பூமிக்கு அடியில் பல ஆயிரக்கணக்கான அடி ஆழத்தில் புதைந்து கிடக்கும் இந்தக் கச்சா எண்ணெய் உருவான கதை என்ன? அதை எப்படிக் கண்டுபிடிக்கிறார்கள் ஓ. என். ஜி. சி. வல்லுனர்கள்? உதாரணத்திற்குக் காவிரிப் படுகையை



* கிறிஸ்துமஸ் மரம் என்று சொல்லப்படும் எண்ணெய்க் கிணற்றின் தரை மேலுள்ள, வால்வுகளைக் கொண்ட உபகரணம். கடுமையான அழுத்தத்தைத் தாங்க வல்ல இதுதான் வாயுவையும், எண்ணெயையும் தனித்தனியே பிரித்து அனுப்புகிறது.

மட்டும் எடுத்துக் கொண்டு பார்ப்போம்.

**ப**ல லட்சக்கணக்கான ஆண்டுகளுக்கு முன்பு, இப்போதுள்ள வங்கக் கடல் திருச்சி மாவட்டத்திலுள்ள அரியலூர் வரை இருந்தது! காலப் போக்கில் அக்கடல் இயற்கையின் மாற்றத்தால் உள்வாங்கியது. அப்போது அந்த நிலப்பகுதியில் கும்பகோணம், சீர்காழி மலைத் தொடர்கள், கந்தர்வக் கோட்டை, பட்டுக்கோட்டை, மன்னார்குடி, காரைக்கால் மலைத்தொடர்கள் ஆகியவை தெரிந்தன. அதுபோலவே அரியலூர், பாண்டிச்சேரி பள்ளத்தாக்கு, தரங்கம்பாடி பள்ளத்தாக்கு, தஞ்சைப் பள்ளத்தாக்கு, நாகப்பட்டினம் பள்ளத்தாக்கு ஆகிய பள்ளத்தாக்குகளும் இருந்தன. அவையெல்லாம் ஆற்றால் அல்லது ஆறுகளால் (இப்போதைய காவிரிக்கு அப்போது என்ன பெயரோ யார் கண்டது!)

• நன்னிலம் பகுதியில் எண்ணெய் ஆய்வு: லாரிக்குள் இருக்கும் எலக்ட்ரானிக் கருவிகள் பூமியில் ஏற்படுத்தப்படும் ஒலி அலைகளைப் பதிவு செய்கின்றன



அடித்து வரப்பட்ட வண்டல்களால் மூடி மறைக்கப்பட்டன. மேலும் மேலும் வண்டல்கள் வந்து கொண்டே இருந்தன.

அந்த வண்டல்கள் நுண்ணுயிர்களின் வளர்ச்சிக்கு மிகவும் ஏற்றவை என்பதால் அங்கு நுண்ணுயிர்கள் தோன்றின. அவை ஒன்று இரண்டாக, இரண்டு நான்காகப் பல்கிப் பெருகி அவையும் வண்டலோடு படிந்தன. கடைசியில் அந்த வண்டல்களே அழுத்தப்பட்டுப் படிகப் பாறைகளாக மாறின. மறுபடியும் அவை புதையுண்டன. புதையுண்டதால் ஏற்பட்ட அழுத்தம் மற்றும் வெப்பநிலை காரணமாக அந்த நுண்ணுயிர்கள் சமைக்கப்பட்டு — அதாவது ரசாயன மாற்றமடைந்து — எண்ணெயாக மாறின.

படிகப்பாறை என்பது சிறுசிறு ஓட்டைகளைக் கொண்டது. அந்த மிக நுண்ணிய ஓட்டைகளெல்லாம் ஒன்றோடு ஒன்று இணைக்கப்பட்ட ஓட்டைகள் என்பதால், அதற்குள் உருவான எண்ணெய், அந்த மிக நுண்ணிய ஓட்டைகள் வழியாக மேடான இடத்தை நோக்கி நகர்ந்து கொண்டே இருந்தது. (பூமிக்கு மேல் உள்ள திரவம் எவ்விதத் தடையும் இல்லாத போது பள்ளத்தை நோக்கியே நகர்வது போல், பூமிக்கு அடியில் உள்ள திரவம் மேடான இடத்தை நோக்கியே நகரும்) அப்படி நகர்ந்த போது, படிகப் பாறைகளிலுள்ள ஓட்டைகள் அடைபட்டுப் போன இடங்களில் நகர முடியாமல் அங்கங்கேயே தங்கித் தேங்கிவிட்டது. அவைதான் எண்ணெய்க் குட்டைகள் என்றழைக்கப்படுகின்றன. அந்தக் குட்டைகளைக் கண்டுபிடிப்பதுதான் ஓ. என். ஜி. சி. யின் வேலை!

இந்த எண்ணெய்க் குட்டைகளை எப்படிக் கண்டுபிடிப்பது? சுலபமான வழி படிகப்பாறைகளிலுள்ள மேடான இடங்களைக் கண்டுபிடிப்பதுதான். (மேடான இடங்கள் என்பது ஆறு அல்லது ஏழாயிரம் அடி ஆழமாகும்!) அதற்கு ஒலியின் எதிரொலிகளைப் பயன்படுத்துகிறார்கள். அது திரும்பி வரும் நேரத்தைக் கணக்கிட்டுக் கண்டுபிடிக்கிறார்கள்.

இதற்காக, எண்ணெய் இருக்கும் என்று மண்ணியல் ஆராய்ச்சியில் முடிவான இடங்களில், ஆங்காங்கே சுமார் நூறு அடி ஆழம் அளவுக்குப் பல துளைகளை ஏற்படுத்தி, ஒவ்வொன்றிலும் வெடிகளைச் செருகி வெடிக்கிறார்கள். அப்போது ஏற்படும் நில அதிர்வலைகளைப் பதிவு செய்து, அதன் மூலம் மேடான இடங்களைக் கண்டுபிடிக்கிறார்கள்...

எண்ணெய்க் குட்டைகள் இருக்குமிடங்கள் ஓரளவுக்கு உறுதியாகத் தெரிய வந்ததும், அந்த இடங்களிலெல்லாம் ஆயிரக்கணக்கான அடி ஆழத்திற்கு ஆழ்குழாய்க் கிணறுகளைத் தோண்டுகிறார்கள். அப்படித் தோண்டப்பட்ட கிணறுகளில் ஒன்றுதான் நரிமணம் எண்ணெய்க் கிணறு. இப்போது கொரடாச்சேரி என்னுமிடத்திலும் ஓர் ஆழ்குழாய்க் கிணறு தோண்டப்பட்டு வருகிறது. நன்னிலம் போன்ற மற்ற பகுதிகளில் ஆய்வு நடந்து கொண்டிருக்கிறது.

ஆறு விரிப் படுகையில் கிடைக்கும் கச்சா எண்ணெய்க்கு உள்ள ஒரு தனிச் சிறப்பு என்னவென்றால், இதில் சல்பர் — டை — ஆக்ஸைடு கலப்படம் சுத்தமாக இல்லவே இல்லை. அதனால் சுத்திகரிப்பின் போது சுற்றுப்புறங்களிலுள்ள காற்று மண்டலம் கெட்டு, மனித ஆரோக்கியத்துக்கும் மற்ற உயிரினங்களுக்கும் சிறிதும் பாதிப்பு இல்லை என்பதுதான்.

ஆனால், நாம் எதிர்பார்க்கிற அளவுக்கு — நமது எதிர்காலத் தேவைகளை ஈடுகட்டுகிற அளவுக்குக் காவிரிப் படுகையிலும், கோதாவரிப் படுகையிலும் எண்ணெய்க் குட்டைகள் அகப்படுமா? ''நம்பிக்கை ஒளி மிகவும் பிரகாசமாகவே தெரிகிறது!'' என்று உற்சாகத்தோடு சொல்கிறார்கள் ஓ. என். ஜி. சி. வல்லுனர்கள்.

''காவிரிப் படுகையில் ஆண்டொன்றுக்குச் சுமார் அரை மில்லியன் டன் வீதம் கிடைத்தால் கூட அந்தப் பகுதியில் ஒரு சுத்திகரிப்பு ஆலை அமைத்து ஜமாய்த்து விடலாம்,'' என்கிறார் சென்னை எண்ணெய்ச் சுத்திகரிப்பு ஆலையின் தலைவர் தீனதயாளு.

**— இளங்கோவன்**

**படங்கள்: சென்னை எண்ணெய்ச் சுத்திகரிப்பு ஆலை மற்றும் ஓ. என். ஜி. சி. நிறுவனம்.**

பரதன் அச்சகத்தில் அச்சிட்டவர் வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிட்டவர் வி. வைத்தியநாதன். ஆசிரியர்: கி. ராஜேந்திரன்.

நிர்வாகக் காரியாலயம்: ரேஸ்கோர்ஸ் சாலை, கிண்டி, சென்னை — 600 032. போன்: 4 31543, 4 34 157.

ஆசிரியர் குழு அலுவலகம்: 28, ஐந்தாவது தெரு, ஏரி வட்டம், நுங்கம்பாக்கம், சென்னை — 600 034. போன்: 4 73389.

ஆண்டுச் சந்தா — உள்நாடு: ரூ. 104/-; வெளி நாடு: கப்பல் தபால் ரூ. 280/-; விமானத் தபால் ரூ. 680/-.

ஆறு மாதச் சந்தா — உள்நாடு: ரூ. 52/-; வெளி நாடு: கப்பல் தபால் ரூ. 140/-; விமானத் தபால் ரூ. 340/-.


வண்ண வண்ணத் திருவிழாவிலே—மங்கை எண்ணமதைக் கவர்ந்திடுவாள்!
நம்நாட்டிலே பண்டிகைகளுக்கும் திருவிழாக்களுக்கும் குறைவில்லை.
அதற்கேற்ப பெண்கள் பட்டுப்புடவைகள் அணிந்து பேரெழிலுடன் விளங்கும்
வாய்ப்புகளுக்கும் குறைவில்லை.
லக்ஷ்மி சில்க் ஹவுஸ், எந்த வைபவத்திற்கும் ஏற்ற எண்ணற்ற
பட்டுப்புடவைகளின் மாபெரும் களஞ்சியம். டிசைன், வண்ணம், செழுமையும்,
எந்த வகையில் பார்த்தாலும் மனதைக் கவரும் புடவைகளின் விசாலமான
அணி வகுப்பு. இன்றும், என்றும் விஜயம் செய்வீர் லக்ஷ்மி சில்க் ஹவுஸுக்கு.
Silk House
ஞாயிற்றுக்கிழமைகளில் திறந்திருக்கும்.
லக்ஷ்மி சில்க் ஹவுஸ்
பனகல் பார்க், எதிரே, மாடியிலே தி.நகர், சென்னை 600 017.
Our Associate: லக்ஷ்மி சில்க் ஹவுஸ்
மாதுங்கா (மத்திய ரயில்வே) பம்பாய் 400 019.
market movers/LSH/1002/87 Tam

